# திருக்கயிலாயகிரி யாத்திரை



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் மயிலாப்பூர் சென்னை

இஃது
மயிலாப்பூர், ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துத் தலைவரால்
பிரசுரிக்கப்பட்டது.



(ஆறும் பதிப்பு)

VI–XLIV–7–56

[Approved by the Text Book committee for use in higher forms in R. C. No. 3/54 T. B. C. dated 14-3-1954. Vide page 120, supplement to part I B of Fort St. George Gazette dated 19-5-1954.]

விலை ரூ. 1—2—0

Printed at Amra Press (Private) Ltd., Madras-4.

# முகவுரை

"ஸ்ரீ ராமகிருஷ்ண விஜய"த்தில் தொடர்ந்து வெளி யிடப்பட்ட பதினைந்து கட்டுரைகள், ஆங்காங்கு சிறிது மாற்றியமைக்கப் பெற்று, ஈண்டு புஸ்தக ரூபமாகப் பெயர்த்துப் பிரசுரிக்கப்படுகின்றன. அத்தியாயவாரியாகப் பிரிப்பது சாத்தியப்படவில்லை யாதலால் இப் புஸ்தகத்தி லும் அக்கட்டுரைகளைப் பதினைந்து பிரிவுகளாக வைத்து அவைகளுக்கு இலக்கமிடப்பட்டிருக்கின்றன.

இயற்கையின் அழகு, யாத்திரையின் வரலாறு, நமக் குண்டாகும் அனுபவம் ஆகிய இம்மூன்று அம்சங்களும் கூடிய வரையில் விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. யாத்திரை போக முற்படுபவர், போக இயலாதவர் ஆகிய இரு தரத்தாருக்கும் இதில் கூறியுள்ள விஷயங்கள் பயன் படும். ஆனால் திருக்கயிலாயத்துக்கு யாத்திரை போக விரும்புபவர் என்னென்ன விதங்களில் தங்களை ஆயத்தப் படுத்திக் கொள்ளவேண்டும் என்பது இந்நூலில் விரி வாகச் சொல்லப்படவில்லை. அத்தகைய ஆயத்தம் அவர வர்க்கு ஏற்றபடி மாறுபடும். தென்னிந்தியாவினின்று புறப்படுபவர்கள் யாத்திரையைப் பற்றிய விவரங்களை முன்னதாகவே கேட்டுத் தெரிந்துகொள்ளாவிட்டால் மலை யின் உட்பிரதேசத்தில் பலவிதமான இடையூறுகளுக்கு ஆளாவார்கள். யாத்திரை செய்த ஒருவருடன் நேரில் கலந்து விஷயங்களைத் தெரிந்து கொள்வதே உத்தமம். தமிழ் நாட்டினின்று பலபேர் இந்த யாத்திரையை மேற் கொள்ளவேண்டும் என்ற அவாவே இப்புஸ்தகத்தைத் தமிழ் உலகுக்கு அளிக்கும்படி நம்மைத் தூண்டிற்று.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருவையாற்றினின்று திருக்கயிலாயகிரியைத் தரிசித்துத் திருவாய்மலர்ந்தருளிய தேவாரத்தின் முதல் பாடலுடன் இப்புஸ்தகம் ஆரம்பிக் கிறது. அப்பெரியார் கயிலை மலையானைப் போற்றிப் பாடிய முப்பது திருத்தாண்டகத்துடன் இது முடிவு பெறுகிறது. யாத்திரை போகின்றவர்கள் பாராயணம்

பண்ணுதற்கு இத்திருத்தாண்டகங்கள் பெரிதும் பயன் படும். அவைகளில் அடங்கியுள்ள மேலான கருத்துக்களை சிந்தையில் வைப்பதே ஒப்பற்ற சிவபூஜையாகும்.

ஆத்யாத்மிக அர்த்தப்படி மகாமேரு கிரியும் திருக் கயிலாயகிரியும் ஒன்றே. சுழுமுனை நாடியின் மத்தியில் அறிவு மயமாக அடங்கியிருக்கும் சிவ போதமே மகாமேரு. அவ்வாறே மனது எனும் தடாகத்துக்கு மானஸ சரோவரம் என்று பெயர். அதனுள் முழ்கி அதைச் சுத்திசெய்து பார்ப்பவர்க்குக் கயிலாய நாதனுகிய சதா சிவத்தின் தரிசனம் கிடைக்கும். அப்படி ஞான திருஷ்டியில் காணும் மகாமேருவும் திருக்கயிலையும் சொரூபத்தில் ஒன்றே. ஆனல் அவைகளின் அறிகுறி யாகப் பூலோகத்தில் அமைந்திருக்கும் மகாமேரு வேறு, திருக்கயிலாயம் வேறு. மகாமேரு வடதுருவத்தில் இருக் கிறது. உத்தராயணம் தக்ஷிணயணத்தை ஒட்டி அதற்குப் பகல் ஆறுமாதம் இரவு ஆறுமாதம். ஆனல் திருக் கயிலாயகிரி பரதகண்டத்துக்கு சிரசாகத் திபேத்தில் திகழ்ந்துகொண்டிருக்கிறது. சிலர் இதையே மகாமேரு என்றும் சொல்லுகின்றனர். மகாபாரதம், பாகவதம், ஸ்கந்த புராணம் போன்ற சாஸ்திரங்களிலும் இவை யிரண்டும் வர்ணிக்கப்படுகின்றன. வர்ணனை எவ்வாறு இருக்கிறது என்று ஆராய்ந்து பார்த்து, விளக்கப்படுகிற கிரி வடதுருவத்தில் இருப்பதா அல்லது திபேத்தில் இருப்பதா என்று ஊகித்துக்கொள்ளலாம்.

இப்புஸ்தகத்தில் பொறிக்கப்பட்டிருக்கும் படங்களில் சில எங்களால் தயாரிக்கப்பட்டவை. மாட்சிமை தங்கிய மைசூர் மகா ராஜா அவர்கள் திருக்கயிலாயகிரி யாத்திரை செய்தபோது அவருடைய உத்தியோகஸ்தர்களால் தயாரிக்கப்பட்டவை பல. மைசூர் அரண்மனை அதி காரிகள் அப்படங்களை நமது உபயோகத்துக்குத் தயை கூர்ந்து கொடுத்ததற்காக நம் நன்றி அவர்களுக்கு உரிய தாகின்றது.

ஸ்ரீராமகிருஷ்ண ஆஸ்ரமம்,
உதகமண்டலம்
21—8—1939.

சுவாமி சித்பவாநந்தா

# திருக் கயிலாயகிரி யாத்திரை

மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாமலையா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.

(அப்பர்)

1

பூலோகத்தில் திருக்கயிலாயகிரி என்று ஒரு ஸ்தலம் இருக்கிறது. மற்ற க்ஷேத்திரங்களுக்குப் போன்று இதற்கும் யாத்திரை போகக்கூடும் என்பது பலருக்குத் தெரியாது. முன்னாளில் பெரியார்கள் பலர் கயிலாயகிரிக்கு யாத்திரை செய்த வரலாறுகள் இருக்கின்றன. அவைகளில் முக்கியமானவை பாண்டவர்களைப் பற்றியதும் சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் பற்றியதுமாம். அப்பர் சுவாமிகள் கயிலையை நோக்கி வடதிசையாகச் சென்றார். அங்குச் சென்று இறைவனை வழுத்த வேண்டுமென்ற பேரவா அவர்க்கு உண்டாயிற்று. ஆனால் மேலும் செல்லச் சரீரம் இடம் கொடுக்கவில்லை. உடலால் ஏற்பட்ட இடைஞ்சலை எண்ணி அவர் வருந்துகையில், கயிலையின் தரிசனத்தைத் திருவையாற்றினின்றே பெறும்படி அவருக்கு அனுக்கிரகம் உண்டாயிற்று. இத்தகைய அம்மலை எங்கிருக்கிறது, அதன் சிறப்பு யாது என்பது பலருக்குத் தெரியாது.

பூர்வ காலத்தில் தீர்த்தயாத்திரை பண்ணுவது மிகக் கடினமாயிருந்தது. பிரயாண வசதிகள் அப்

போது கிடையவே கிடையா. வழியில் விபத்துகள் பல இருந்தன. காசி போன்ற இடங்களுக்குப் போய் வருவதே செயற்கரிய செய்கையாயிருந்தது. கயிலாயத்துக்குப் போவது இன்னும் எவ்வளவு கஷ்டமானது என்பது சொல்லாமலே விளங்கும். அந்நாளில் அதை நோக்கிச் சென்றவர்கள் திரும்பி வரவில்லையாதலால் கயிலாயம் போவது பரகதி யடைவதோடு ஒப்பிடப்பட்டது. அது சிவனாது உறைவிடம். சிவசாயுச்யம் என்பதும் அதுவே. அங்கு செல்பவர் சிவனோடு லயமாகி விடுகின்றனர். மரணமடைபவர் கயிலாய பதவியைப் பெற்றுவிட்ட தாகக் கருதப்படுகின்றனர்.

சிற்றம்பலம் என்பது ஒரு பாரமார்த்திக நிலை; அப்பெயர் பூண்ட ஸ்தலம் ஒன்றும் மண்ணுலகி லுள்ளது. பாரமார்த்திக உண்மையை விளக்கிக் காட்டும் முறையில் அக்கோயில் அமைக்கப் பட்டிருக்கிறது. திருக்கயிலாயமோ இயற்கையாகவே கோயில் போன்று அமைந்துள்ளது. இது இமய மலையின் வடசாரலில் மேற்குத் திபேத்தில் இருக் கிறது. இமயமலை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது. சிறிய இமயம், பெரிய இமயம், எல்லை கடந்த இமயம் என்று அப் பிரிவுகளுக்குப் பெயர். ஆங்கிலத்தில், The Lesser Himalayas, the Greater Himalayas and the Trans-Himalayas என்று அப் பிரிவுகளைச் சொல்லுவார்கள். கயிலாயம் எல்லை கடந்த இமயத்தில் இருக்கிறது. பெரிய இமயம் என்றைக்கும் உருகாத பனிக்கட்டியை உடையது. இந்தியாவுக்கு வடபுறத்தில் இயற்கை யெல்லையாக ஏற்பட்டது இதுவே. கிழக்கு மேற்கில் இது

இரண்டாயிரம் மைல் தூரமுள்ளது. இதைக் கடந்து வடப்புறம் செல்லுதற்கு வசதியான கணவாய்கள் இல்லை. உபயோகத்தில் உள்ள சில கணவாய்கள் வேனிற் காலத்தில் மட்டும் வழி திறக்கப்படுகின்றன. மற்றக் காலங்களில் அவைகள் பனிக்கட்டியால் மூடிக்கிடக்கும். இக்கணவாய்களில் ஒன்றாகிய லிப்புத் தடாகக் கணவாய் வழியாக யாத்திரை வாசிகள் பெரிதும் கயிலாயத்துக்குப் போகின்றனர்.

பெரிய இமயத்தின் தென் சாரலில் பேர்பெற்ற வேறு பல க்ஷேத்திரங்கள் இருக்கின்றன. அவைகளில் முக்கியமானவை திருக்கேதாரம், பத்ரிகாசிரமம், கங்கோத்ரி, யமுனோத்ரி, அமரநாதம், பசுபதிநாதம் என்பனவாம். இவைகளுக்கு வருஷந்தோறும் ஆயிரக்கணக்கான யாத்திரைவாசிகள் போய்வருகின்றனர். பிரயாணமும் அவ்வளவு கடினமானதன்று. இக்காலத்தில் பாதைகள் மிகவும் திருத்தப்பெற்றிருக்கின்றன. வயது சென்றவர்களும் அப்பதிகளுக்குப் பயணம்போவதைக் காணலாம்.

கயிலாய யாத்திரை ஒன்றுமட்டும் இன்றைக்கும் கடினமானதாயிருக்கிறது. சில வருஷங்களுக்கு முன்பு இங்குச் சென்றவர்களின் தொகை மிகமிகக் குறைவு. இரண்டு மூன்று வருஷங்களுக் கொரு தடவை யாரோ இரண்டொருவர் இதைப் போய்த் தரிசித்து வருவார்கள். ஆபத்துக்கு உட்பட்டு மடிந்து போவதும் சர்வ சாதாரணம். வட இந்தியாவில் உள்ள பயிராகிகள் இந்த யாத்திரையை மேற்கொண்டு மடிவதையே ஒரு புண்ணிய கர்மமாகக் கொண்டு சென்றனர். காலக்கிரமத்தில் பாதைகள் பெரிதும் செப்பனிடப்பட்டிருக்கின்றன. இன்

றைக்கு வழியின் நிலைமை மிகவும் பொருத்தமானதா யிருக்கிறது. கடக்க முடியாத அவ்வளவு கஷ்ட முடையது மன்று; யாத்திரையில் சிரத்தையில்லாத வர்களும் சுலபமாகப் போகக்கூடிய சௌகரியம் வாய்க்கப்பெற்றது மன்று. சிரமத்தைப் பொருட் படுத்தாது போகின்றவர்களுக்கு இது சாத்திய மாகும். இந்தியாவின் பல மாகாணங்களினின்றும் இப்போது சுமார் நூறுபேர் வருஷந்தோறும் போகின்றனர். வங்காளத்தினின்றும் ஐக்கிய மாகாணத்தினின்றும் பெண்பாலாரும் சிலர் செல் கின்றனர். மற்ற மாகாணங்களினின்று பெண் மக்கள் போகும் வழக்கம் இன்னும் அதிகரிக்க வில்லை; இன்னும் கொஞ்ச காலத்துக்குள் கயிலாய யாத்திரை மிகவும் பிரசித்திபெறும் அறிகுறிகள் காணப்படுகின்றன.

இந்தியாவுக்குச் சிரசாயிருப்பது இமயமலை. பல்லாயிரம் வருஷங்களாக இந்த நாட்டில் எண்ணப் பட்ட உயர்ந்த எண்ணங்களும் மேலான கோட்பாடு களும் இந்த மலையினுள் பாதுகாத்து வைக்கப்பட் டிருக்கின்றன. கன்னியாகுமாரி முதல் காஷ்மீரம் வரையில் உள்ள பிரதேசங்களின் பாரமார்த்திக பொக்கிஷங்களுக் கெல்லாம் உறைவிடமாயிருப்பது இது. ஆங்காங்கு அவதரித்த பெரியோர் பலர் இங் குச் சென்று சிறிது காலமாவது வாசஞ்செய்ய விரும்பினர். உலகிலேயே மிகப்பெரிய மலையாகிய இது உயர்ந்த எண்ணங்களுக்கெல்லாம் புகலிடமாய் அமைந்திருக்கிறது. இது நிலைத்திருப்பது போன்று இந்தியாவின் நாகரீகமும் அழிவற்றிருக்கும் என்று பெரியோர்களால் கருதப்படுகிறது. கங்கை, யமுனை

சிந்து, பிரம்மபுத்ரா போன்ற புண்ணிய நதிகளெல்லாம் இதில் உற்பத்தியாகி இந்தியாவுக்குள் வருகின்றன. ஆக இமயமலை இந்தியாவுக்கு ஞானசம்பந்தமான உணவை அளித்துக்கொண்டிருக்கிறது.

இமயமலைக்கு முடியாயிருப்பது கயிலாயகிரி. அதற்கு அருகாமையில் மானஸசரோவரம் என்று ஒரு தடாகம் இருக்கிறது. அழகில் அதற்கு ஒப்பான தடாகம் வேறு எதுவும் இல்லை என்பது உலகம் முழுவதையும் சுற்றிப்பார்த்தவர்கள் கொள்கை. கயிலாயமும் மானஸசரோவரமும் சேர்ந்து கௌரி சங்கர் என்று சொல்லப்படுகிறது. இந்த ஸ்தலம் இந்துக்களுக்கும் பௌத்தர்களுக்கும் புண்ணியம் வாய்ந்தது. திபேத்தில் இருப்பவர்களெல்லாம் புத்த மதத்தைச் சேர்ந்தவர்கள். கடவுள் வழிபாடு அவர்களுக்கில்லை. முன்காலத்தில் புத்தமதம் இந்தியாவில் என்ன சீரிய முறையில் இருந்ததோ அதே நிலைமையில் இன்று அது திபேத்தில் பாதுகாத்து வைக்கப்பட்டிருக்கிறது. புத்த மதத்தின் மேலான அம்சங்களையெல்லாம் ஹிந்து மதம் தன்னகத்து எடுத்து இணைத்துக் கொண்டுள்ளது என்னும் உண்மையும் திபேத்துக்குச் சென்று பார்த்தால் விளங்கும். திபேத்தில் உள்ள பௌத்தர்கள் கயிலாயகிரியின் மீதும் மானஸசரோவரம் என்னும் தடாகத்தின் மீதும் கொண்டுள்ள பயபக்தி இணையற்றது. ஹிந்துக்களோடு கூடி, அவர்கள் கயிலையை சிவனது உறைவிடம் என்கின்றனர். சிவபதவி என்பதும் மகா நிர்வாணம் என்பதும் அவர்களுக்கு ஒன்றே. புத்தர்கள் பலர் கயிலையின் கண் மகா நிர்வாணம் அடைந்துள்ளனர் என்று அவர்கள் சொல்கின்றனர்.

இந்தியாவினின்று கயிலைக்குப் போகின்றவர்களிடத்தில் அவர்கள் பேரன்பு பாராட்டுகின்றனர். ஹிந்துக்கள் தொன்று தொட்டு இந்த க்ஷேத்திரத்தை பயபக்தியுடன் பாராட்டி வந்திருக்கின்றனர். பூர்வ காலத்தில் பல மகரிஷிகள் இப்பகுதியின்கண் தபசு பண்ணிக் கொண்டிருந்ததாக ஐதிகம் உண்டு. அவர்கள் தபசு புரிந்த இடங்கள் இன்றைக்கும் காண்பிக்கப் படுகின்றன. அசுரர்கள் தபசு பண்ணிய இடங்களும் அங்குக் காண்பிக்கப்படுகின்றன. இராவணனைப்பற்றிய வரலாறு திபேத்தில் ஏராளமாயுண்டு. கயிலையை எடுத்துக்கொண்டு போவதற்காக இலங்கை வேந்தன் வந்தவிதம், அவன் தவமிழைத்த தடாகம், கயிலையை எடுக்க முயன்றது, ஆகியவைகள் அப்பிரதேசத்தில் பெரிதும் சொல்லப்படுகின்றன.

கடவுள் பக்தியில்லாதவர்களும் கயிலையைப் போய்ப் பார்த்தால் அது உலகில் ஓர் அற்புதமான இடம் என்று ஒத்துக்கொள்வர். இரவும் பகலும் வேளைதோறும் அதன் தோற்றத்தில் உண்டாகும் வேறுபாடுகள், வேறுபாடுகளுக்கிடையில் அதன்கண் மாறாது மிளிரும் மகிமை, அவ்விடத்தில் உள்ள மனதைக் கவரும் அருட் பிழம்பு ஆகியவைகளை மானுடர் யாரும் மறுக்க முடியாது.

இமயமலையில் அல்மோரா எனும் ஊரினின்று கயிலைக்குச் சென்று, திரும்பவும் அவ்வூர் வருவதற்கு ஐந்நூறு மைலுக்குச் சற்று அதிகமாகவே இருக்கின்றது. பாதை மிக ஒடுங்கியது. வண்டி முதலியவைகள் அங்குச் செல்லா. யாத்திரை வாசிகள் நடந்தே செல்லவேண்டும். வழி முழுவதும் நடக்க இயலாதவர்

கள் அல்லது ஐதிகமாக யாத்திரை பண்ண இயலா தவர்கள் சிற்சில இடங்களில் குதிரையின் மீது போகலாம். யாத்திரைகளில் இது ஒப்பற்றது. அநேகவிதமான அரிய அனுபவங்கள் இதில் உண் டாகின்றன. பார்ப்பதற்கு அரிய காட்சிகள், மீளு தற்கு அரிய ஆபத்துக்கள், செய்தற்கு அரிய தபசு ஆகியவைகள் ஒன்று கூடியது இந்த யாத்திரை. தென்னிந்தியாவினின்று நாங்கள் ஒரு சிலர் 1937 ஹு மே மாதம் இந்த யாத்திரையின் பொருட்டு இமய மலைக்குச் சென்றோம்; ஆகஸ்டு மாதத்தில் அம்மலை யினின்று வெளியே வந்தோம். அந்த யாத்திரையில் நாங்கள் பெற்ற அனுபவங்கள் ஈண்டு விளக்கப்படு கின்றன.

## 2

திருக்கயிலாயகிரி மேலைத் திபேத்தில் மண்ணுல குக்கு ஓர் ஆபரணம் போன்று மிளிர்ந்து கொண்டி ருக்கிறது. இந்தியாவினின்று இதை நோக்கிச் செல் லுதற்கு வழிகள் பல இருக்கின்றன. வட மேற்குத் திசையில் காஷ்மீரம் எனும் ஹிந்து சமஸ்தானத் துக்குத் தலைமைப் பட்டணமாயுள்ள ஸ்ரீ நகரத்தி னின்று கிழக்குமுகமாக யாத்திரை செய்து திருக் கயிலாயம் போய்ச் சேரலாம். மற்ற வழிகளையெல் லாம் விட இது மிகத் தூரமானது. காஷ்மீரத்தி லிருந்து போகவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டா லொழிய இப்பாதை யாத்திரைவாசிகளுக்கு அவசிய மானதன்று. டெஹ்ரி சமஸ்தானத்தில் கர்வால் எனும் இடத்திலிருந்து வேறு ஒரு மார்க்கம் உண்டு.

சிம்லாவினின்றும் ஒரு பாதை கயிலைக்குப் போகின்றது. கங்கை நதி உற்பத்தியாகும் இடமாகிய கங்கோத்ரி என்னும் ஸ்தலத்தினின்று நீலக்கணவாய் வழியாக இன்னொரு பாதையுண்டு. பத்ரிகாசிரமத்திலிருந்து மானக்கணவாய் வழியாக மற்றொரு ரஸ்தா போகின்றது. அந்த மார்க்கத்தில் தொலிங்கமடம் என்னும் திபேத்திய பௌத்த மடாலயம் ஒன்று உண்டு. அது மிக பிரசித்திபெற்றது. பத்திரிகாசிரமத்துக்குக் கீழே சுமார் இருபது மைல் தூரத்தில் ஜோதி மடம் என்னும் க்ஷேத்திரம் இருக்கிறது. இது ஜகத்குரு ஆதி சங்கராசாரியார் அவர்களால் ஸ்தாபிக்கப்பட்டது. இந்த மடத்தினின்று வேறு ஒரு பாதை நீதிக்கணவாய் வழியாகக் கயிலையங்கிரிக்குப் போகின்றது. இதுபரியந்தம் சொல்லப்பட்டவைகள் பெயரளவில் மாத்திரம் பாதைகளாகின்றன. பிரயாணத்துக்கு அவைகள் வசதியானவைகளல்ல. மலைப்பிரதேசங்களில் வசிப்பவர்களுக்கு இவை பொருந்தும். செங்குத்தான கற்களின்மீது தொத்தி யேறுவதும் தவழ்வதும் அவர்களுக்கே இயலும். சமதரையில் நடப்பது போன்று அவர்களுக்கு அது பிறவிப் பழக்கம்.

திருக் கயிலாயத்தைக் காண விரும்பும் நம்மவர்கள் அல்மோராவினின்று புறப்பட்டு லிப்புத் தடாகக் கணவாய் வழியாகப் போவதே நன்று. மற்ற மார்க்கங்களில் இருக்கின்ற அளவு ஆபத்து இதில் இல்லை. மிகக்குறைந்த தூரம் உடையதும் இதுவே. லிப்புத் தடாகக் கணவாய் கயிலாய பூமிக்கு வாயில் போன்று இருக்கிறது. குளிர்காலத்தில் இது பனிக்கட்டியால் அடியோடு மூடப்படுகின்றது. அப்

போது திபேத்துக்கு நுழைவது சாத்தியமன்று. இளவேனிற்காலத்தில் பனிக்கட்டி உருக ஆரம் பித்து, முதுவேனிற் காலத்தில் வழி ஒருவாறு திறக்கப்படுகிறது. கணவாயைக் கடந்து செல்ல வசதி ஏற்பட்டவுடனே திபேத்தினின்று வர்த்தகர் கள் இந்தியாவுக்குள் வர ஆரம்பித்து விடுவார்கள். அச்செய்தி அல்மோராவுக்கு எட்டியதும் யாத்திரை வாசிகள் கயிலையை நோக்கிப் புறப்படுவார்கள். ஆனி, ஆடி, ஆவணி ஆகிய மூன்று மாதங்களே இந்த யாத்திரைக்குத் தகுந்த பருவம்.

முன்னே பிரயாணம் செய்தவர்கள் கொடுத்த புத்திமதியின்படி பொருள்களைச் சேகரிக்க எங் களுக்குச் சுமார் ஒரு மாதம் பிடித்தது. இமயமலையி னுள் போகும்போது உருளைக்கிழங்கும் வெங்காய மும் நீங்கலாகக் காய்வகைகள் ஒன்றும் அகப் படாது. திபேத்தில் விளை பொருளே இல்லை. ஆதலால் வற்றல், மசாலைத்தூள் முதலியவைகள் தென்னிந்தியாவிலேயே தயாரிக்கப்பட்டன. அவரவ ருக்கு இஷ்டமானவைகளும் நெடு நாளைக்குக் கெடாது இருக்கக் கூடியவைகளுமான பக்ஷணங் களும் தயாரிக்கப்படவேண்டும். மாங்காய் வற்றல் மருந்துக்கு ஒப்பானது. அதன் ஆவசியகம் பின் னல் விளக்கப்படும். கம்பள உடைகளைத் தயாரிப்ப தற்குத் தென்னிந்தியாவை விட வட இந்தியாவே மிக வசதியானது. பனி காலத்தில் குளிர் மிக வுடைய அப் பக்கங்களில் அவ்வுடைகள் மலிவாக அகப்படும்.

எங்கள் கூட்டத்தைச் சார்ந்த ஒருவர் மே மாதம் 23-ம் தேதி கயிலாயம் போகின்றார் என்ற செய்தி

அவருடைய நண்பர் ஒருவர் வீட்டிற்கு எட்டிற்று. செய்தியை எடுத்துச் சென்றவன் மோட்டார் வண்டி யோட்டுபவன். பயணத்துக்குப் பத்து நாளைக்கு முன்பே அவன் செய்தியைக் கொண்டு சென்றான். பிரயாணத்துக்கு உரிய மடக்குக் கட்டில் (Camp Cot) ஒன்று அவ்வீட்டினின்று கொண்டு வரும்படி அவனுக்குக் கட்டளையிடப் பட்டிருந்தது. அவனும் அவ்வாறே வீட்டில் உள்ளார்க்கு விஷயத்தை எடுத்தோதி, கட்டிலைத் தரும்படி வேண்டினன். திடீரென்று திரஸ்கரிப்பு சரமாரிபோல் வந்தது; திகைத்து நின்றான் மோட்டார் ஓட்டி! இத்துணை ஆட்சேபம் எதற் காக வென்று அவனுக்கு விளங்க வில்லை. "ஆம், அவர் கயிலாயம் போவது உண்மை" என்றான். "இந்த இளம் வயதில் ஏன் கயிலாயம் போகச் சொல்கின்றாய்?" என்ற தடையும் திட்டும் திரும் பவும் ஆரம்பித்தன. இக்குழப்பத்துக்கு மூல காரணம் சிறிது நேரத்துக்குள் வெளியாயிற்று. கயிலாயம் போவது என்றால் மரண மடைவது என்றும், அப்படி உயிர் விடுவதற்குத் கட்டில் வேண்டப்படுகிறது என்றும் அவர்கள் அர்த்தம் பண்ணிக் கொண்டார்கள். இந்த யாத்திரையைப் பற்றிப் பெரும்பாலர் கொண்டுள்ள எண்ணத்துக்கு இது தக்கதொரு சான்றாகும்.

ஹிமாலயத்தின் அடிவாரம் சென்னையிலிருந்து சுமார் ஆயிரத்து எழுநூறு மைல் தூரத்தில் இருக் கிறது. பம்பாய் அல்லது கல்கத்தா மார்க்கமாகச் சென்றால் தூரம் இன்னும் கொஞ்சம் அதிகமாகும். நாட்டிற்கு நடுவே இருதயம் போன்று இருக்கிறது

டெல்லி. நாலா பக்கங்களிலிருந்தும் நூற்றுக்கணக்கான மைல் தூரம் ஓடி அங்கு ரயில் வண்டிகள் வந்து சேருகின்றன. உடலெங்கும் உள்ள ரத்தக்குழாய்கள் இருதயத்தோடு இணைக்கப்பட்டிருப்பது போன்று இந்தியாவின் இருப்புப் பாதைகள் டெல்லியோடு இணைக்கப்பட்டிருக்கின்றன. சென்னையிலிருந்து நாங்களும் அத்தலைமைப் பட்டணத்தின் வாயிலாகவே இமயத்தை நோக்கிச் சென்றோம்.

வட திசையை நோக்கிப் பனிகாலத்தில் பிரயாணம் போகும்போது ஒரு விதமான அனுபவம்; வேனிற்காலத்தில் போனால் மற்றொருவித அனுபவம். இரவுதோறும் ஒரு பருவத்தில் குளிர் அதிகரிக்கிறது; இரவும் பகலும் மற்றொரு பருவத்தில் பொறுக்க முடியாததாகின்றது. தென்னிந்தியாவின் வெப்பம் அவ்வளவு கொடுமையானதன்று. வடக்கே வெயிலும் அனற்காற்றும் சேர்ந்து மனிதனை வாட்டுகின்றன. ராஜபுதனப் பாலைவனத்தினின்று வீசும் அவ்வனற்காற்று பெரிதும் உயிருக்கே ஆபத்து விளைவிக்கக்கூடியது. உச்சிவேளைகளில் எல்லா உத்தியோகங்களும் நிறுத்தப்படுகின்றன. காலை பத்து மணி முதல் மாலை நான்கு மணி வரையில் வீடுகளெல்லாம் அடைபட்டுக் கிடக்கும். மாந்தர் வீதிகளில் தலை நீட்டமாட்டார்கள். ஒவ்வொருவரும் ஒரு மண் கூஜாத் தண்ணீரும் ஒரு விசிறியும் தம்முடன் வைத்திருப்பார். விசிறியை வீச ஒரு கைக்கும், தண்ணீரைப் பானம் பண்ண மற்றொரு கைக்கும் ஓயாது வேலை இருந்து கொண்டே இருக்கும். பருகுகின்ற அவ்வளவு ஜலமும் எங்கே போய்

மறைகின்றதென்று வியப்பு; உண்டாகக் கூடும். அவ்வளவும் சூரிய வெப்பத்தால் சுவாசத்தோடு ஆவியாகப்போய் விடுகின்றது. அத்தகைய மாளாத வெயிலில் ரயில் வண்டிப் பிரயாணம் மட்டும் ஓயாது நடைபெறுகிறது. அக்கினிப் பிரவேசம் என்று அதைச் சொல்லத் தகும். கயிலையை நோக்கிப் புறப்படுவது முதிர்வேனிற் காலமாதலால் வெந்தழ லுக்கு ஒப்பான அவ்வெக்கையினின்று தப்பிக்க முடியாது. பயணத்தில் எடுத்த எடுப்பில் உண்டா கும் முதற்சோதனை இதுவே.

பழங்காலத்து யாத்திரை முறைக்கும் இப்போ தைய யாத்திரை முறைக்கும் இடையே உள்ள வித்தி யாசம் தெற்றென மனக்கண்ணெதிரே தோன்று கிறது. அக்காலத்தில் கால் நலிய, உடல் நலிய நாள் ஒன்றுக்கு மனிதன் பத்து அல்லது பதினைந்து மைல் போவான். இக்காலத்தில் வாயு வேகத் துக்கு ஒப்ப ரயில் வண்டி மனிதனைத் தூக்கிக் கொண்டு ஓடுகிறது. குறுகிய காலத்தில் நெடுந் தூரம் சிரமமின்றி இக்காலத்தில் கடக்கப்படுகிறது. இவ்வாறு ஏற்பட்டுள்ள வசதிக்கு மற்றொரு விதத் தில் மனிதன் ஈடு கொடுக்கவேண்டியதாயிற்று. மனிதனோடு மனிதன் இணங்குதற்கு இங்கு அவ காச மில்லை. பணம் கொடுத்தால், வேண்டும் பொருள்கள் கைக்கு வந்து விடுகின்றன. வேற்று ஒருவரோடும் பழகாது மனிதன் தேசமெங்கும் சுற்றிப் பார்த்துவிட்டு வந்து விடுகிறான். பண்டைக் காலத்தில் பணம் பெரிதும் பயன்படவில்லை. தீர்த்த யாத்திரை போகின்றவர்கள் அக்காலத்தில் பணம் எடுத்துக்கொண்டு போவதில்லை. ஆங்காங்கு அவர்

களுக்கு அதிதி சத்காரம் செய்யப்பட்டது. யாத்திரை வாசிகளுக்கு விருந்தோம்புதல் புண்ணிய கருமமாகக் கருதப்பட்டது. அதற்குப் பிரதி பலனாகத் தீர்த்த யாத்திரை போகின்றவர் உயர்ந்த கருத்துக்களை எங்கும் பரப்பிக்கொண்டே போயினர். மிக மெதுவாக எனினும் யாத்திரை வாசிகளின் மூலம் மேலான எண்ணங்கள் நாடெங்கும் பரப்பப்பட்டன. சௌகரியமான பிரயாணச் சாதனங்கள் இன்றி, சமாசாரப் பத்திரிகையின்றி, தபால் இன்றி, தந்தியின்றிச் சீரிய கொள்கைகள் தேசமெங்கும் வழங்கப்பட்டன. அக்காலத்திய யாத்திரை முறையே அதற்குக் காரணமாயிற்று.

மாறுபட்டிருக்கும் இக்காலத்திலும் பரத கண்டத்தின் பெருமை படிப்படியாகக் கண்ணெதிரே கொணரப்படுகின்றது. நெடுந்தூரம் தொடர்ந்து ஓடும் ரயில்வண்டி காலையில் ஒரு மாகாணத்தில் இருந்தால் மாலையில் மற்றொன்றுக்குப் போய்விடுகிறது. வண்டிக்குள் வரும் பிரயாணிகளின் நடையுடை பாவனைகள் விதவிதமாகக் காட்சி கொடுக்கின்றன. தடித்த தேகத்தையுடைய தெலுங்கு தேசத்தவர், உயர்ந்து ஒல்லியாயுள்ள ஐதராபாத் வாசிகள், திடகாத்திரமுடைய மஹாராஷ்டிரர், கட்டையராகிய குர்ஜரத்தார், மெல்லியராகிய மத்திய மாகாணவாசிகள், துடுக்குடைய ஐக்கிய மாகாணத்தவர், இன்னும் பலவிதமான பாங்குடையவர் ரயில் வண்டிக்குள் வருவதையும் போவதையும் காணலாம். ஒவ்வொரு மாகாணத்தவருக்கும் தனி இயல்பு ஒன்று இருப்பது தெற்றெனத் தோன்றுகிறது. ஆயினும் இவர்கள் அனைவரிடமும் இந்தியர் என்கிற

முத்திரை மேலோங்கி மிளிர்கின்றது. சைவம், வைஷ்ணவம், சாக்தம் ஆகிய சமயங்கள் இந்தியா முழுதிலும் ஒரேவிதமாய் ஊடுருவிப் பொலிவதைத் தேசமக்களின் நெற்றியலங்காரங்கள் காட்டா நிற்கின்றன. புண்ணிய நதிகளையோ கணக்கற்ற கோவில்களையோ காணுமிடத்து அவர்களுடைய கை குவியவும் தலை வணங்கவும் செய்கின்றன. பாஷை வேறுபாடுகளுக்கிடையிலும், பழக்க வழக்க வேறுபாடுகளுக்கிடையிலும் இந்தியர் உள்ளத்தில் ஊறும் தெய்வீக உணர்ச்சி என்றைக்கும் ஒன்றே என்பது வெளிப்படை. இயற்கையா யமைந்த நாட்டின் வளம் ஒப்பற்றது. முன்னேற்ற மடைந்துள்ள மற்ற நாடுகளில் போன்று இங்குப் பூமி பண்படுத்தப்படவில்லை. அப்படியிருந்தும் நிலவளம் போற்றத்தக்கதா யிருக்கிறது. ரயில்வண்டி பறந்தோடுதற் கிடையில் கழனிகள், கால்வாய்கள், தோப்புகள் தூரவுகள் விதவிதமான வர்ணம் தீட்டிய படங்கள் போன்று காட்சி கொடுக்கின்றன. வேனிற் காலத்தில் இத்தகைய எழில் என்றால் மாரி காலத்துக்குப் பிறகு இது எவ்வாறிருக்கும்! பரத கண்டத்தை ஓர் எல்லை கடந்த பூமி என்று சொல்ல வேண்டும். மாயையின் விசித்திரம் போன்று கணந்தோறும் காட்சி மாறுகிறது. இப்போது எல்லை காணாத சமவெளியில் ரயில் வண்டி பாய்ந்தோடுகிறது. ஜாலத்தால் சிருஷ்டிக்கப்பட்டதுபோன்று திடீரென்று ஒரு பட்டணம் தோன்றுகிறது. இரைச்சல் நிறைந்த ரயில் நிலையம் வருகிறது. பழையபடி சமவெளி, அல்லது மேடு பள்ளம் நிறைந்த நிலம். பின்பு அடர்ந்த அடவி வரு

கிறது. வண்டியின் வேகத்தால் மரத்திரள் அலை யலையாகப் பின்புறம் உந்தித் தள்ளப்படுவனபோல் தோன்றுகின்றன, அசையாதிருக்கும் மலைகள் நம்மை நோக்கி வருவனபோல் காட்சி கொடுக்கின் றன. பின்பு அவைகள் ரயில் வண்டியால் பின்பக் கம் உதைத்துத் தள்ளப்படுகின்றன. இப்படிக் கிழக்குத் தொடர்ச்சி மலை, விந்தியமலை முதலியவை கள் ஓட்டம் பிடிப்பவைகள் போல் காணப்படுகின் றன. கணப்பொழுதில் உயர்ந்த மலை யொன்று உருவெடுத்து வந்து நிற்கிறது; அதன் அடிவாரத் தில் ரயில் வண்டி பூமியில் பட்டும் படாதும்போல் உருண்டோடுகிறது. இப்போது மேடு ஒன்றில் புகையைக் கக்கிக் கர்ச்சித்துக்கொண்டு அது பறக் கிறது. திடீரென்று இருள், காதைத் துளைக்கும் இரைச்சல், வண்டிக்குள் மட்டும் மின்சார விளக்கு ; இதைக் கண்டதும் முதலில் திகைப்பு ; பின்பு நீண்டதொரு மலை நுழைவு (tunnel) என்ற தெளிவு. பர்வதத்தைப் பொத்துக்கொண்டு போவதுபோல் வண்டித்தொடர் வெளியே வருகிறது; பிறகு பாலத் தின்மீது பிரம்மாண்டமான நதி ஒன்றைத் தாண்டி ஓடுகிறது. நவீன பௌதிக விக்ஞான சாஸ்திரம் மனிதனுக்கு அளித்திருக்கும் வசதியை என்னென் பது! ஆனால் இதே வண்டித்தொடர் தீர்த்த யாத் திரை போகின்றவர்களுக்கும் உதவுகிறது; அக் கிரமமாக எளியார்மீது யுத்தத்துக்குப் போகின்ற வர்களுக்கும் உதவுகிறது. இத்தனை சௌகரியங் களையும் மனிதன் நல்வழியில் உபயோகிக்கத் தெரிந்துகொண்டால் இந்தப் பூலோகமே சுவர்க்க லோகமாகுமன்றோ!

புண்ணிய நதிகளாகிய கிருஷ்ணை, கோதாவரி, நர்மதை, யமுனை, கங்கை முதலியவைகள் ஒன்றன் பின் ஒன்றாகக் கடக்கப்படுகின்றன. அவைகளைக் காணுந்தோறும் பண்டைக்காலத்து இந்தியா கண்ணெதிரே வந்து காட்சி கொடுக்கிறது. இந்நதிகள் வெறும் நீர்ப் பெருக்காகக் கருதப்படவில்லை. உயிருடன் இலங்கி உலகுக்கு உணவு ஊட்டும் பராசக்தியின் வடிவென இவைகள் எண்ணப்பட்டன; அதே பாவனைதான் ஹிந்துக்களுக் கிடையில் இன்றைக்கும் இருந்து வருகிறது. இந்தியாவின் நாகரிகம், சீரிய எண்ணங்கள், முடிவான ஞானம் ஆகிய யாவும் உதித்தது இப்புண்ணிய நதித் தீரங்களிலேயாம். உடலுக்கு உணவையும் உள்ளத்துக்கு ஞானத்தையும் அளித்தபெருமை இந்நதிகளுக்கு உண்டு. இவைகளில் ஓயாது நீர் ஓடுவதுபோன்று காலமும் ஓடுகிறது! மாந்தரும் உலகில் வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருக்கின்றனர். ஆனால் இங்கு உதித்த பாரமார்த்திகப் பெருவாழ்வு மட்டும் அழியாது நிலைத்திருக்கிறது. பூவுலகு இருக்கும் பரியந்தம், பூவுலகில் இந்தியா இருக்கும் பரியந்தம், இந்தியாவில் ஹிந்துக்கள் இருக்கும் பரியந்தம், இந் நதிகள் பூலோக தேவதைகளெனப் போற்றப்படும்.

ஓடும் ரயில் வண்டியிலிருந்து பார்ப்பவர்களுக்கு இடையிடையே பாழ்ங் கோட்டைகளையுடைய குன்றுகள் தென்படுகின்றன. சூரிய அஸ்தமனம் அக்காட்சிக்கு ஒருவிதத் துன்ப மூலாம் பூசுகிறது. இடைக்காலத்துச் சிற்றரசர்களைப்பற்றிய எண்ணம் இயல்பாகவே வருகிறது. அவர்களிற் பலர் பராக்கிரமசாலிகள். பொது நன்மையின் பொருட்டு ஒத்து

வாழத் தெரியாமையே அவர்களின் வீழ்ச்சிக்குக் காரணமாயிற்று. தேசமும் பராதீனத்துக்கு உள்ளா யிற்று. பிளவுபட்ட வாழ்வு எனும் ஒரு மொழியில் இடைக்காலத்து இந்திய சரித்திரத்தை முடித்து விடலாம். அந்த எண்ணமே மனதைத் துயரத்தில் தள்ளுகிறது.

க்ஷேத்திரங்கள் பலவற்றைப் போகும் வழியில் தங்கித் தரிசிக்கலாம். ஆனால் குறிப்பிட்ட காலத்தில் திருக்கயிலாய யாத்திரையை அல்மோராவினின்று துவக்கியாக வேண்டும். ஆதலால் உத்தர கண் டத்தை நோக்கிப் போகும்போது அதற்கெல்லாம் நேரமில்லை. வேனிற்காலமும் அதற்கு அவ்வளவு வசதியானதன்று. திரும்பிவரும்போது மாரிகாலத் தில் ஸ்தலங்களை வேண்டியவாறு கண்டு களிக்கலாம். கம்பள உடைகளிற் சிலவற்றை டெல்லியிலும் இன் னும் சிலவற்றை அல்மோராவிலும் சேகரிக்க வேண் டும். அதற்காக இரண்டொரு நாட்கள் டெல்லியில் தங்குவது அவசியம். சகிக்கமுடியாத அந்த வெயி லில் கம்பள உடைகளை வாங்குவதற்கே மனது மறு தலிக்கிறது. ஆனால் இவ்வுடைகளை யெல்லாம் மீறி உடலை உடற்றும் குளிர் ஒன்று மலைநாட்டில் உண்டு என்பதை மனது அப்போது ஊகிப்பதில்லை.

டெல்லியினுள் ரயில்வண்டி நுழையும்போதே வேறு நாடு நகரங்களில் எங்கும் காண இயலாத அதிசயக்காட்சி யொன்றைக் காணலாம். கணக் கற்ற அரசாங்கங்களின் இடுகாடாகவும் சுடுகாடாக வும் இருந்தது டெல்லி. சுமார் அறுபது சமசதுர மைலுக்குக் கோட்டைகளும், கொத்தளங்களும்,

இடிந்துபோன மாளிகைகளும், பாழடைந்த கல்லறைகளும், பாதுகாக்கப்பட்ட ஸ்தம்பங்களும் தென்படுகின்றன. இது கணக்கற்ற அரசாங்கங்களுக்குத் தலைமைப் பட்டணமாக இருந்தது போன்று உலகிலேயே வேறு எப்பட்டணமும் இருந்ததில்லை என்கின்றனர் சரித்திரக்காரர். முடிசார்ந்த மன்னர்களெல்லாரும் முடிவில் ஒரு பிடி சாம்பலாகப் போயினர் எனும் உண்மையை இந்நகர் சொல்லாது விளக்கிக்கொண்டிருக்கிறது. இந்தியாவின் சரித்திர முழுவதும் டெல்லியின் சரித்திரத்தில் அடங்கிவிடும் எனும் கூற்று ஒருவிதத்தில் உண்மை. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு அரசாண்டவர்களின் ஞாபகச் சின்னங்கள் இன்றைக்கும் தென்படுகின்றன. பாண்டவர்களுக்குத் தலைமைப் பட்டணமாயிருந்ததும் இவ்வூரே. அக்காலத்தில் இதற்கு இந்திரப்பிரஸ்தம் என்னும் பெயர். பாண்டவர் கோட்டை என்று பெயர்பூண்ட, சிதறுண்ட கற்கோட்டை இன்றைக்கும் தென்படுகிறது. பாண்டவர்களை ஈன்றெடுத்த தாய் குந்திதேவியின் கோயில் ஒன்று இதற்கு அருகாமையில் இருக்கிறது. அந்த ஐவரும் பூலோகத்தில் நிகழ்த்திய ராஜ்ய பரிபாலனமும் இதர காரியங்களும் ஹிந்துக்களுக்கு வாழ்க்கை சம்பந்தமான பெரியதோர் எடுத்துக்காட்டாக இருக்கின்றன. இறுதியாக அவர்கள் இப்பட்டணத்தினின்று கயிலையங்கிரியை நோக்கித் தீர்த்த யாத்திரை செய்தனர். டெல்லியைச் சுற்றிப்பார்க்கும்போது இவ்வெண்ணங்களெல்லாம் நம் உள்ளத்தில் எழுகின்றன.

ஒரு நாள் மாலையில் டெல்லியிலிருந்து புறப்பாடு. சேரவேண்டிய இடத்துக்குத் தொடர்ந்து போகும் ரயில் வண்டியில்லை. மொராதாபாத், பரீலி எனும் இரண்டு பெரிய சந்திப்பு ஸ்டேஷன்களில் வண்டி மாற்றியாக வேண்டும். நாலா பக்கங்களிலிருந்தும் இரவும் பகலும் அந்த ஜங்ஷன்களுக்கு ரயில்வண்டிகள் இடிமுழக்கம் செய்து கொண்டு ஓடி வருகின்றன; கத்திக் கர்ஜித்துக்கொண்டு வெளியேறுகின்றன. பிரயாணிகள் ஓயாது வருவதும் போவதுமாயிருக்கின்றனர். நடு இரவில் பரீலி ஜங்ஷனில் வண்டி மாற்றி, ஓர் இடைத்தரத் தண்டவாள வண்டியில் ஏறுகின்றோம். தென்னிந்தியா முழுவதும் சுற்றும்போது ஒரே ஒரு ரயில்வே கம்பெனி நமக்குச் சேவை செய்வதாகின்றது. இந்த யாத்திரையில் நாங்கள் இப்போது ஆறாவது கம்பெனியின் வண்டியில் ஏறுகிறோம். இதற்கு முன் ஐந்து கம்பெனிகளின் இருப்புப் பாதைகளைக் கடந்தாய் விட்டது. இதற்கு ரோஹில்கண்டு கொமாயுன் ரெயில்வே என்று பெயர். மற்ற வண்டிகளைக் காட்டிலும் சற்று மெதுவாக இது வடதிசையாகப் போகின்றது. இருளின் ஆதிக்கம் இன்னும் ஐந்தாறு மணி நேரம் இருக்கும் ஆதலால் நாங்கள் ஓடும் வண்டியில் சற்றுக் கண்ணயர்கின்றோம்.

விடியற்காலம் அணுகுகிறது. இத்தனை நாளாக இரவும் பகலும் உடலை உருக்கிய புழுக்கம் இப்பொழுது எங்கேயோ போய்விட்டது. இமயத்திலிருந்து இடையிடையே வரும் மெல்லிய பூங்காற்று மகிழ்வூட்டுவதாயிருக்கிறது. உடலின்மீது போர்வை

போட வேண்டிய அவசியமும் இப்போதுதான் வந்தது. மரம், செடி, கொடிகளெல்லாம் சூரியோதயத்தால் உள்ளபடி உருத்தரித்துக் கொண்டிருக்கையில் ஒரு வனத்தினுள் காத்கோடம் என்னும் நிலையத்தில் ரயில்வண்டி வந்து நின்றது. அத்துடன் எங்களுடைய நீண்ட ரயில்வண்டிப் பிரயாணமும் முடிவுபெற்றது. கீழே இறங்கியதும் வடதிசையில் கிழக்கு மேற்காக நிற்கும் நீண்ட குன்று ஒன்று தென்பட்டது. உடனே மனதில் பெரிய ஏமாற்றம் உண்டாயிற்று. எங்கள் மனதில் எழுந்த எண்ணமாவது: 'இதைவிடப் பெரிய மலைகள் தென்னிந்தியாவில் இருக்கின்றனவே! உலகத்திலேயே மிகப் பெரிய மலை என்பதன் அடிவாரம் இப்படித்தானா இருப்பது? வான் அளாவும் சிகரம் ஒன்றையும் காணோமே!'

## 3

கயிலையங்கிரிக்குப் போகின்றவர்களுக்குக் காத்கோடம் ஸ்டேஷனில் இருப்புப் பாதைப் பிரயாணம் முடிவுபெறுகிறது. காத்கோடம் பெரிய ஊர் அன்று; இருப்புப்பாதை நிலையம், அதைச் சார்ந்த பல கடை கண்ணிகள் முதலியவைகள் மட்டும் அங்குக் காணப்படுகின்றன. மலையினுள் உள்ள பெரிய ஊர்களாகிய நைனித்தால், ராணிக்கேட், அல்மோரா ஆகியவைகளுக்கு இருப்புப்பாதை இங்கு முடிவு பெறுகிறது. ஆதலால் இது ஒரு முக்கியமான ஸ்டேஷன். இங்கிருந்து ராணிக்கேட் மார்க்கமாகத் திருக்கேதாரம் - பத்ரிகாசிரமத்துக்கு ஒரு பாதையுண்டு. ஆனல் யாத்திரை வாசிகள் இவ்

வழியாக இந்த இரண்டு ஸ்தலங்களுக்குப் போவது கிடையாது. ஹரித்துவாரம், ரிஷீகேசம் மார்க்க மாகவே அங்குப் போகின்றனர். திருக்கயிலாயத் திற்குப் போகின்றவர்களுக்கு மாத்திரம் இது தகுந்த வழியாகும்.

காத்கோடத்தினின்று அல்மோரா நூறு மைல் தூரத்தில் இருக்கிறது. மோட்டார் வண்டி ஓடுதற் கான நல்ல பாதை உண்டு. ஏராளமான மோட்டார் வண்டிகள் பிரயாணிகளைப் பிரித்தெடுப்பதற்குப் போட்டியிட்டுக் கொண்டிருப்பதைக் காணலாம். வண்டிச் சத்தம் சமயோசிதம்போல் மாறும். சிறிது நேரத்துக்கொரு வண்டியும் புறப்பட்டுக் கொண் டிருக்கும். ஆதலால் பிரயாணிகள் மோட்டார் வண்டியின் பொருட்டு அவசரப்படவாவது விசாரித்துப் பாராது அதிகப்படி வண்டிக் கூலி செலுத்தவாவது செய்யலாகாது. ஒவ்வொரு வண்டி யிலும் பிரயாணிகளை விடச் சாமான்களே அதிகம் இருப்பதைக் காணலாம். ரயில் வண்டியிலிருந்து சாமான்களை மலைக்கு எடுத்துச் செல்லுதலே மோட் டார் வண்டிகளின் முக்கியமான வேலை. ஆதலால் பிரயாணிகள் அதிகம்பேர் அகப்படாவிட்டாலும் அவர்களுக்குக் கவலையில்லை.

சுமார் பத்துப் பிரயாணிகளையும் ஏராளமான மூட்டை முடிச்சுகளையும் எடுத்துக்கொண்டு எங்கள் வண்டி புறப்பட்டது. அதற்கு "கணைந்த மோட் டார் சேவை" என்று பெயர். வார்த்தைகளைக் கையாளுதலில் வட இந்தியாவுக்கும் தென் இந்தியா வுக்கும் உள்ள வித்தியாசம் நன்கு தென்பட்டது.

அவர்கள் "மோட்டார் சேவை" என்று சொல்வதைத் தென்னிந்தியாவில் "மோட்டார் சர்வீஸ்" என்பார்கள். ஒருவண்டி எத்தனை "சவாரி" என்று அவர்கள் கேட்பது வழக்கம்; இங்கு எத்தனை "டிக்கெட்" என்று கேட்கிறார்கள். அங்கு வண்டியை நிறுத்துதற்கும் ஓட்டுதற்கும் தங்களுக்குச் சொந்தமாயுள்ள பதங்களையே பிரயோகிக்கிறார்கள். நமது மாகாணத்திலோ ஆங்கிலச் சொற்களை கையாளாது யாராலும் பேச இயலுகிறதில்லை. இவைகள் மிகச் சிறு செயல்கள் எனினும், நமது மனப்பான்மைக்கு இவை தக்க சான்றாகின்றன. கணனந்த மோட்டார் சேவகர்கள் வழி முழுதும் பிரயாணிகளின் சௌகரியங்களைப் பெரிதும் கவனித்துக்கொண்டனர். எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அவர்கள் பிரயாணிகளிடத்தில் மரியாதையாக நடந்துகொண்டது பாராட்டத்தக்கது.

மோட்டார் வண்டி புறப்பட்டதும் மனதில் அவா ஒன்று எழுந்தது. கண்ணெதிரே தோன்றுவது ஒரு கடுகுமாத்திரம். உலகம் போற்றும் இமயமலை எத்தகையதாய் இருக்கக்கூடும்! அதை இனிக் கடிதில் காணவேண்டும் என்பதே அந்த அவா. சற்று நேரத்துக்குள் பாதையில் சமபாகம் முடிவுற்றது. வண்டி திணறிக்கொண்டு மேல்நோக்கி ஓட ஆரம்பித்தது. ஆங்காங்குச் சோலைகளின் இடையீடுகளில் சமவெளி தென்பட்டது. நாம் சாதாரணமாய் வாழும் சமதரையைவிட்டு உயரப்போய்க் கொண்டிருக்கிறோம் என்பது உறுதியாயிற்று. பாதையில் ஒரு கூர்மையான வளைவு. அதில் மோட்டார் வண்டி

திடீரென்று இடது பக்கம் திரும்பிற்று. அச்சம்ப வத்தை ஒரு ஜாலவித்தையென்றே சொல்லவேண் டும். நாங்கள் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு வந்த விஸ்தாரமான சமவெளி மாயமாய் மறைந்து போயிற்று. இனி அது ஒருபோதும் கட்புலனாகாது. மலைநாட்டினுள் புகுந்துவிட்டோம். நான்குபுறமும் கோட்டைபோன்று மலை தென்படுகிறது. வட திசை யில் இருப்பது சற்று உயரமாகவே இருக்கிறது. சிறிது நேரத்துக்குள் மற்றொரு கோட்டையினுள் பிரவேசிக்கிறோம்; கொஞ்சம் பொறுத்து இன் னென்று. இப்போது இமயமலையைப் பற்றிய இரகசியம் ஒன்று ஒருவாறு வெளியாகின்றது. முதலில் கரடுபோன்று தென்பட்ட அது படிப்படி யாகப் படலம் படலமாக உள்ளே உயர்ந்து கொண்டே போகிறது. வாழ்க்கையின் மர்மத்துக் குப் புறச்சின்னமாயிருப்பது இமயமலை. அதை ஆராய்ந்து கொண்டு மேலே செல்லச் செல்ல அதன் மகிமைகள் ஒவ்வொன்றாகக் காட்சி கொடுக்கும்.

தென்னிந்தியாவில் பல மலைகளில் நாம் காண் பது போன்று பாதை தொடர்ந்து ஒரே ஏற்றமா யில்லை. ஒரு மலையடுக்கின் மீது ஏறி இறங்குவதும், பின்பு மற்றொன்றின்மீது ஏறி இறங்குவதும் ஓயாது நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. சுமார் இருபது மைல் தூரம் சென்ற பிறகு கண்ணெதிரே தோன்றுகிற நைனித்தால் என்ற ஊருக்கு ஒரு ரஸ்தா பிரிகிறது. இவ்வூர் ஐக்கிய மாகாண அர சாங்கத்தின் கோடைகால வாசஸ்தலம். சென்னை ராஜதானிக்கு உதக மண்டலம் எப்படியோ அப்படி

இது ஐக்கிய மாகாணத்துக்கு உரியது. காத்கோடத்தி னின்று ராணிக்கேட் சுமார் எழுபது மைல் தூரத் தில் இருக்கிறது. இது ஓர் இராணுவ ஸ்தலமாத லால் இது பரியந்தம் ரஸ்தா கண்ணாடி போன்று அருமையாக அமைக்கப்பட்டிருக்கிறது. நிலக்கரிக் கீல் அதற்கு மினுக்கிட்ட கறுப்பு வர்ணம் கொடுக் கிறது. இருமருங்கிலும் வெள்ளை நிறம் தீட்டிய கற்கள். அதற்கப்பால் பசும்புல், மரம், செடி கொடி முதலியன. அத்தகைய அழகிய பாதையில் மோட்டார் வண்டி குலுங்காது ஓடுகிறது. தரையில் ஓடுகிறதா அல்லது ஆகாயத்தில் மிதக்கிறதா என்ற சந்தேகம் சில வேளைகளில் வந்து விடுகிறது. இரா ணுவத்துக்காக வேண்டிச் செல்வம் ஏராளமாய் அப்பாதையில் இறைக்கப்பட்டிருப்பதே இதற்குக் காரணமாகும். இராணிக்கேட்டுக்குள் மோட்டார் வண்டி நுழையும்போதே இராணுவ ஆதிக்கம் தெற்றெனத் தென்படுகிறது. வசதி முழுதும் முதலில் சிப்பாய்களுக்கு உரியது. மற்றவர்கள் அங்கு அமைந்துள்ள சட்டத்துக்கு ஏற்றபடி நடந்து கொள்ளவேண்டும். பூலோக வாசிகளைச் சட்டை பண்ணாது செல்லும் சிப்பாய்களின் மனப்பான்மை ஒரு விதத்தில் போற்றத்தக்கது. மக்கள் எல்லோ ரும் ஏன் அத்தகைய திடகாத்திரம் பெறலாகாது? மனிதன் எண்ணியதை எண்ணியாங்கு பெற முடியும்.

சுமார் அரைமணி நேரம் ராணிகேட்டில் மோட்டார்வண்டி தங்கி நின்று விட்டுப் புறப்படு கிறது. அல்மோரா இன்னும் முப்பது மைல் தூரத் தில் இருக்கிறது. தொலையில் அது இடை இடையே

கண்ணுக்குத் தென்படுகிறது. வண்டி கிழக்கு முக மாகப் போய்க்கொண்டிருக்கிறது. வண்டியினுள் வீற்றிருக்கும் வயது முதிர்ந்த மாது ஒருத்தி இடை யிடையே எல்லோருடைய கவனத்தையும் கவர்கின் ருள். ஏதோ கொஞ்சம் பிணியால் வருந்தும் தன் புதல்வனைக் காண அவள் காத்கோடத்திலிருந்து அல்மோராவுக்குப் போய்க்கொண்டிருக்கிருள். குதூகலமான சுபாவமுடையவள் அம்மாது. நானு விதமான விஷயங்களைப் பற்றி அப்போதைக்கப் போது அவள் பகரும் மொழிகள் பிரயாணிகளுக்கு மகிழ்வூட்டுவனவாயிருந்தன. மேலாம் கருத்துக்கள் அடங்கிய அம்மாதரசியின் சொல்லில் சில வேளை களில் நகைச்சுவை ததும்புவதைக் கண்டு பலர் விலாப்புடைக்கச் சிரிப்பார்கள். இவ்வாறு குதூகல மாகக் காலங்கழித்து வந்த அம்மையாருக்கு அல் மோராவினின்று பதினைந்தாவது மைலில் மூர்ச்சை போகக்கூடிய செய்தியொன்று எட்டுகிறது. தான் காணச்சென்ற செல்வன் காலஞ்சென்று விட்டான்! கணப்பொழுதில் காட்சி மாறிவிட்டது, சிரிப்பும் வேடிக்கையும் விநோதமும் பறந்தோடி விட்டன. கோவென்று அவள் கதறி யழுகின்ருள்; பதறு கின்ருள்; புடைத்துக் கொள்ளுகின்ருள்; புத்திர சோகத்தில் மூழ்கி விடுகிருள். அவளது பரிதவிப் பில் ஆச்சரிய மொன்றுமில்லை. ஆனுல் உலக இயல்பைக் குறித்து நாம் ஆச்சரியப்படவேண்டி யிருக்கிறது. அவள் சிரித்து விளையாடியபோது அருகில் இருந்த அனைவரும் அவளது களிப்பில் கலந்து கொண்டனர்; அழும்போதோ அவள் தன்

னந் தனியளாய் இருக்கின்றாள். வாழ்க்கை சம்பந்த மான இது ஒரு பரம உண்மை—மனிதன் சிரிக்கும் போது உலகம் முழுவதும் அவனோடு கூடிச் சிரிக்கின்றது; அழும்போது அவன் தன்னந்தனியனாய் அழ வேண்டும். உலகமும் தன்னோடு கூடி அழவேண்டு மென்று எதிர்பார்ப்பவன் ஏமாற்ற மடைவான். அழுகைக்கு ஏதுவாகிய சம்பவம் எக்கணத்தில் வேண்டுமானாலும் வரும். அதற்கும் மனிதன் ஆயத் தமா யிருக்கவேண்டும். நலம் பொலம் ஆகிய இரு மைக்கும் யாண்டும் ஆயத்தமாயிருப்பவரே வாழ்க்கை எனும் பயணத்தை நன்கு முடிக்க வல்லவர் ஆவார்.

அல்மோராவில் வந்து இறங்குகிறோம். அதற்கு முன்பு ஊர் எல்லையில் சுங்கம் வசூலிக்கப்படுகிறது. வண்டி, வாகனம் இத்தியாதிகளுக்குச் சுங்கம் செலுத்துவதைப்பற்றிப் பலர் அறிவர். ஆனால் அல்மோராவில் சுங்கம் வசூலிப்பது வண்டிக்காக வன்று. வண்டியில் இருக்கும் பிரயாணிகளிட மிருந் தேயாம். வண்டியோட்டுபவனைத் தவிர அதில் ஆள் யாரும் இல்லாதிருந்தால் அத்தகைய காலி வண்டிக் குச் சுங்கம் இல்லை. ஆனால் அதில் பிரயாணிகள் இருந்தால் அவர்கள் தலைக்கு எட்டணா வீதம் சுங்கம் செலுத்த வேண்டும். இது வண்டி வாடகையோடு சம்பந்தப்படாது. அது அல்மோராவுக்கென்று ஏற் பட்ட அலாதி நியமம் போலும்! இத்துடன் நவீனப் பிரயாண சாதனங்களெல்லாம் நின்று விடுகின்றன. இந்த ஊரிலுங் கூட இரண்டு வீதிகளில் மட்டும் மோட்டார் வண்டிபோகும். பாக்கி இடங்களுக்கு நடந்து, அல்லது குதிரைச் சவாரி செய்து, அல்லது

பல்லக்குப்போன்ற ஆள் தூக்கும் ஒருவிதமான நாற்காலியில் ஊர்ந்து செல்லவேண்டும். மூட்டை முடிச்சுகளும் அவ்வாறே கடத்தப்படுகின்றன. பழங்காலத்துப் பிரயாண முறையும் புதிய வேகம் வாய்க்கப் பெற்ற பிரயாண முறையும் இங்குச் சந்திக்கின்றன.

சமுத்திர மட்டத்துக்குமேல் சுமார் 5,600 அடி உயரத்தில் இருக்கிறது அல்மோரா. இப்பெயர் பூண்ட ஜில்லாவுக்கு இது தலைமைப் பட்டணம். இதன் ஜனத்தொகை சுமார் 10,000. இதற்குப் பட்டண பரிபாலன சபை (முனிசிபாலிட்டி) உண்டு. ஒரு மலையின் மேற்பாகத்தில் இது நீண்டு அழகாய் அமைந்திருக்கிறது. நாலா பக்கமும் நெடுந்தூரத்துக்கு மலைத்தொடர்கள் இங்கிருந்து தென்படுகின்றன. மேகம் சூழாது பரிஷ்காரமாய் இருக்கும் தினங்களில் வடதிசையில் நெடுந்தூரத்தில் பனிக்கட்டியால் மூடப்பட்ட ஹிமயமலை மங்கலாகக் காணப்படும். அல்மோரா ஓர் அமைதியான ஊர். கர்ணகடோரமான சந்தடி எதையும் இதனுள் கேட்க முடியாது. ஆரோக்கியத்துக்கும் இது பேர்பெற்ற ஸ்தலம். ஆதலால் சுகவாசத்தை நாடுபவர்கள் வருஷ முழுதும் இங்கு வந்துகொண்டிருக்கின்றனர். மெல்லிய மிருதுவான ஆட்டு ரோமத்தைக்கொண்டு நூல் நூற்றுக் கம்பளம் நெய்தல் இவ்வூரின் முக்கியமான கைத்தொழில். இரண்டாந்தரக் கல்லூரி ஒன்றும் உயர்தரப் பாடசாலைகள் இரண்டும் இருக்கின்றன. ஊர் நடுவில் பழைய கோட்டை ஒன்று இருக்கிறது. சர்க்கார் காரியாலயங்கள் பல அதனுள் இருக்கின்றன.

மொகலாயர் காலத்தில் சந்தரராஜா எனும் ஹிந்து அரசன் ஒருவன் இதை ஆண்டு வந்தான். பின்பு ஆங்கிலர்கள் சந்தர ராஜனிடமிருந்து இதைப் பிடித்துக்கொண்டனர்.

அல்மோராவைச் சுற்றிலும் ஓடைகளும் சிற்றாறுகளும் ஓடுகின்றன. அவைகளில் முக்கியமானது ஸன்வால் நதி என்பது. அதன் தீரத்தில் விசுவநாதர் கோயில் ஒன்று இருக்கிறது. கார்மர்கோட் என்ற மற்றொரு சிவன் கோயிலும் அல்மோராவில் இருக்கிறது. நந்தா தேவி, பாதாள தேவி என்ற இரண்டு தேவியின் சந்நிதிகளும் அங்குண்டு. அவைகளுள் பாதாளதேவி என்பது வடபுறத்தில் ஓர் அழகான பள்ளத்தாக்கில் இருக்கிறது. பெரியார் பலர் தபசு பண்ணிக்கொண்டிருந்த இடம் இது. சுவாமி பூரணனந்தர் எனும் பெரியார் ஒருவர் சுமார் ஐம்பது வருஷங்களுக்கு முன் இங்கு சமாதியடைந்தார். தீர்க்கதரிசியாகிய அவர் அந்நாளில் ஆங்கிலமும் கற்றிருந்தார். அவர் சரீரம் அடக்கம் செய்யப்பட்டுள்ள சமாதி மந்திரம் இன்றைக்கும் அங்கு காணப்படுகிறது. இப் பெரியாரைப் பற்றிய முக்கியமான செய்தி யொன்று இன்றைக்கும் அல்மோராவில் உலவுகிறது. இவரிடத்துப் பேரன்பு கொண்டிருந்த டப்பரின் பிரபு (Lord Dufferin) என்று அழைக்கப்பட்ட ராஜப் பிரதிநிதி ஒருவர், தமக்குச் சமயம் வாய்க்கும் போதெல்லாம் தனியாக இவரைச் சந்தித்து இவரோடு உறவாடி வந்தார். அதன் பயனாக அந்த ஆங்கிலத் துரைமகனரது கொள்கையும் வாழ்க்கையும் பெரிதும் மாறுபாடு அடைந்தன.

தமக்கு ஞானப்பால் ஊட்டிய பூரணானந்த சுவாமிகளுக்கு அவர் ஏதாவது கைங்கரியம் செய்யவேண்டுமென்று விரும்பினார். ஆனால் சுவாமிகள் அதற்குச் சம்மதிக்கவில்லை. பன்முறை அவர் வற்புறுத்திய போது பூரணானந்தர், "எனக்கு ஒன்றும் தேவையில்லை; உமக்கு விருப்பமிருக்குமாகில் இந்தியாவுக்கு ஏதாவது சேவை செய்யும்" என்று ஏவினார். அதற்கு இணங்கிய இராஜ்ய பிரதிநிதியும் தமது செல்வாக்கை மறைமுகமாக வைத்துக்கொண்டு (Allan Octavian Hume) ஆலன் அக்டேவியன் ஹியூம் எனும் ஓர் ஆங்கிலரின் மூலமாகக் காங்கிரஸ் மகாசபையை (The Indian National Congress) அந்நாளில் ஆரம்பித்து வைத்தார். ஆகக் காங்கிரஸ் மகாசபைக்கு ஆதிநாயகர் ஓர் ஆங்கிலப் பிரபு என்பது பலருக்குத் தெரியும். ஆனால் அவருக்கும் மூலகாரணமாயிருந்தவர் பூரணானந்த சுவாமிகள் என்பது அல்மோராவில் உள்ள இரண்டொரு விருத்தாப்பியர்களைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது.

திருக் கயிலாயத்துக்குப் போகின்றவர் அல்மோராவில் சுமார் ஒரு வாரம் தங்கியிருக்கவேண்டும். அத்தனை நாட்களுக்கும் அவர்களுக்கு அங்கு அலுவல் உண்டு. சாமான்களைச் சுமந்து செல்லுதற்குக் கூலியாட்கள் உடனே அகப்படமாட்டார்கள். அல்மோராவில் தக்க உதவியைக்கொண்டு முதலில் அவர்களை நியமிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். ஒரு கூலியாள் அறுபது பவுண்டு நிறையளவும், ஒரு குதிரை நூற்றிருபது பவுண்டு நிறையளவும் சாமான் எடுத்துச் செல்வது வழக்கம். பெட்டி

படுக்கை, மூட்டை முதலியவைகளை அதற்கேற்ற வாறு அமைப்பது அவசியம். குதிரையின்மீது போகும் சாமான்கள் பெரிதும் பழுதுபடுகின்றன. ஆதலால் உடையக்கூடிய பொருள்களை அதன்மீது ஏற்றலாகாது. பின்பு கூலியாட்களோடு இடை யிடையே போராடாது பயணம் பண்ணமுடியாது. யாத்திரை வாசிகள் அதற்கு ஆயத்தமாயிருக்க வேண்டும். அவர்களின் உபத்திரவத்தை முன் னிட்டு மனஞ்சலித்துக்கொள்பவர் இந்த யாத்திரைக் குத் தகுதியுடையவரல்லர்.

அல்மோராவினின்று கயிலைக்குச்சென்று திரும் பவும் அல்மோராவுக்கு வர ஏழு வாரம் பிடிக்கும். ஆதலால் உணவுப் பொருள்களை எட்டு வாரத்துக் குத் திட்டப்படுத்தி வைத்துக்கொள்ள வேண்டும். ஏனென்றால் வழியில் எதிர்பாராத இடைஞ்சல் ஏதாவது நேர்ந்து விட்டால் குறிப்பிட்ட காலத்தில் திரும்பி வந்து சேரமுடியாது. எவ்வளவு விலை கொடுத்தாலும் நமக்குத் தேவையாயுள்ள உணவுப் பொருள்கள் வழியில் அகப்படா. சிரமப்பட்டு நடந்து செல்வதுபற்றி மீதாண் விருப்பம் இயல்பாகவே உண்டாகும். அதில் குற்றமொன்றுமில்லை. சத் துள்ள ஆகாரத்தைச் சரீரத்துக்குத் தேவையா யிருக்குமளவு சாப்பிட்டே ஆகவேண்டும். கம்பளங் கள், கம்பள உடைகள், பாதரட்சைகள் முதலியவை களை வேண்டியவாறு சேகரித்துக் கொள்வது அவ சியம். கூர்மையான இரும்புப் பூண்போட்ட ஊன்று கோல் அல்மோராவில் அகப்படும். உயிர்த்துணை போன்ற இவ்வூன்றுகோல் இல்லாது யாரும் அவ்

வழியைக் கடக்க முடியாது. இதன் ஆவசியகம் பின்னால் விளக்கப்படும். மருந்து வகைகள் சிலவற்றைக் கட்டாயமாய் எடுத்துக் கொண்டு போகவேண்டும். மலைப் பிரதேசங்களில் அப்போதைக்கப்போது உண்டாகும் பிணிகளுக்கு அவைகள் இன்றியமையாதவைகள். அவ் ஔஷதங்களின் விவரம் அல்மோராவில் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம். முன் காலத்தில் யாத்திரை செய்தவர்களுக்குப் போதிய அளவு உணவும், உடையும், மருந்தும் இல்லாதிருந்ததால் அவர்கள் யாத்திரையைப் பூர்த்தி பண்ண முடியவில்லை. இவ்வசதிகள் யாவும் வாய்க்கப்பெற்ற இக்காலத்தில் அவைகளை நன்கு கையாளுதலே முறை.

அல்மோராவில் வந்து கூடிய யாத்திரைவாசிகள் மாகாணவாரியாக நான்கு கூட்டங்களாகப் பிரிந்து கொண்டனர். சென்னைவாசிகள் என்ற முறையில் நாங்கள் ஒன்பதுபேர். பம்பாய்க் கூட்டத்தில் ஏழுபேர். வங்காளிகள் ஐவர். ஐக்கிய மாகாணத்தார் எட்டு பேர். இவர்கள் அனைவரும் ஏககாலத்தில் புறப்பட்டால் வழியில் ஜாகைகளில் தங்குதற்கு இடம் போதாது. ஆதலால் நான்கு கூட்டங்களும் முதல் நூற்றைம்பது மைலுக்கு முன் பின்னாகச் செல்ல வேண்டுமென்றும், பிறகு உறை பனிப் பிரதேசத்தில் வீடு இல்லாத பாகங்களில் கூடாரவாசம் செய்ய ஆரம்பிக்கும்போது எல்லோரும் சேர்ந்து போக வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. ஜூன் மாதம் பத்தாந்தேதி காலையில் சென்னைக் கூட்டம் மற்ற கூட்டங்களுக்கு முன்பு

புறப்படுவதாக ஏற்பாடு. ஆனால் ஒன்பதாந்தேதி முழுதும் அல்மோராவில் அடித்த காற்றும் மழையும் யாத்திரை வாசிகளின் உற்சாகத்தைச் சோதனை செய்வனவாயிருந்தன.

பத்தாந்தேதி காலையில் ஆகாயம் பரிஷ்காரமாயிருந்தது. அதற்கேற்றபடி மனதிலும் பேருவகை. ஆடம்பரமான ஏற்பாடு. கூலியாட்களுக் கிடையில் ஒரே அமளி. சாமான்களை நிறையெடுத்து அவர்கள் வசம் ஒப்புவிப்பதற்குள் அல்மோரா ஸ்ரீ ராமகிருஷ்ண ஆசிரமத்துக் காரியதரிசிக்குப் பிராண சங்கடமாய் விட்டது. ஆசிரமத்துப் பெரியார்களிடமிருந்து பத்துமணிக்கு விடை பெறுகிறோம். அவர்கள் ஆசீர்வதித்து வழி யனுப்புகின்றனர். "நல்ல துவக்கம் பாதிவெற்றி" யென்று ஒருவர் உற்சாகமூட்டுகிறார். முறைப்படி செய்யவேண்டிய தீர்த்த யாத்திரை இப்போது ஆரம்பிக்கிறது. நெடுநாளாக ஆவலுடன் எண்ணியிருந்தது இப்போது காரியப் படப்போகிறது என்று குதூகலம் ஒருபக்கம்; யாத்திரையில் உள்ள கஷ்டங்களைப் பற்றிய எண்ணம் மற்றொரு பக்கம். ஆனால் கயிலாயநாதனது கிருபையால் எல்லாம் நன்கு நடைபெறும் எனும் நம்பிக்கையுடன் அவனைச் சிந்தைசெய்துகொண்டு வழி நடக்க ஆரம்பிக்கிறோம்.

## 4

நல்ல காரியத்தில் யாராவது பிரவேசித்தால் அது நல்லார் அனைவருக்கும் சம்மதமாயிருப்பது மன்றித் தாங்களே அதில் பிரவேசித்தாலன்ன அன்னவர் அதில் ஊக்கம் காட்டுவர். நாங்கள் கயிலையை நோக்கி

அல்மோராவின் முக்கியமான வீதியின் வழியாக நடக்கிறோம். அவ்வூராரில் பலர் எங்களைக் கயிலை யாத்திரை வாசிகளென்று ஒரு வாரத்துக்குள் தெரிந்துகொண்டனர். வீதியில் எங்களைப் பார்ப்பவர்கள் உவகையுடன் ஆசிகூற ஆரம்பிக்கின்றனர். "கயிலாசபதிக்கு ஜயம்" எனும் கோஷம் அடிக்கடி முழங்குகிறது. தங்கள் வேலைகளை நிறுத்திவிட்டுப் பலர் ஆனந்தகரமாக யாத்திரைவாசிகளை உற்று நோக்கிக்கொண்டு நிற்கின்றனர். இங்ஙனம் அல்மோராவாசிகள் அனைவராலும் அனுமதிக்கப்பட்டவர்கள் போன்று நாங்கள் அவ்வூரை விட்டு வடதிசையாக வெளியேறுகின்றோம்.

### அல்மோராவிலிருந்து பரிச்சீனு வரை—8 மைல்

ஊரைவிட்டு வெளியே வந்ததும் பாதை குறுகி விடுகிறது. வண்டி முதலியவைகள் அதன்மீது செல்லா. நடந்துசெல்லும் மனிதருக்கும், மூட்டை சுமக்கும் குதிரைகளுக்குமே அவ்வழி உரியது. இந்த எட்டு மைல் தூரத்துக்கும் செங்குத்தான ஏற்றமும் இறக்கமும் கிடையா. வழிமுழுவதும் சமதரையாகவே இருக்கிறது. மர எண்ணெய் (Turpentine) எடுப்பதற்கு உதவுகின்ற பயின் மரங்கள் (pine tree) ஏராளமாய்க் காணப்படுகின்றன. அவற்றின் வனத்தினுள்ளேயே வழி வளைந்து வளைந்து போகின்றது. அம்மரங்களினின்று கமழும் மணம் ஒருவாறு மனதுக் குகந்தது. இடையிடையே மலைச்சாரலைச் சமப்படுத்திச் சாகுபடியும் செய்திருக்கின்றனர். பழவகைகளை உண்டுபண்ணும் தோட்டமும் ஒன்று இவ்வழியில் இருக்கிறது. இடையிடையே சிற்றாறு

களும் அவைகளின் அருகாமையில் சிறு சிறு தேவாலயங்களும் தென்படுகின்றன. இங்குள்ள மலைகளெல்லாம் பெரிதும் மொட்டையாக இருக்கின்றன. சாவதானமாய் நடந்த நாங்கள் மாலை ஐந்து மணிக்கு பரிச்சீனுவுக்குப் போய்ச்சேர்ந்தோம். நடக்க இயலாத ஒருவர் குதிரைச் சவாரி செய்து வெகு நேரத்துக்கு முன்னதாகவே தங்குமிடம் போய்ச் சேர்ந்திருந்தார். வேகமாய்ச் சென்ற தன் பெருமையை அறியலா மென்றிருந்த எங்களுக்கு அவர் கதையைக் கேட்டு அனுதாபப்படுவதா அல்லது விலாப்புடைக்க விழுந்து சிரிப்பதா என்று விளங்கவில்லை! ஹிமயமலையில் வாடகைக்கு என்று வைக்கப்பட்டிருக்கும் குதிரைகள் பொதுவாக மாதம் காதவழி போகக்கூடியவைகள். ஆனால் நமது நண்பர் குதிரையின்மீது ஏறியதும் அதன் விரைவைக் காட்டவிரும்பிய குதிரைக்காரன், அதை அடித்து விரைந்து ஓட்டிக்கொண்டுபோய்விட்டான். அவருக்குக் குதிரைச் சவாரி செய்யத் தெரியாதிருந்ததில் குற்றமொன்றுமில்லை. ஆனால் ஹிந்தி பாஷையில் மருந்துக்குக்கூட அவருக்கு ஒரு வார்த்தையும் தெரியாது. ஆங்கிலத்தில் அல்லது தமிழில் இவர் சொல்வதையெல்லாம் அவன் நேர்மாறாக அர்த்தம் பண்ணிக்கொள்கிறான். நிறுத்தச் சொன்னால் ஓட்டுகிறான்; மெதுவாகப் போகவேண்டுமென்றால் துரத்துகிறான். அவர் செய்யும் ஊமைச் சாடைகளைக் குதிரைக்காரன் மெச்சுதலுக்கு அறிகுறியாக வைத்துக் கொள்கிறான். மொழி தெரியாத ஊரில் ஒருவர் முதன் முதல் செய்த குதிரைச் சவாரியின் அனுபவம் இது.

### பரிச்சீனுவிலிருந்து கனெரிச்சீனுவரை—11 மைல்

அடுத்த நாள் காலையில் ஆறு மணிக்கு பரிச் சீனுவிலிருந்து யாத்திரை துவக்கப்பட்டது. முதல் ஒரு மைலுக்கு வழி சமனுயிருக்கிறது. பிறகு மூன்று மைலுக்கு ஓர் எற்றமும், நான்கு மைலுக்கு ஓர் இறக்கமும் இருக்கின்றன. இப்பக்கங்களில் பல இடங்கள் 'சீனு' என்று சொல்லப்படுகின்றன. இரண்டு பள்ளத் தாக்குகளுக்கிடையில் உள்ள ஒரு மேட்டுப்பாங்கான இடத்துக்குச் சீனு என்று பெயர். கனெரிச்சீனுவில் ஆங்காங்கு நெல் சாகுபடி செய்யப் படுகிறது.

### கனெரிச்சீனுவிலிருந்து கனுப்வரை—12 மைல்

நெடுந்தூரத்துக்கு ஓர் ஓடையோரமாக வழி செல் கின்றது. பெரும் பகுதியில் அது கரடுமுரடாயும் இருக்கிறது. சுமார் ஐந்து மைல் சென்ற பிறகு, அழ கிய தொங்கும் பாலம் ஒன்றன் வாயிலாக சரயூநதி கடக்கப்படுகிறது. இதுவரையில் கடந்த நதிகளுள் இதுவே மிகப்பெரியது. இதைத் தாண்டியதும் நான்கு மைல் தூரத்துக்கு ஓர் ஏற்றம் இருக்கிறது. அடர்ந்த வனத்தினுள் வளைந்து வளைந்து வழி மேல் நோக்கிப் போகிறது. வனத்தில் உண்டாகிய நெல் லிக்காயும், கடுக்காயும் இங்கு ஏராளமாய்ப் பாதை யில் வீழ்ந்து கிடக்கின்றன. உச்சியில் ஓங்கி வளர்ந்த 'பயின்' மரங்களும் அவைகளுக்கிடையில் ஓர் அழகிய கிராமமும் உண்டு. அதைக் கடந்ததும் இரண்டு மைலுக்கு இறக்கம். பின்பு பாதை பெரி தும் சமமாக இருக்கிறது.

கனுயில் ஜல சௌகரியம் போதாது. ஒரு குடம் ஜலத்துக்கு ஓர் அணு வீதம் கூலி கொடுத்துத் தண்ணீர் ஓர் அழகான பள்ளத்தாக்கினின்று கொண்டு வரப்பட்டது. நதிகளுக்கெல்லாம் உற்பத்தி ஸ்தானமாகிய ஹிமயமலையிலுங்கூட சில இடங்களில் தண்ணீர் விலைக்கு வாங்க வேண்டியதாயிருக்கிறது. கனுயைப் போன்று இன்னும் சில இடங்களிலும் இதே கஷ்டம் ஏற்பட்டது. கீழே பாதாளத்தில் நதி சலசலவென்று ஓடிக்கொண்டிருக்கும். தங்கியிருக்குமிடத்திலிருந்து அதைக் கண்ணால் காணலாம்; ஆனால் செங்குத்தான மலையில் அந்நதிக்குச் செல்லுதற்குப் பாதை யிராது. சிற்றாறலிலிருந்து வரும் சேற்று நீரைக்கொண்டே திருப்தியடைய வேண்டியதுதான். இயற்கையில் கண்ணுக்குத் தென்படுபவைகளெல்லாம் கைக்கு அகப்படக் கூடியவைகளல்ல எனும் உண்மையை இந்நதிகளே நமக்கு ஞாபக மூட்டுகின்றன.

### பாதிரிமார் பிரசாரம்

ஹிமயமலையில் நாங்கள் இது பரியந்தம் காணுத காட்சியொன்று ஒரு கிராமத்தின் கடைத்தெருவில் கண்ணுக்குத் தென்பட்டது. பத்து வயதுக்கு மேற்பட்டு இருபது வயது வரையில் உள்ள கன்னிமார் சுமார் இருபது பேர் வயதுக்கு ஏற்ப மூன்று அணியாக நின்றுகொண்டு முகத்துக்குச் சவுக்காரமிட்டுத் தேய்த்து அலம்பிக் கொண்டிருந்தனர். நாகரிகமாக உடை யணிந்திருந்த அவர்களுடைய பாவனையில் புதுமை யொன்று தென்பட்டது. தமது சொந்த அலுவல்களையே கவனித்துக் கொண்டு போகின்ற

வழிப்போக்கர்களது கவனத்தையும் கவரவல்லதா யிருந்தது அக்காட்சி. உருவத்தில் மலைவாசிகளைப் போல் இருப்பினும் நடையுடை பாவனையில் முற்றும் வேற்றூர்களாகத் தென்பட்ட அக்கன்னிகைகள் யாவர் என்று நாங்கள் வினவினோம். கிறிஸ்தவ மதப்பிரசாரகச்சிகள் அங்கு ஓர் இடத்தில் ஒரு நிலையம் ஏற்படுத்தி யிருக்கின்றனர் என்றும், அதைச் சார்ந்த பெண் மக்களாகிய அவர்களைப் பிரசாரத் தின் பொருட்டு ஊர் ஊராய் அழைத்துச் செல்கின் றனர் என்றும் பதில் வந்தது.

மலைவாசிகளுக்குச் சரீரத்தை சுத்தமாக வைத் துக் கொள்ளத் தெரியாது என்பது உண்மை. ஆனால் இயல்பில் பழையதுக்கும் புதியதுக்கும் உள்ள வேற்றுமையை அக்கிறிஸ்தவக் காட்சி நன்கு விளக்கிக் காட்டிற்று. உலக நாயகியாகிய உமையவளுக்கு மலைமகள் என்று ஒரு பெயர் உண்டு. மலைமகள் கள்ளம் கபடு அற்றவள். தாய் மையே வடிவெடுத்தவள் என்பது இன்றைக்கும் ஹிமயமலைக்குப் போகின்றவர்களுக்குத் தெரியும். உமாதேவியின் வடிவாக அங்கு இலங்கும் குறத்தி களைப் கோது இல்லாக் கோதையர் என்பது முற் றும் ஒவ்வும். புதுமையில் பழகிச் செயற்கை யழகை வருவித்துக் கொண்ட அக்கிறிஸ்தவக் கன்னிமார் களின் முகவிலாசத்தினின்று இனிமையும், தூய்மை யும், சாந்தமும் எங்கேயோ பறந்தோடிவிட்டன; துணிவும், பகட்டும், செருக்கும் ஒன்றுசேர்ந்து தெய் வத்தன்மையைப் பாழாக்கி விட்டன. ஏசுநாதர் புகட்டிய பெருவாழ்வு என்று இதைச் சொல்வது

எங்ஙனம்? பகட்டை யெல்லாம் துறந்து விட்டுப் பாலகரைப் போன்று ஆனலொழிய இறைவனது அருளைப் பெறமுடியாது என்று அவர் புகட்டிய தற்கும் அவர் பெயரால் இவர்கள் செய்யும் அலங் கோலத்துக்கும் எவ்வளவு தூரம்!

### கனுயிலிருந்து பெரிநாகு வரையில்—12 மைல்

இயற்கையின் அழகு இங்கே அதிகரிக்க ஆரம்பிக்கிறது. முற்பகுதியில் பாதை பெரிதும் சமனுகவே இருக்கிறது. வனங்களில் கறிவேப்பிலை மரங்கள் ஏராளமாயிருக்கின்றன. வழி முழுதும் ஓடைகள் பல தென்படுகின்றன. அவைகளின் இருமருங்கிலும் விவசாயத்துக்காகப் பண்படுத்தப் பட்ட பூமிகள் பார்க்கத் தகுந்தவைகள். கோதுமையை மாவாக அரைப்பதற்கு எந்திரம் நீரின் வேகத் தால் சுழற்றப்படுகிறது. இத்தகைய கருவி அனேக நூற்றூண்டுகளாக ஹிமயமலையில் கையாளப்பட்டு வருகிறது. நீராவி யந்திரம் போன்று எளிய முறை யில் சுலபமாகச் செய்யப்பட்ட நீர் யந்திரம் மனித னுக்கு மாவை அரைத்துக் கொடுத்துவிடுகிறது. சில இடங்களில். மலையானது சுவர் போன்று செங்குத் தாக ஆகாயத்தை அளாவிக்கொண்டு நிற்கிறது.

அல்மோராவிலிருந்து கயிலாயத்துக்குப் போகும் வழியில் ஒன்பது பெரிய ஏற்றங்கள் இருக்கின்றன அப்பக்கங்களில் அவர்களுடைய பாஷையில் ஏற்றத் துக்குச் 'சடாய்' என்று பெயர். அவ்வாறே இறக் கத்துக்கு 'உத்தராய்' என்று பெயர். ஒன்பதில் முதலாவது ஏற்றம் கனுயிலிருந்து பெரிநாகுக்குப்

போகும் வழியில் பெரிநாகை ஒட்டியதாய் இருக்கிறது. பெரிநாகின் உயரம் சமுத்திர மட்டத்துக்கு மேல் 7000 அடி ஆதலால் அதன் அருகில் ஏற்றம் இருப்பது இயல்பு. சுமார் மூன்று மைல் தூரம் மேலே வளைந்து வளைந்து ஏறவேண்டும். பாதாளத்தில் நாம் இருப்பதையும் ஆகாயத்தில் பெரிநாகு இருப்பதையும் சீர்தூக்கிப் பார்த்தால் பிரமை பிடித்துப்போம். ஆதலால் அதையெல்லாம் மறந்து விட்டு அப்போதைக்கப்போது கண்ணெதிரே தோன்றும் சிறு தூரத்தை மட்டும் சிந்தையில் வைத்துக்கொண்டு குதூகலமாகத் தொத்தியேறுவது உத்தமம். உற்சாகமுடையவர்க்கு வாழ்க்கையில் சிரமம் குறைவு என்பதும், இடுக்கண் உற்றவிடத்தெல்லாம் மனம் சலித்துக் கொள்பவர்களுக்கு சிரமம் அதிகம் என்பதும், இதுபோன்ற ஏற்றத்தின் மீது ஏறுபவரது மனநிலையினின்று தென்படும். பெரிய பயின் மரங்கள் கம்பீரமாக நின்று கொண்டிருக்கின்றன. விண்ணுலகுக்குப் போகும் வழி முழுதும் மண்டபம் கட்டப்பட்டதுபோன்று, இம்மரங்கள் அமைந்திருக்கின்றன. அணியணியாய் நிற்கும் இந்த அழகிய ஸ்தம்பங்களினின்று நாலா பக்கமும் கிளைகள் பிரிந்துபோய்த் தனித்துத் தளம்போன்ற வடிவு படைத்திருக்கின்றன. அடர்ந்த அடவியாயிருந்தால் குளிரும் சேர்ந்திருக்கும்; ஒரே வெட்ட வெளியாயிருந்தால் சூரிய வெப்பம் அதிகரிக்கும். இச்சோலையோ நிழலுக்கும் வெயிலுக்கும் நடுத்தரமானது. வெப்பமும் வெளிச்சமும் வடிகட்டி அளவாக உள்ளே விடப்படுகின்றன. இடையிடையே வீசும் மந்தமாருதம்

மேனியின் களைப்பை களைகின்றது. கொஞ்சம் பொறுத்துப் பொறுத்துப் பிறக்கும் புள்ளினங்களின் குழலோசை போன்ற கானம் காதுக்கு அமுதூட்டுகிறது. சமாதானப் பிரியராகிய சிவனாருக்கே உற்ற இடம் என்று அதைச் செப்புதல் வேண்டும். அவரது சபாமண்டபம் போன்ற அதன் வழியாக ஏறிச் செல்லுகையில் சரீர உணர்ச்சியே இல்லையென்றால் அதன் சிரமம் மனதை வந்து பாதிப்பது எங்ஙனம்? பெரிநாகு என்பது மலையுச்சியின் மீதுள்ள ஓர் அழகிய ஊர். அதன்மேல் அரசாங்கத்து வன இலாகாவைச் (Forest Department) சேர்ந்த வீடு ஒன்று இருக்கிறது. அவ்வீட்டின் கண் ஒருநாளாவது வாசஞ்செய்து பார்த்தால் அது சுவர்க்க வாசத்திற்கு ஒப்பாகும் என்பது விளங்கும். ஹிமயமலையின் பேரழகை விளக்கிக் காட்டக்கூடிய சில இடங்களில் ஒன்று இது. நான்கு திசைகளிலும் கண்ணுக்கு எட்டிய அளவு மலையடுக்குகள் இங்கிருந்து தென்படுகின்றன.

## ஹிமயமலையில் இரவு வேளை

யோகியர் போகியர் ஆகிய இருவரும் இரவுவேளையில் தத்தம் வேலையின் பொருட்டு விழித்திருப்பர் என்று சொல்லப்படுகிறது. யோகசாதனத்தில் கொஞ்சமாவது இச்சையுடையவர் ஹிமயமலைக்குச் சென்று இரவில் தியானம் செய்ய முயலுவார்களானால், இடத்தால் ஏற்படும் உதவி யாது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போன்று அவர்களுக்கு விளங்கும். பூவுலகம் என்று சொல்லப்படுவது எங்கும் ஒரே மயமாய் இல்லை. இப் பூவுலகமே சில இடங்களில்

சுவர்க்கத்துக்குச் சமனுயிருக்கிறது. ஹிமய மலை முழுவதும் சிவபெருமானது வடிவம் என்பது பரம உண்மை. அங்குச் சென்று அதன் உதவியை நாடுபவர்க்கு சிவசேதனம் தெளிவு பெறுகிறது. எண்ணிறந்த பெரியோர்கள் எண்ணிய சீரிய எண்ணங்களெல்லாம் அங்கு உறைந்து மறைந்து கிடக்கின்றன. அந்த உணர்ச்சித் திரளில் ஒன்றியிருக்க முயலுபவர்க்கு ஹிமயமலையில் யோக விழிப்பு எளிதில் உண்டாகிறது.

இராக்காலத்தில் அங்குச் சாந்தம் அரசாளுகிறது. அயர்ந்து உறங்கும்போது உண்டாகும் சாந்தத்தைப் போன்றதன்று அது; பூரண விழிப்போடு கூடியது அது. இயற்கைத்தாய் மனதை இனிய உற்சாகத்தில் குளிப்பாட்டிவிடுகிருள். தென்படுகிற யாவும் சமாதியில் திளைத்திருப்பது போன்றிருக்கின்றன. மனதினின்று ஆனந்தம் ஊற்றெடுத்து ஓடுகிறது. சரம் அசரம், சேதனம் அசேதனம் என்னும் பேதம் அங்கு அடிபட்டுப் போகிறது. மனிதனிடத்து எவ்வளவு மகிமை இருக்கிறதோ அவ்வளவு மகிமை இயற்கை யெங்கும் பொலிகிறது. காலத்தின் அளவைக்கு ஆங்கு இடமில்லை. அதே அமைதியான ஆனந்த நிலையில் கற்பகோடி காலம் வேண்டுமானுலும் அமர்ந்திருப்பதில் மனதுக்குச் சம்மதம். கரை காணுதவாறு அதனூடு மேலும் மேலும் இனிமையும், தெளிவும், சாந்தமும் பெருகிக் கொண்டே போகின்றன. ஹிமயமலையை ஆதாரமாகக் கொண்டுள்ள மரம், செடி, கொடி, மிருகம் பறவை முதலியவைகளினின்று இடையிடையே

எழும் மெல்லிய ஓசையானது மனதை மேலும் பரவச நிலைக்கு உந்திச் செல்லுகிறது. மனது ஒன்று மட்டும் இயைந்து வருமாயின் அதை உடனே சிவ சான்னித்தியத்தில் கொண்டுபோய் அமர்த்திவிடக் காத்திருப்பவைகள் போலக் காணப்படுகின்றன ஹிமாசலத்து வாழ்வன யாவும். இந்த மலைக்கு இரவில் எங்கிருந்து தான் இத்தகைய அருட்பொலிவு வருகிறது! மானுடா, நீ அதிவேகமாகத் தெய்வத் தன்மையைப் பெற்று, அதிலேயே திளைத்திரு எனும் செய்தியை ஹிமயமலை இரவெலாம் ஓயாது உபதேசித்துக் கொண்டிருக்கிறது.

## 5

### பெரிநாகிலிருந்து தால்வரையில்—10 மைல்

ஆங்கிலேயர் ஒருவருடைய தேயிலைத் தோட்டமொன்று பெரிநாகில் இருக்கிறது. இதன் அருகாமையில் பாதை கீழ்நோக்கி இறங்குகிறது. சுமார் ஏழு மைல் தூரத்திற்கு இலேசான இறக்கம். வனங்கள் வழி முழுவதும் தென்படுகின்றன. ஈண்டு இயற்கை யமைப்பு சிரமம் தோன்றாது செல்லுதற்கு ஏற்றது. சீரிய எண்ணங்களை எண்ணிக் கொண்டு சரீரத்தைப் பற்றிய சிந்தை சிறிதுமிலாது வழியே ஏகலாம். தால் எனும் ஊருக்குப் பக்கத்தில் மூன்று மைல் பரியந்தம் சாமானிய ஏற்றம். ஊர் ஓரத்தில் ராம்கங்கா எனும் நதி ஓடுகிறது. இதைக் கடக்க அழகியதொரு ஊஞ்சற் பாலம் உண்டு. உருகிய பனிக் கட்டி எத்தகைய தெளி நீராகத் திரண்டு வருகிறது என்பது இந்நதியில் விளங்கும். அது அமைதியாக ஓடும்போது ஆகாயம்

போன்றிருக்கும்; அலை யெறியும்போது எங்கிருந்தோ அதற்கு வெளுத்த பச்சை நிறம் வந்துவிடுகிறது. சில இடங்களில் விதவிதமான வர்ணம் தீட்டி மெருகிட்ட கூழாங்கற்கள் பரவப் பட்டிருக்கின்றன. அவைகளின்மீது குதித்தும், சுருண்டும், புரண்டும் ஓடும்போதுதான் புனலின் பொலிவு உச்சஸ்தானம் பெறுகிறது. இன்னும் கதிரவனது கிரணங்கள் அதன்மீது படியும்போது அதை வருணிப்பது சாத்தியமன்று. எண்ணிறந்த வருணங்கள் ஏககாலத்தில் ஓரிடத்தில் கூடி அழகில் ஒன்றோடொன்று போட்டி போடுவது போன்றிருக்கிறது அக்காட்சி.

நதியைத் தாண்டியதும் அழகியதொரு சிவாலயம் தென்படுகிறது. பிறகு சிறிது தூரம் உயர ஏறினால் தால் எனும் ஊருக்குள் வந்துவிடுகிறோம். கயிலாய யாத்திரை வாசிகள் அங்குத் தங்குவதற்குப் பாடசாலையில் எப்போதும் இடம் கிடைக்கும்.

### தாலி லிருந்து டிடிஹட் வரையில்—10 மைல்

கயிலைக்குப் போகும் வழியில் உள்ள ஒன்பது ஏற்றங்களில் இரண்டாவது ஏற்றம் இங்கு உளது. நடக்க ஆரம்பித்ததும் ஊரின் வீதியிலிருந்தே இவ்வேற்றம் துவங்குகிறது. ஐந்து மைல் தூரத்துக்கு ஒரே செங்குத்தான மலையின்மீது ஏறவேண்டும். அதிகாலையில் நடப்பதில் அதிக சிரமம் இல்லை. அக்காரணத்தை முன்னிட்டு ஐந்து மணிக்கு முன்பே வழி நடத்தல் ஆரம்பிக்கப்பட்டது. ஆயினும் வழியில் உள்ள கஷ்டங்களின் முதலாவது அனுபவம் இவ்விடத்து உண்டாயிற்று எனலாம். சாதாரணமாக

ஐந்து மைல் நடப்பது தேக திட்பம் உடைய வர்க்கு விளையாட்டுப் போன்றது. ஆனல் இந்த ஏற்றத்தில் புதுமையொன்று புலப்பட்டது. மேல் நோக்கிச் செல்லச் செல்ல மலையுச்சியும் உயர்ந்து கொண்டேபோயிற்று. ஜனசமூகம் நாகரிகம் அடை வதற்கு ஒப்பாக இதைச் சொல்லவேண்டும். பழைய காலத்து மனிதர்களை விடத் தாங்கள் எவ்வளவோ தூரம் முன்னேற்ற மடைந்திருப்பதாக எண்ணுப வர்கள் இன்னும் கொஞ்சம் ஆழ்ந்து எண்ணிப் பார்த்தால் தங்களுக்கும் மேலான நாகரிகத்துக்கும் வெகுதூரம் என்பதை உணர்வார்கள். அவ்வுண் மைக்கு உருவம் கொடுத்தாற்போன்று மேல்நோக்கி ஏற ஏறப் பாதையும் இன்னும் முடிவிலாது வளர்ந்து கொண்டே போயிற்று.

சற்று மேல்நோக்கிச் சென்றதும் இதுவரையில் காணுத காட்சியொன்று தென்பட்டது. காலைக் கதிரவன் அப்பொழுதுதான் உலக க்ஷேமத்தை விசாரிப்பவன் போன்று வெளியே வந்துளான். அவனது முதற்கிரணங்களால் தோயப்பெறும் பெருமை மூன்று சிகரங்களுக்குமட்டும் கிடைத்தது. அச்சிகரங்களின் பெயர் முறையே நந்தாதேவி, பஞ்ச சூலி, பிண்டரி என்பவைகளாம். அவை யாவும் வெகுதூரத்தில் பெரிய ஹிமயத்தில் இருப்பவைகள். சர்வகாலமும் பனிக்கட்டியால் மூடப்பெற்றவைகள் அவைகள். சாதாரண வேளைகளிலேயே அவை களைக் காணுங்கால் கண் குளிர்கிறது; உள்ளம் உவக்கிறது. பின்னும் பாலசூரியனது செங்கதிர் மாலை சாத்தப்பட்டிருக்கும்போது அச்சிகரங்களின்

சிறப்பைப்பற்றிச் சொல்வானேன்! மனதுக்கு அவைகள் புதியதோர் உற்சாகத்தை ஊட்டுகின்றன. மாறுபடும் பொருள்களுக்கிடையில் மனதும் அம்மலைகளைப் போன்று மாருதிருக்க வேண்டும் எனும் உணர்வு ஓங்கப் பெறுகிறது. அவைகளின் மகிமையைச் சிந்தித்துக் கொண்டு செல்லும்போது காலின் நலிவு மாயமாய்ப் பறந்தோடி விடுகிறது. வருத்தங்களுக் கிடையில் உவப்பு ஏற்படாவிடின் வாழ்க்கையே பெரும் பாரமாய் விடுமன்றோ?

ஐந்து மைல் மேலேறுதற்குள்ளாக வழிப் போக்கர்கள் தத்தம் ஆற்றலுக்கு ஏற்ப முன்பின்னுகப் பிரிந்து விடுகின்றனர். பாக்கியிருக்கும் ஐந்து மைல் தூரமெங்கும் ஒரே அடவி. இராக்காலங்களில், கரடி வேங்கை, வரிப்புலி முதலியவைகளின் ஆட்சிக்குரிய இடம் அது. அச்சமுடையோர் பகலிலுங்கூடத் தன்னந்தனியாய் அதனுள் செல்ல ஒருப்படார். வனத்தினுள் நடப்பது, தண்ணீரில் மூழ்குவதற்கு ஒப்பாகும். நீர் நிலையின் அடிப்பாகம் பத்தடியிருந்தால் அதைத்தொடமுயலுபவனுக்கு இருபது அடி ஆழமாகத்தோன்றும். அவ்வாறே வனத்தினுள் சிறிது தூரம், நெடுந்தூரம்போன்று தென்படும். ஐந்து மைல் அடவியினுள் ஒடுங்கிய பாதையினூடு வளைந்து வளைந்து போவது ஓயாததொரு பயணம் போன்று காணப்படும். மரக்கிளைகளால் சூழப்பெற்று சூரிய வெளிச்சத்தைக் காணுத இடங்கள் ஈண்டு எத்தனையோ உண்டு. ஒடுங்கியது எனினும் உள்ளது ஒரேபாதையாதலால், வழி பிசகிப்போதல் என்பது கடல்போன்ற அக்காட்டினுள் இல்லை.

அதில் ஏகாந்தமாய் நடப்பதில் இனிமையொன்று உண்டு. பிறவிப் பெருங் கடலை நீந்துவது போன்றது அது. உள்ளத்துக்கு உற்சாக மூட்டுவது இறைவனது நாமம். வெளியில் வனமெங்கும் சில வண்டுகள் "சல் சல்———சல் சல்" என்று ஒரு மித்து ஓலமிடுகின்றன. ஹிந்தி பாஷையில் "போ போ.......போ போ" என்பது அதன் பொருள். 'கயிலாயபதியின் திருவடியைச் சீக்கிரம் சென்று காண்' என்று அவைகள் நம்மைத் துரிதப்படுத்துவது போன்றிருக்கிறது அத்தொனி.

டிடிஹாட் எனும் ஊரை அணுகும்போது வனத்தின் நெருக்கம் கொஞ்சம் குறைந்து விடுகிறது. இந்த ஊருக்கு சாந்தியோ என்பது மற்ரொரு பெயர். இங்கிருந்து இயற்கையின் தோற்றம் நாலாபக்கமும் வனப்புவாய்ந்த தாயிருக்கிறது. தங்குதற்கும் பள்ளிக் கூடத்தில் இடம் தரப்பட்டது. மாலையில் மாணாக்கர்களும் உபாத்தியாயர் ஒருவரும் எங்களைப் பார்க்க வந்திருந்தார்கள். அவர்களிற் பெரும்பாலார் கதர் உடையணிந்திருந்தனர். பிள்ளைகள் பாடிய தேசியப்பாட்டு அருமையாயும் உணர்ச்சி யூட்டக்கூடிய தாயுமிருந்தது. தேசத்தில் நடைபெறும் சம்பவங்களையெல்லாம் நன்கு அறிந்திருந்தவராக உபாத்தியாயர் தென்பட்டார். டிடிஹாட்டில் ஜலவசதி போதாது.

### டிடிஹாட்டிலிருந்து ஆஸ்கோட்டை வரையில்—9 மைல்

வழியில் வியக்கத்தக்க காட்சி யொன்று மில்லை; பாதை பெரிதும் சமனாகவே இருக்கிறது. " ஆஸ்

கோட்" என்பது இவ்வூரின் பெயர். கோட் எனும் சொல்லுக்குக் கோட்டையென்று பொருள். முன்பு ஒரு காலத்தில் இதைச் சுற்றிலும் எட்டுக் கோட்டை களிருந்தன. அவைகளுக்குள் முக்கியமானது இது. அஷ்டகோட் என்பது ஆஸ்கோட் என்று திரிவு பட்டது. இன்றைக்கும் இவ்வூர் ஒரு கோட்டை போன்று இருக்கிறது. இங்கு ஒரு ராஜா இருக்கிறார். அவர் பெயர் ராஜ்வார் விக்கிரம பகதூர்பால். திருக் கயிலாயத்துக்கு யாத்திரை போகின்றவர்களுக்கு அவர் பலவிதத்தில் உதவி புரிகின்றார். பூட்டியா வியாபாரிகளிடத்து அவருக்குச் செல்வாக்கு மிக வுண்டு. ஆஸ்கோட்டையில் தங்குவதற்கு வசதியான நல்ல தர்மசாலையொன்று உண்டு. இங்குத் தபால் ஆபீசும் இருக்கிறது. ஊரைச் சுற்றிலும் சில ஓடைகள் இருக்கின்றனவெனினும் ஜலசௌகரியம் போதாது. ராஜ குடும்பத்தின் மூலமாகவன்றி இங்குப் பால் அகப்படாது. பூட்டியவர்களுடைய கடைகள் சில ஈங்குண்டு.

இந்தியாவிலிருந்து திருக்கயிலாயத்துக்குப் போகின்ற மற்றொரு பாதை இவ்வூரில் வந்து சேரு கிறது. டனக்பூர் என்னும் ரயில்வே ஸ்டேஷனிலி ருந்து புறப்பட்டு, சம்பவதி, லோஹகாட், பித்தரகர் முதலிய ஊர்கள் வழியாக அது இங்கு வந்து சேரு கிறது. இம்மார்க்கத்தில் பித்தரகர்தான் கயிலாய யாத்திரை வாசிகளுக்குக் கடைசியில் உள்ள தந்தித் தபால் ஆபீஸ். அதன் பிறகு இந்தியாவின் எல்லை யில் இருக்கும் கர்பியாங் எனும் ஊர்வரையில் சாதா ரணத் தபால் ஆபீசுகள் இருக்கின்றன. அவ்வூர்

களிலிருந்து கீழ்ப் பிரதேசங்களுக்குத் தந்தி கொடுக்க வேண்டுமானல் அவைகள் பித்தரகர் வரையில் சாதாரணத் தபாலாகவும் அங்கிருந்து தந்தித் தபாலாகவும் போகும்.

### ஆஸ்கோட்டையிலிருந்து பலவக்கோட்டை வரையில்—12 மைல்

கயிலாயத்தை நோக்கிப் போகும்போது ஒன்பது ஏற்றங்கள் இருப்பதுபோன்று நான்கு இறக்கங்களும் இருக்கின்றன. அவைகளுள் முதலாய இறக்கம் ஆஸ்கோட்டையை விட்டுப் புறப்பட்டதும் வருகின்றது. கயிலையை நோக்கிப் போகும்போது ஏற்றமாயிருப்பது திரும்பி வரும்போது இறக்கமாவதும், இறக்கம் ஏற்றமாவதும் வெளிப்படை. ஆஸ்கோட்டைக்கு அருகாமையிலுள்ள இறக்கம் மூன்று மைல் தூரமுடையது. ஏற்றத்தைவிட இறக்கம் அதிக கஷ்டமுடையது என்ற அனுபவம் இவ்விடத்தே முதன் முதல் உண்டாயிற்று. ஏறும்போது கால் பிசகினல் நிற்கின்ற இடத்திலேயே இருப்போம், அல்லது கிடப்போம்; இறங்கும் போது கால் தவறினலோ பாதையை விட்டு வெகு தூரம் பாதாளத்துக்குப் போய் விடுவோம்! ஏறும்போது சரீரம் பின்னுக்கு இழுக்கிறது! இறங்கும்போது அது தன்னைத்தானே அடியோடு முன்னுக்குக் குழியில் தள்ள முயலுகிறது. உடலின் வேகத்தை அடக்கும் பொறுப்பு முழங்காலின் கீழ்ப்பாகத்தைச் சேர்ந்தது. பாதையினின்று வழுவாது நிதானமாய் நடப்பது, தேகத்தின் வேகத்தைத் தடுப்பது ஆகிய இரண்டு வேலைகள் ஏககாலத்தில் ஏற்படுகின்றன.

இதனால் கெண்டைக்காலுக்கு ஏற்படும் வேதனை சொல்லுக்கு அடங்காது.

இப்பாதை நல்ல நிலைமையில் இருக்கும்போதே நடந்து செல்லுபவர்க்குப் போதுமான அளவு துன்பத்தைக் கொடுக்க வல்லது. போதாததற்குப் பெரு மழையும் வந்து விட்டால் பின்பு அதைப்பற்றிப் பகருவானேன்! ஹிமய மலையில் பெருமழையின் முதலாவது அனுபவம் எங்களுக்கு இங்கு உண்டாயிற்று. பரிசுத்தமாயிருந்த ஆகாயத்தின் காட்சி திடீரென்று மாறுகிறது. எங்கிருந்தோ கார்மேகம் உருண்டு புரண்டு ஓடி வருகிறது. மலைச்சிகரங்கள் காலாக்கினியில் உருகி நிலை குலைந்து சாய்வது போன்ற தோற்றம் ஒரு பக்கம். செங்குத்தாயுள்ள மலைச்சுவர்களையெல்லாம் எடுத்து விழுங்கும் பிரளய இருள்போன்ற மேக உதயம் மற்றொரு பக்கம். அலை யெறிந்து கொண்டு சமுத்திரமே பொங்கி வருவது போன்று முகில் சூழ்ந்து பள்ளத்தாக்குகளை யெல்லாம் மூடுகிறது. சொரேலென்று மழை கொட்டுகிறது. துளி ஒன்று நெல்லிக்காய்ப் பரிமாணம் உள்ளது. உலகிலேயே மிகப்பெரிய மலை இது என்றால், மழையும் அதற்கேற்றவாறே இருக்கிறது. வசதியான கற்பாறை ஒன்றின்கீழ் அடைக்கலம் புகுவதைத் தவிர வேறு வழியொன்றும் இல்லை. மழை பொழிவதால் சோலையினுள் ஒரே இரைச்சல். கல்லும் மண்ணும் நீரும் மேலிருந்து கீழே குதித்தோடுகின்றன. இந்த ஆரவாரம் அடங்கியபின் எச்சரிக்கையுடன் வழி நடக்க ஆரம்பிக்கிறோம். ஆனால் ஒரு மூலை வழி மறிக்கப்படுகிறது. சாதாரண

காலத்தில் நீர் ஓடையாயிருந்தது ஒன்று இப்போது கல்லோடையாய் மாறிவிட்டது. நீலகிரி ஜில்லாவில் கல்லாறு ஒன்று உண்டு. அதனுள் கற்கள் ஏராள மாய்க் கிடப்பதாலேயே அதற்கு அப்பெயர் வந்தது. இவ்விடத்தோ பூசணிக்காய்ப் பருமனிலிருந்து தேங் காய்ப் பருமன்வரையில் உள்ள விதவிதமான கூழாங் கற்கள் மழை நீரோடு சேர்ந்து வேகமாய் உருண்டு வந்து கொண்டிருந்தன. கட்டிட வேலைக்குக் கலவை போட்டது போன்று தண்ணீரைவிடக் கற்களே பெரிதும் தென்பட்டன. அவைகளின் ஓட்டம் அடங்குதற்கு அரை மணிநேரம் பிடித்தது. அதற் குள்ளாகச் சென்ற கற்களை யெல்லாம் சேர்த்துக் குவித்திருந்தால் ஒரு குன்று உண்டாயிருக்கும். அங் ஙனம் கோடி குன்றுகளுக்குக் கற் கொடுத்தாலும் ஹிமயமலையின் நிறைவுக்குக் குறைவு ஏற்படாது.

மூன்று மைல் கீழே இறங்கியதும் கௌரி கங்கா எனும் ஒரு பெரிய நதிக்கரையோரம் பாதை வந்து சேருகிறது. ஹிமயமலையில் உள்ள ஒவ்வொரு நதிக் கும் கங்கை என்று பெயர். இது பரியந்தம் நாங்கள் வழியில் பார்த்த நதிகளை யெல்லாம் விட கௌரி கங்கை பெரியது. அதைத் தாண்டுவதற்கு நல்ல தொங்கு பாலம் ஒன்று உண்டு. ஒரு மைல் தூரம் இந்நதிக்கரையோரம் நடந்த பின்பு இது காளி கங்கையோடு கூடுமிடத்துக்கு வந்து சேருகிறோம். கூடு துறை பார்க்கத்தக்க இடங்களில் ஒன்று. இரண்டு பெரிய பிரவாகங்கள் மலைகளை அறுத்துக் கொண்டு ஓடி இணைகின்றன. ஆனாலும் நீராடுதற்கு அச்சங்கமத்தில் இருப்பது போன்ற வசதி காளி

கங்கையில் வேறு எவ்விடத்தும் இல்லை. கூடுதுறையில் கிராமம் ஒன்று உண்டு. வனப்பு வாய்ந்த அவ்வூருக்கு ஜலஜீவி என்று பெயர். மூன்று பக்கம் நீரால் சூழப்பட்டு ஜலத்திலேயே ஜீவித்திருப்பவர்கள் போன்று அக்கிராமத்தார் தென்படுகின்றனர். ஆதலால் அவர்களை ஜலஜீவிகள் என்றழைப்பது முற்றிலும் பொருந்தும். காலஞ்சென்ற ஒரு பெரியாரது ஆசிரமம் இவ்விடத்து உண்டு. அழகிய சோலையையும் சிவன் கோவில் ஒன்றையும் உடைய அந்த ஆசிரம ஸ்தானம் தங்குதற்கு மிக வசதியானது. வருஷந்தோறும் புரட்டாசி மாதத்தில் இவ்வூரில் பெரிய சந்தையொன்று கூடுவதாகவும் அப்போது திபேத்தில் உண்டு பண்ணப்பட்ட சாமான்களை இங்கு பூட்டியா வியாபாரிகள் ஏராளமாய் விற்பதாகவும் சொல்லப்படுகிறது.

இனி, பாதை பெரிதும் காளி கங்கையை எதிர்த்துச் செல்லுகிறது. திருக்கேதாரத்துக்கும் பத்ரிகாசிரமத்துக்கும் வழி கங்கைக் கரையோரமே போவதை இது ஒத்திருக்கிறது.

பலவக்கோட்டை காளி நதியோரத்தில் ஒரு பள்ளத்தாக்கில் இருக்கிறது. இது வேனிற் காலத்தில் குடியில்லாத ஊர். பூட்டியா வியாபாரிகள் பனி காலத்தில் மட்டும் இங்கு வந்து வாசம் செய்கின்றனர். இவ்வூரில் அப்போது அதிகப்பனி இருப்பதில்லை. கோடை காலத்தில் இதைவிடக் குளிரான இடங்களுக்கு அவர்கள் போய்விடுகின்றனர். ஆதலால் தான் வீடுகளெல்லாம் மூடப்பட்டுக் கிடந்தன. இரண்டு கடைக்காரர்கள் மட்டும் இவ்வூரில் இருந்த

னர். வேனிற் காலத்தில் இங்கு வெப்பம் அதிகம். தங்குவதற்கு நல்ல இடம் கிடையாது. ஆனல் வெட்ட வெளியில் சுகமாகக் காலங் கழிக்கலாம். பகலெல்லாம் பருத்த மரங்களின்கீழ் இனிது கழிக்கப்பட்டது. துஷ்டமிருகங்களின் உபத்திரவம் அவ்விடத்து இல்லை. ஆதலால் இரவையும் அவ்வாறே கழிப்பதாக எண்ணியிருந்தோம். ஆனல் நாங்கள் ஒன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்தது. இரவில் படுக்கப் போவதற்கு முன்பே மழை தூற ஆரம்பித்துவிட்டது. வீடுகள் பல இருந்தும் அவைகளெல்லாம் மூடிப் பூட்டு இடப்பட்டிருந்தன. மாட்டுக் கொட்டகைகள் இரண்டு மட்டும் பாக்கி. அவைகளுள் வழக்கம்போல மாடு படுப்பதா அல்லது மனிதன் படுப்பதா எனும் பிரச்னை எழுந்தது. மனிதனுக்கு மாடு இடந்தரவேண்டியது எனும் தீர்மானம் ஏகோபித்து அதிவிரையில் நிறைவேற்றப்பட்டது. கால் நடைகளுக்கு வாக்குரிமை இல்லாது போனது மானுடர் எனும் பிராணிகளுக்குப் பலவிதங்களில் பயன்படுகிறது.

கையகல இடத்தையும் வீண்படுத்தாது உயிர் வாழ்வன உயிர் இல்லாதன ஆகிய அனைத்தும் ஒழுங்காக அடுக்கப்பட்டிருக்கின்றன. புரண்டு படுப்பதற்கு இடம் கிடையாது. அது அந்நிலைமையில் ஒரு குறையன்று. நாள்தோறும் நடக்கின்ற சிரமத்தால் சரீரம் படுக்கையில் சாய்ந்ததும் சவம்போன்று ஆய்விடுகிறது. ஆனல் இந்த இடத்தில் மட்டும் எங்களுக்கு நல்ல உறக்கம் கிடையாது. ஏனென்றால் கும்பகர்ணனது உறக்கத்தையே ஓட்டிவிடக் கூடிய

இடைஞ்சல்கள் சில இங்கு எழலாயின. மாட்டுக் கொட்டிலுக் கென்று தனி மணம் ஒன்று உண்டு. அதையாவது எப்படியோ சகித்துக் கொள்ளலாம். ஆனால் மூட்டை சுமக்கும் மலைவாசிகளிடம் மற்றொரு வித மணம் உண்டு. குளிப்பதிலும் துணி கசக்கு வதிலும் அவர்களுக்கு நம்பிக்கை யில்லை. அத்த கையவர்கள் சூழ்ந்திருக்கும் கொட்டகையில் படுத் துறங்குவது தான் யாருக்கும் செயற்கரிய செய்கை யாகும். போதாததற்கு அவர்கள் இடையிடையே புகையிலை ஹுக்காப் பிடிக்கிறார்கள்; கூச்சலிட்டு வம்பளக்கிறார்கள்; அவர்களுள் மூன்று நோயாளி களின் பொருட்டுத் தீமூட்டி அறையெங்கும் புகை யைச் சூழ விடுகிறார்கள். நல்ல காற்றின் பொருட்டு வெளியே ஓடிப்போய் விடலாமென்றால் மழை நின்றபாடில்லை. யுகம் போன்று வளர்ந்து கொண்டே போன இரவு எப்படியோ கழிக்கப்பட் டது.

## 6

### பலவக்கோட்டையிலிருந்து டார்ச்சூலா வரையில் 11 மைல்

காளி கங்கையின் வலது கரையில் இருக்கிறது இப் பாதை. அதிக ஏற்றம் இறக்கம் இல்லாது இது பெரிதும் சமனாகவே இருக்கிறது. வழியானது நதி யோரம் இருப்பதே அதற்குக் காரணமாகும். தெளி நீருடைய சிற்றோடைகள் பல வழியைக் குறுக்கிட் டுக் கொண்டு காளி நதியிற்சென்று கலந்து விடு கின்றன. அவைகளின் மீது தாற்காலிகமாகப் போட்டப்பட்டிருக்கும் வாராவதிகள் அவ்வளவு வலிவு

வாய்ந்தவைகளல்ல. அச்சமுடையோர் அவைகளின் மீது நடக்கத் தயங்குவர். சிற்ரேடைகளெனினும் மக்களையும் மிருகங்களையும் அடித்துக் கொண்டு போகும் வேகம் அவைகளுக்குண்டு. குடிபோன பல கிராமங்கள் அடுத்தடுத்துத் தென்படுகின்றன. அவைகளுள் வீடுகள் பல நன்ருகக் கட்டப்பட்டவை. குளிர்காலத்தில் மட்டும் பூட்டியர்கள் அக்கிராமங்களில் வந்து வசிக்கின்றனர். வேனிற்காலம் முழுதும் அவைகள் பாழடைந்தவைகள்போல் கிடக்கின்றன. பாதைக்கு அருகாமையில் இரண்டு மூன்று மலைக் குகைகளும் இருக்கின்றன. பூட்டியர்களும் கிராம வழிப்போக்கர்களும் அவைகளில் இராத் தங்குவதுண்டு.

ஹிமயமலை வாசிகள் வெகுவாக உண்பது கோதுமை மாவால் செய்யப்பட்ட ரொட்டி. கோதுமையை அவர்கள் தாமே அரைப்பது கிடையாது. ஓடையினின்று நீரை ஒரு வாய்க்காலில் பிரித்தெடுத்துச் சென்று, அதை ஒரு பண்ணையின் வாயிலாகச் சுமார் பதினைந்தடி கீழே சரிந்து விழும்படிச் செய்கின்றனர். ஒரு சிறு குடிசலின் கீழ்மாடியில் இறக்கைகளையுடைய ஒரு மரச் சக்கரத்தைச் சுழற்றி விட்டு நீர் அப்பால் ஓடி விடுகிறது. சக்கரத்தின் இருசு அல்லது அச்சு மேல்மாடியில் எந்திரத்தின் மேற் கல்லைச் சுழற்றுகிறது. கீழ்க்கல்லின் ஓர் அகன்ற துவாரத்தின் வழியாக சுழலும் அச்சு மேலே போகின்றமையால் கீழ்க் கல்லுக்கும் அச்சுக்கும் எவ்விதமான சம்பந்தமுமில்லை. தொங்கிக் கொண்டிருக்கும் ஒரு கூடையிலிருந்து கோதுமை சிறிது

சிறிதாக ஏந்திரத்தின்மீது வட்டமாக வீழ்ந்து இரு துவாரங்களின் வாயிலாக இரண்டு கல்லுக்கு மிடையே சென்று அரைபடுகிறது. இவ்வாறு ஏந்திரத்தை ஓட்டிவிட்டு ஆடவரும் மகளிரும் வயலில் தங்கள் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருக்கின்றனர். நீர் விசையால் ஓடும் ஏந்திரம் தானே மாவை அரைத்து விடுகிறது. இவ்வாறு எளிதில் அமைக்கப்பட்ட திரிகை பல்லாயிரம் ஆண்டுகளாக இமய மலை வாசிகளுக்கு மாவு அரைத்து வந்திருக்கிறது. இயற்கையைக் கொண்டு வேலை வாங்குவதைப்பற்றி மற்றச் சமூகத்தாருக்கு ஒன்றும் தெரியாதிருந்த பண்டைக்காலந் தொட்டு இந்த ஏந்திரம் இமயமலையில் மனிதனுக்கு வேலை புரிந்து வந்திருக்கிறது இத்தகைய மாவுத் திரிகைகள் பல இவ்வழியோரம் இருக்கின்றன.

பாதையில் ஏற்றத் தாழ்வு அதிகம் இல்லையெனினும் அருகில் செங்குத்தாக நிற்கும் மலைகள் மனிதனுக்குப் பயமூட்டுகின்றன. அவைகள் பருத்த பாறாங்கற்களா யிருந்தால் பரவாயில்லை. பெருங்கற்கள் 'கமான்' போன்று வளைந்து வேண்டுமானாலும் நிற்கலாம். ஆனால் இங்குத் தென்படுபவை வெறும் மணலும் கூழாங்கற்களும் சேர்ந்து உண்டான சுவர்கள். உள் வலிவும் ஒட்டும் தன்மையும் இல்லாது அவை ஓங்கி நிற்கின்றன. எந்த க்ஷணத்தில் வேண்டுமானாலும் அவை சரிந்து விழக்கூடியவைகள். அடிக்கடி அவை வீழ்வதுண்டு. நூற்றுக் கணக்கான அடி உயரத்திலிருந்து ஒரு மலையே நழுவிக் கல்லும் மணலுமாகக் கீழே வரும்போது மூன்

றரை முழம் உயரமுள்ள மனிதனது கதி என்னு வது ?

டார்ச்சுலா எனும் ஊர் அழகியதொரு மைதா னத்தில் இருக்கிறது. இவ்வளவு பெரிய மைதானத் தைக் காளி நதிக்கரையில் காண்பது அரிது. அம் மைதானம் அரை வட்டமாக அமைந்திருக்கிறது. அவ்வெளிக்கு ரஸ்தா குறுக்கு விட்டமாகவும், வளைந்து பாயும் நதி பரிதியாகவும் அமைந்திருக்கின் றன. இவ்வூர் ஒரு பெரிய வியாபார ஸ்தலம். பூட்டி யர்கள் குளிர்காலத்தில் இங்கு ஏராளமாய்த் தங்குவ துண்டு ; வேனிற் காலத்தில் இங்கு வெப்பம் கொஞ் சம் அதிகம் என்றே சொல்லவேண்டும். அப்போது தேள் முதலிய விஷ ஜந்துக்கள் இங்குத் தென்படு கின்றன. நாலா பக்கங்களும் உயர்ந்த மலைகள். அவைகள் காடலர் கோட்டை, மாள்வேளக் கோட்டை, டார்ச்சுலக் கோட்டை என்று பெயர் பெற்றிருக்கின்றன. நெல், கோதுமை போன்ற தானியங்களும் மா, வாழை, கிச்சிலி போன்ற பழ வகைகளும் இங்கு விளைகின்றன. நதிக்கு அக்கரை யில் நேப்பாளம் ராஜ்யத்தைச் சேர்ந்த உத்தியோ கஸ்தர் காரியாலயம், கச்சேரி, சிறைச்சாலை முதலிய வைகள் இருக்கின்றன.

தங்குதற்கு நல்ல கடைகளும், தர்மசாலைகளும், பிரயாண விடுதியும் (Traveller's Bungalow) டார்ச் சுலாவில் இருக்கின்றன. ஒரு ராஜாவின் தர்ம சாலையில் நாங்கள் தங்கியிருந்தோம். அது ஒரு வசதியான பெரிய வீடு எனினும் அதைப்பற்றி இரண்டொரு வார்த்தை சொல்லுவது அவசியம்.

கயிலாயகிரிக்கு யாத்திரை போன அனைவரும் அத் தர்ம சாலையில் கணபதி பூஜை செய்தனர். சிலர் பன்முறை பூஜை பண்ணினர். இத்துடன் இவ் வார்த்தையை நிறுத்திவிட்டால் வாசகர் ஒவ்வொரு வரும் அவரவருக்குத் தோன்றியபடி கணபதி பூஜை யைப்பற்றி எண்ணுவர். ஆனால் உண்மையில் அங்கு நடந்த பூஜை வாசகர் யாருடைய மனதுக்கும் எட் டாததொன்று. வெயிலில் வேலைகளைக் கவனிப்ப வர் ஜன்னல் இல்லாத வீட்டிற்குள் சென்றால், எல் லாம் ஒரே இருள் மயமாகத் தோன்றும். தர்மசாலை யில் இருப்பவைகளெல்லாம் உண்மையில் இருட் டறைகளே. மேலும் அவைகள் வாமனர் போன்ற வர்களுக்குக் கென்றே கட்டப்பட்டவை போலும். அறையினுள் அவசரமாக ஒருவர் நுழைவார். சிறிது நேரத்துக்குள் தேங்காய் உடைப்பதுபோன்று ஒரு சத்தம் கேட்கும். சென்றவர் தலையைப் பிடித்துக் கொண்டு கண்ணீர் ததும்பக் கீழே உட்கார்ந்து கொள்வார். அறைக்குள் செல்பவர்களுக்கெல்லாம் இதே கதிதான். ஒரு தடவை "படால்" என்று சத்தங் கேட்டது. வெளியில் உட்கார்ந்திருந்த ஒரு வர் "என்ன சமாசாரம்?" என்றார். "கணபதி பூஜை, வேறு ஒன்றுமில்லை!" என்று பதில் உள்ளிருந்து வந்தது. ஹாசிய ரசிகர் ஒருவர் "மண்டை உடைந் தால் பரவாயில்லை. வீட்டின் மரவிட்டம் உடையா திருக்கட்டும்!" என்றார். இருட்டு அறையில் தாழ அமைக்கப்பட்டிருந்த ஒரு விட்டத்தின் மீது ஒருவர் பாக்கியில்லாது எல்லாரும் முறைப்படி மோதிக் கொண்டனர். கணபதி முன்னிலையில் தலையில்

குட்டிக்கொள்ளுதலும் தோப்புக்கரணம் போடுதலும் ஆகிய சடங்கு, விட்டத்தில் மோதிக் கொண்டு தற் செயலாக இங்கு நடைபெற்றது. டார்ச்சுலாவில் நாங்கள் தங்கியிருந்த இரண்டு நாளும் இத்தகைய கணபதி பூஜை நடக்கலாயிற்று.

அல்மோராவிலிருந்து வரும் கூலியாட்கள் டார்ச் சுலாவில் நின்றுவிடுவது வழக்கம். அதற்கு மேல் அவர்கள் செல்வதில்லை. மூட்டை சுமப்பதால் நேரும் களைப்பு அதற்கு முதற் காரணம். வாடிக்கையாகச் சென்று பழக்கம் ஆயிருக்கின்ற இடங்களுக்கு அப்பால் போகாதிருப்பது இரண்டாவது காரணம். புதிய ஆட்களைத் தேடிப் பிடிக்க இரண்டு நாள் பிடித் தது. போதியபேர் கூலியாட்கள் கிடையாமையால் முதல் நாள் சிலர், இரண்டாம் நாள் பாக்கிப் பேர் ஆக இரண்டு பிரிவாக எங்கள் கூட்டம் மேலே அனுப்பப்பட்டது. எல்லோரும் கேலா எனும் ஊரில் சேர்ந்து கொள்வதாக ஏற்பாடு செய்யப்பட்டது.

### டார்ச்சுலாவிலிருந்து கேலா வரையில்—10 மைல்

இந்தப் பத்து மைலுக்கென்று தனியாக ஒரு படை கூலியாட்களை நியமிப்பது வழக்கம். இதைத் தவிர வேறு இடங்களுக்கு அவர்கள் போவதில்லை. இவ்வழியில் ஆபத்துக்கள் அதிகமாயிருப்பதால் குதிரைகள் மூட்டைகளை எடுத்துக்கொண்டு போகா. மழை பெய்து கொண்டிருக்கும்போது அல்லது பெய்து முடிந்த உடனே மனிதர்களும் இவ்வழியில் நடப்பதில்லை. மலைச் சரிவில் கற்கள் அடிக்கடி உருண்டுவரும். மழைபெய்த உடனே அவைகள் அதிகமாக நழுவி விழும். ஆகையால் எப்பொழுதும்

எச்சரிக்கையாகவே நடப்பது அவசியம். துணிவு உடையவர் சிலரே மெத்தக் கவனமாகக் குதிரைகளை நடாத்துவர். ஒரு குதிரைக்காரன் மட்டும் மற்றக் கூலியாட்களுடன் தன் குதிரையை மூட்டை யேற்றிக் கொண்டு ஓட்டிச் சென்றான். மணலும் கல்லும் சரிந்து கிடந்த ஓர் ஒடுங்கிய பாதையில் போகும் போது குதிரைக்குக் கால் சறுக்கிவிட்டது. பாதாளத்தில் காளி கங்கை உக்கிரமாகக் கொந்தளித்துக் கொண்டு ஓடுகிறது. முதுகில் இரண்டு பக்கமும் இரண்டு படுக்கைகளையுடைய குதிரை உருண்டு உருண்டு நதியை நோக்கிப் போகிறது. பாதையில் நடப்பவர் திகைத்து, மூச்சுப் பேச்சு அற்று, இருதயம் அடிப்பதே நின்றுவிட்டது போன்று, ஸ்தம்பித்து நிற்கின்றனர். இன்னும் கொஞ்சதூரம் உருளவேண்டியது பாக்கி. பின்பு குதிரையும் படுக்கையிரண்டும் காளி நதியில் உருத்தெரியாது மறைந்து போம். குதிரைக்கு மரணம்; குதிரைக்காரனுக்குப் பொருள் சேதம்; யாத்திரை வாசிகள் இரண்டுபேர் அவ்விடத்திலிருந்து திரும்பி வந்துவிட வேண்டும். ஏனென்றால் சரியான கம்பள உடையில்லாது கயிலாயம் போகின்றவர் கூட்டோடு கைலாயம் போய்விடுவர்! இந்த அவசரத்தில் மரக்கட்டை ஒன்றால் தடுக்கப்பட்டுக் குதிரை பாதி வழியில் தத்தளித்துக் கொண்டிருக்கிறது. கூலியாட்களின் வல்லமையெல்லாம் இப்போது வெளியாகிறது. மூட்டைகளையெல்லாம் கீழே இறக்கி வைக்கின்றனர். பள்ளத்தாக்கில் குதித்தும் உருண்டும் புரண்டும் போகின்றனர். குதிரையைச் சூழ்ந்துகொள்

கின்றனர். மூட்டைகளை விடுவிக்கின்றனர். சிவ பெருமானது பூதகணங்கள் போன்று வேலை செய்கின்றனர். படாத பாடுபட்டு, பேரிரைச்சலிட்டுக் கொண்டு குதிரையை மேலே கொண்டு வருகின்றனர். அதற்குப் பலத்த காயங்கள்; ஆனால் உயிருக்கு ஆபத்து இல்லை. யாத்திரை வாசிகள் ஒருவாறு ஆறுதல் அடைகின்றனர். சிகிச்சையின் பொருட்டுக் குதிரை பக்கத்துக் கிராமத்துக்குக் கொண்டுபோகப் படுகிறது. மூட்டைகளை எடுக்க இரண்டு புதிய ஆட்கள் வந்துசேருகின்றனர்.

முதல் மூன்று மைலுக்கு வழி சமமாகவே இருக்கிறது. ஆனால் நதி ஓடுதற் பொருட்டு வான் அளாவும் மலைகள் ஒரே வெட்டாக வெட்டப்பட்டவை போன்று செங்குத்தான சுவர்களாக நிற்கின்றன. உச்சியில்மட்டும் வெட்ட வெளி தென்படுகிறது. வழி வளைந்து உள்நோக்கிப் போகிறது. சில இடங்களில் பாதை மூன்று அடி அகலந்தான் உள்ளது. பின்பு கரடுமுரடான, மேடும் பள்ளமும், மணற்சரிவும் உடையவழி. குதிரை விழுந்த இடமும் இதுவே. கடைசியாக மூன்று மைலுக்கு ஒரு பெரிய ஏற்றம் உண்டு. ஒன்பது ஏற்றங்களில் இதுவும் ஒன்று. வளைந்து வளைந்து இது மேலே ஏறுகிறது. சில இடங்களில் கல் பரவியிருக்கிறது. அது வழுக்கு மிக உடையது.

இந்த ஏற்றத்தில் பெருஞ்சோதனை ஒன்று உண்டாயிற்று. நாள்தோறும் அதிகாலையில் புறப்படுதற்கு முன்பு போதிய அளவு ஆகாரம் கொடுப்பதோடுகூட, அதிக கஷ்டமிருக்குமிடத்து வழியில்

உட்கொள்ளுதற் பொருட்டுக் கையிலும் கொஞ்சம் சிற்றுண்டி தரப்படும். டார்ச்சுலாவிலிருந்து கேலா வரையில் உள்ள பாதை மிகக் கடினமானவைகளில் ஒன்று. ஆனால் அன்று காலையில் போதிய அளவு ஆகாரம் கிட்டவில்லை. சிரம பரிகாரத்துக்குக் கையிலும் சிற்றுண்டி கிடையாது. அது சமையற் காரனுடைய குற்றமன்று. தெய்வாதீனமாக அவ் வாறு வந்து அமைந்தது. பல காரணங்களை முன் னிட்டு வழியில் நேரமும் அதிகம் ஆய்விட்டது. பெரிய ஏற்றத்தில் ஏற ஆரம்பிக்கும்போது களைப் பும் வெயிலும் சேர்ந்து வந்துவிட்டன. மூன்று பேரைத் தவிர மற்றவர்கள் முன்னே போய்விட்ட னர். மலை மொட்டையாயிருக்கிறது; வெயில் காய் கிறது; அங்கம் தளர்கிறது; கண் சுழலுகிறது; கால் நடுங்குகிறது; காளி கங்கை கீழே பாதாளத் தில் படம் வரைந்ததுபோன்று தென்படுகிறது. சறுக்குடைய ஒடுங்கிய வழி திருகித் திருகிச் செங் குத்தாக மேலே போகிறது. தவறி மலைப்பிளவில் கீழே வீழ்ந்தால் பொறுக்கி யெடுக்க எலும்பும் அகப்படாது. வழியோ தொலைந்தபாடில்லை; அது வளர்ந்துகொண்டே போகிறது. மனநிலைக்கு ஏற்ப வழி குறுகுதலும் நீளுதலும் உண்டு. கீழ்ப் பிர தேசத்தில் நிமிஷத்துக்கு ஒரு மைல் வீதம் ரயில் வண்டியில் பறந்தோடியதுண்டு. அப்போதைய ஒரு மைலைவிட இப்போதைய ஓர் அடி வெகு தூர மாகத் தோன்றுகிறது. சந்தர்ப்பம் மனதின் கண் எத்தகைய மாறுதலை உண்டுபண்ணுகிறது! பசி பிராணனை வாங்குகிறது. நீர் வேட்கையால் நா

உலர்கிறது. சிற்றாறல்கள் ஆங்கு அடிக்கடி தென் படுகின்றன. ஆனால் அவைகளின் நீர் யாத்திரைவாசி களுக்கு உண்ணீர் ஆகாது. புதியதாக இமயமலை யில் பிரயாணம் செய்கின்றவர்கள் ஊற்று நீரையும் பனிக்கட்டியிலிருந்து உருகி வருகின்ற ஆற்று நீரை யும் காய்ச்சாது குடிக்கலாகாது. அப்படிப் பருகி னால் உடனே வயிற்றுக் கடுப்பு வந்துவிடும். ஜலம் கைக்கு எட்டுகிறது. ஆனால் வறண்ட வாய்க்கு எட் டப்படாது. இந்நிலைமையில் வழி அடியடியாகக் கடக்கப்படுகிறது. ஒருவர் இடையிடையே உட் கார்ந்து கொள்ளுகிறார். மற்றவர் தம்மால் ஒன்றும் முடியாதென்று ஒரு தட்டையான பாறையின்மீது நீட்டிப் படுத்துக் கொள்கிறார். முதலில் தள்ளாடி நடப்பவர்களுக்கும் இறுதியில் படுத்துக் கிடப்பவர்க் கும் இடையில் முக்கால் மைல் இருக்கும். கேலா எனும் ஊர் போய்ச் சேருதற்கு இன்னும் ஒரு மைல் பாக்கி. படிப்படியாக மேலே ஏறவேண்டும். உடல் நலிகிறது; உள்ளம் தளர்கிறது, அடுத்த கணத்தில் உயிர் போய்விடும் போலிருக்கிறது.

பூத்த கண்ணுக்குப் பையன் ஒருவன் தென்படு கிறான். அவன் மேலிருந்து வேகமாக இறங்கி ஓடி வருகிறான். அவன் கையில் வெப்பம் காக்கும் குப்பி (Thermos Flask) ஒன்று தென்படுகிறது. அருகில் வரும்போது சட்டைப் பைகளில் இரண்டு காணப் படுகின்றன! இந்த மலைநாட்டிலுங்கூட இத்தகைய குப்பிகள் வந்துவிட்டனவா என்ற வியப்பு வரு கிறது. பையன் பக்கத்தில் வந்து "ஜி"...என்று வணங்குகிறான். கையில் இருந்த வெப்பக்குப்பியை

மரியாதையாக நீட்டி சுவாமிஜி அனுப்பினர் என்று சொல்லுகிறான். மற்ற இருவர் எங்கே என்றும் கேட்கிறான். இப்போது பளிச்சென்று உண்மை விளங்கிற்று. மற்ற இருவரைக் காணுதற் பொருட்டுக் கீழ் நோக்கி ஓடும்படி, கிராமப்பிள்ளை ஏவப் படுகிறான். வெப்பக் குப்பி நம் கூட்டத்தைச் சார்ந்தது. முன் சென்றவர் எங்கள் கஷ்டத்தைக் குறிப்பால் அறிந்து தாக சாந்திக்கு இதை அனுப்பியிருக்கிறார். குப்பி திறக்கப்படுகிறது. பாலில் கொஞ்சம் காப்பிக் கஷாயம் கலந்த சுடுபானம். அது உள்ளே செல்லச் செல்ல உயிர் வருகிறது; கண் ஒளி வருகிறது; கால்வலி தீர்கிறது; கேலா எனும் ஊரை நண்ணுதல் எளிதாகிறது. கயிலைமலையானது கருணை என்றே இச்சம்பவத்தைச்சொல்ல வேண்டும்.

மற்ற கிராமங்களில் போன்று கேலாவில் வீடுகள் அடர்ந்து இல்லை. வங்காளத்திலும் மலையாளத்திலும் இருப்பது போன்று அவைகள் ஆங்காங்குச் சிதறுண்டு கிடக்கின்றன. கடைக்காரர்கள் தங்குவதற்கு வசதியான வீடுகள் தருகின்றனர். வாழைப் பழம் இங்கு ஏராளமாக அகப்படுகிறது. கயிலைக்குப் போகும் வழியில் இந்த ஓர் ஊரில் மட்டும் நல்ல நெய் அகப்படுகிறது. ஹிமயமலையில் மற்ற கிராமங்களில் பொதுவாக அகப்படும் நெய்யின் மணம் நம் போன்றவர்களால் சகிக்கக்கூடியதன்று. கயிலை சென்று இக்கிராமத்துக்குத் திரும்பிவரும் பரியந்தம் எங்களுக்குக் தேவையாயிருந்த நெய்யை இங்கு வாங்கிக் கொண்டோம். கேலாவிலிருந்து சுமார் ஐம்பது

மைல் தூரத்திலுள்ள கர்ப்பியாங் பரியந்தம் புதிய தொரு கூலியாட் கூட்டம் அமர்த்தப்பட்டது, கயிலைக் குப் போம் வழியில் இந்தியாவின் எல்லைக்குள் உள்ள பாதையில் மிகக் கடினமான பாகம் இந்த ஐம்பது மைல்.

மழை பெய்து ஓய்ந்திருக்கிறது. அதன் பலனைக் கல் சரிந்து விழும் சத்தம் இடையிடையே இரவில் கேட்கிறது. "டம்......தடதடதட"...இப்போது ஒலி ஒன்றுமில்லை. கல் பூமியில் படாது ஆகாயத்தில் வந்துகொண்டிருக்கிறது. "தடார்" என்று மலைச் சரிவில் மறுபடியும் மோதுகிறது. உருண்டு புரண்டு ஓடும் ஒலி கொஞ்ச நேரம். செங்குத்தான இடத்தில் வெட்ட வெளியில் வீழ்ந்துகொண்டிருக்கும்போது ஒலியில்லை. விழுகின்ற கல் பல துண்டாக உடை கிறது. அல்லது சரிவில் உள்ள கற்களைக் கூடச் சேர்த்துக்கொள்கிறது. இவைகள் இரண்டு மூன்று நிமிஷம் மலைச் சரிவுகளிலும் ஆகாயத்திலும் மாறி மாறிப் பிரயாணம் பண்ணிக் கடைசியாகக் காளி நதியில் போய் விழுகின்றன.

## 7

### காளி கங்கை

கேலாவினின்று புறப்பட்டதும் காளி கங்கை கண் ணுக்குத் தெரியாது மறைந்துவிடுகிறது. மறுபடியும் அதன் கரையோரம் வருதற்கு இரண்டுநாள் பிடிக் கும். பிறகு விப்புத்தடாகக் கணவாயில் அதன் உற்பத்தி ஸ்தானம் வரையில் வழி அதனோரத் திலேயே போய்க் கொண்டிருக்கிறது. அது இந் தியாவுக்கும் நேபாளத்துக்கும் இடையில் இயற்

கையாக ஏற்பட்டுள்ள எல்லை. உற்பத்தியான இடத்தினின்று நான்கு அல்லது ஐந்து மைல் ஓடியதும் இது வேகத்திலும் வடிவத்திலும் வலுத்து விடுகிறது. பிறகு எந்த இடத்திலாவது இதைப் பால மின்றிக் கடக்க முடியாது. ஒடுங்கிய சில இடங்க ளில் இதன் குறுக்கே கயிறுகட்டி அதன் வாயிலா கச் செல்லுதற்கான தனிப்பழக்கம் ஒன்றைக் கிராம வாசிகள் பெற்றிருக்கின்றனர். மலை மக்க ளுள்ளும் மன உறுதியிலார்க்கு அத்தகைய பிரயா ணம் ஒருக்காலும் வாய்க்காது. ஓரிடத்திலாவது அந்நதியின் கண் அமைதியைக் காண இயலாது. உக்கிர வடிவெடுத்துள்ள அது சதா கர்ஜித்துக் கொண்டு ஓடுகிறது. நமது பெருங் கூச்சலை யெல் லாம் மூழ்கடிக்க வல்ல முறையில் அது சில இடங்க ளில் முழங்குகின்றது. அது மலைகளைப் பிளந்து கொண்டு ஓடுகிற வேகத்தாலும் கொந்தளிப்பாலும் அதனிடத்திலிருந்து எப்போதும் ஆவி கிளம்பிக் கொண்டே இருக்கிறது. சிவனாரது ஜடாபாரத் தைத் தீண்டியதனால் சேதனம் பெற்று எழுந்துள்ள அது ஓரிடத்தில் "ஹரஹர பம்பம்...ஹரஹர பம் பம்......" என்று அவனைப் புகழ்ந்து பாடவும் ஆனந்தத் தாண்டவம் புரியவும் செய்கிறது. இன் னொரு பக்கம் அது "ஹரஹர வியோ ஓம்......ஹர ஹர வியோ ஓம் " என்று ஒலித்து நமது மனதை சிவலோகத்துக்கு அழைத்துச் செல்லுகிறது.

நேபாளம் யாருடைய படையெழுச்சிக்கும் உட் படாது சுயேச்சை நாடாயிருப்பதற்கு முக்கியமான காரணங்களில் ஒன்று இந்நதி எனலாம். வல்லரச

னுக்குப் பல சிற்றரசர்கள் கப்பங் கட்டுவது போன்று கணக்கற்ற சிற்ருறுகளும் ஓடைகளும் ஆங்காங்கு இதனுள் வந்து சேர்கின்றன. சம வெளிக்குள் வந்ததும் இந்நதி சரயூ எனும் பெயர் பெறுகிறது. இதன் உற்பத்தியும் வழி நெடுக மலை நாட்டில் இது அடையும் வளர்ச்சியும் மனிதன் புத்துயிரும் உணர்ச்சியும் பெறுதற்குத் தக்க எடுத்துக் காட்டுகளாகும்.

### கேலாவிலிருந்து சிர்க்கா வரையில்—10 மைல்

எதிரே நிமிர்ந்து நிற்கும் ஒரு பிரம்மாண்டமான மலையில் பாதை வளைந்து வளைந்து மேல் நோக்கிப் போவது தென்படுகிறது. ஆனல் அங்குச் செல்லு தற்கு முன்பு கேலாவிலிருந்து ஏணிப்படியிற் போன்று ஒரு மைல் தூரம் வழி செங்குத்தாகக் கீழே இறங்குகிறது. நான்கு பெரிய இறக்கங்களில் இது இரண்டாவது இறக்கம். கீழே இரண்டு மலை களுக்கு மிடையில் ஒடுங்கிய இடுக்கில் தவள கங்கை இரைச்சலிட்டுக் கொண்டு உக்கிரமாக ஓடிக் காளி கங்கையில் கலக்கிறது. வடக்கே தர்மா எனும் உறை பனிப் படலத்தினின்று உருகி வரும் இந்நதி வடிவத்தில் காளி கங்கைக்கு ஏகதேசம் ஒத்திருக்கிறது. இதைத் தாண்டுவதற்கு மரப்பாலம் ஒன்று அமைக் கப்பட்டிருக்கிறது. அது வலிவு வாய்ந்ததன்று. வ்ருஷந்தோறும் அதைப் புதுப்பிக்கவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. பின்பு ஐந்து மைலுக்கு ஒரு பெரிய ஏற்றம் வருகிறது. ஒன்பது பெரிய ஏற் றங்களில் இது நான்காவது ஏற்றம். திணறிக்

கொண்டும் பெருமூச்செறிந்து கொண்டும் அடிமேல் அடி வைத்து வழிநடக்க வேண்டும்.

நம்மனோர்க்குப் பெரும் பாடம் புகட்டவல்ல சிறு நிகழ்ச்சியொன்று இவ்விடத்து நேரலாயிற்று. கூலியாட்களுக் கிடையில் யாது காரணத்தாலோ சச்சரவு வந்து விட்டது. சுமார் மூன்று நிமிஷ நேரம் கடுமையான பேச்சு. அதற்குள் எல்லோரும் அவசரமாக மூட்டைகளைக் கீழே இறக்கி வைத்தனர். உடனே கைகலக்க ஆரம்பித்தனர். அவர்களுள் எத்தனை கட்சிகளாகப் பிரிந்து கொண்டனர் என்பது எங்களுக்கு விளங்கவில்லை. உதைக்கின்றனர், குத்துகின்றனர், மோதுகின்றனர், தாக்குகின்றனர், அறைகின்றனர்! எல்லாம் ஒரே அமர்க்களம். இவர்கள் மானுடர்தானா, அல்லது சிவபெருமானுடைய பூதகணங்களா எனும் ஐயம் ஒரு பக்கம். பூதகணங்கள் போர்புரியத் துணிந்திருக்கையில் நம் சாமான்கள் மேலே போவது எங்ஙனம் என்ற ஐயம் மற்றொருபக்கம். சிறிது நேரத்திற்குப் பிறகு சண்டை ஓய்கிறது. அவரவர் தூக்கவேண்டிய சாமான்களை எடுத்துக்கொண்டு பழையபடி வானுலகை நோக்கித் தொத்தி ஏறுகின்றனர். இவை யாவும் வியக்கத் தக்கவைகளல்ல; சண்டை ஓய்ந்ததும் ஒருவன் தோளில் ஒருவன் தட்டிக் கொடுத்துக்கொண்டும் சிரித்துக்கொண்டும் போகிறான்! பழையபடி சிநேக பாவனை வந்துவிடுகிறது. இதுவே வியக்கத்தக்க செய்கையாகும். மன்னிப்பதும் சண்டையை மறப்பதும் வீரனுடைய அணிகலம் என்று சொல்லப்படுகிறது. அத்தகைய பெருந்தன்மை இம் மலைவாசி

களிடத்தே சிறப்பாகக் காணப்பட்டது. ஆயுள் முழு
தும் ஓயாது பகைத்துக் கொண்டிருப்பவரது பான்
மையை இம்மலை வாசிகளது பான்மையோடு சீர்
தூக்கிப் பார்க்குமிடத்து மேன்மை எங்குளது என்
பது விளங்கும்.

மேலேறிச் செல்லுதற்கு நெடுநேரமாய் விட்ட
படியால் வழியில் புங்கு எனும் கிராமத்தில் பள்
ளிக்கூடக் கட்டிடத்தில் மத்தியான வேளையில் தங்கி
யிருந்து விட்டுப் பிற்பகலில் பாக்கியுள்ள வழி கடக்
கப்பட்டது. மலை யுச்சிக்குப் போமிடத்தெல்லாம்
மரக்கிளைகளின் மீது கட்டப்பட்ட கணக்கற்ற சிறு
துணிகள், நானவித நிறமுடையவைகள் தென்படு
கின்றன. திபேத்துப் பரியந்தம் இக் காட்சியைக்
காணலாம். இவைகளுக்குப் பிரார்த்தனைக் கொடி
கள் என்று பெயர். சிர்க்காவில் பள்ளிக்கூடத்தில்
எங்களுக்கும் விடுதி அளிக்கப்பட்டது. அது முதல்
தரமான கிராமங்களில் ஒன்று. பலவித தானியங்
கள் அங்கு விளைகின்றன. அக்கிராமம் சமுத்திர
மட்டத்துக்குமேல் 9000 அடி உயரத்தில் உள்ளது.
இரவில் குளிரும் அதற்கேற்றபடி இருந்தது.
ஈயால் ஏற்படும் உபத்திரவத்திற்கு ஒரளவில்லை.
வேனிற் காலத்தில் ஹிமயமலையில் ஈக்கள் ஏராள
மாய் உண்டு. சிர்க்காவில் அவைகளின் திரள் உச்
சஸ்தானம் பெறுகிறது எனலாம். கிராமக் குழந்
தைகளின் மீது அவைகள் சதா மொய்த்திருக்கின்
றன. முகத்தினின்று ஈக்களைக் குழந்தைகள் ஓட்டு
வதில்லை. எவ்வளவு நேரந்தான் அவைகளை ஓட்
டிக் கொண்டிருப்பது! முகத்தின் இணைபிரியாத ஒரு

பாகமாக ஈக்கள் அமர்ந்திருக்கின்றன. சமைக்கும் போது பாத்திரங்களெல்லாம் நன்ருக மூடப்பட்டிருக்க வேண்டும். சாப்பிடும் போது இடது கையில் விசிறி வேலே செய்து கொண்டே இருக்க வேண்டும். இல்லாவிட்டால் வாயிலும் இலேயிலும் ஈக்களேத்தான் காண்போம். பகலில் படுத்து ஓய்வு எடுக்க வேண்டுமாஞல் உடல் முழுதும் துணியால் மூடப்பட்டிருக்க வேண்டும். பிறகு அத்துணியின்மீது ஈக்கள் மொய்த்துக் கறுப்புக் கம்பளம் போன்று ஆய் விடும். ஈயின் உலகில் மனிதன் படும்பாட்டைக் பார்க்க விரும்புபவர் சிர்க்காவுக்கு வேனிற்காலத்தில் போஞல் போதும்.

### சிர்க்காவிலிருந்து ஜிப்தி வரையில்—11 மைல்

முதல் இரண்டு மைலுக்கு நடப்பதற்கு வழி மிகவும் வசதியானது. கோதுமை போன்ற பலவிதமான பயிர்கள் சூழ்ந்த வயலில் வழி வளைந்து வளைந்து போகிறது. மலேயில் விளையும் தானியங்களுக்கு ஏற்பப் பயிர்கள் வித விதமாய்க் காட்சி கொடுக்கின்றன. அவைகளில் சிறியவை, பெரியவை, பீட்டை வாங்கியவை, கதிர் சாய்ந்தவை, பழுத்தவை—ஆகிய இத்தனை விதங்களும் தென்படுகின்றன. காற்றடிக்கும்போது இப்பயிர்களெல்லாம் ஆனந்தக் கூத்தாடுவது கண்ணுக்கு ஓர் ஒப்பற்ற விருந்தாகும். இடது பக்கம் மொட்டை மலேகள் செங்குத்தாக நிற்கின்றன. அவைகளில் தேனீக் கூட்டங்களும் பறவைகளும் பகைவர் பயமின்றி நிம்மதியாக வாழ்கின்றன.

இனி மூன்று மைலுக்கு ஒரு பெரிய ஏற்றம் வருகிறது. ஒன்பது ஏற்றங்களில் இது ஐந்தாவ தாகும். இதைத் தொடர்ந்து வருவது மூன்று மைலுக்கு ஒரே இறக்கம், நான்கு இறக்கங்களில் இது மூன்றாவதாகும். மொத்தம் ஆறு மைல் தூரத் துக்கு ஒரே அடர்ந்த வனம். கதிரவன் ஆட்சி அத னுள் ஒருகாலும் செல்லாது. அத்தகைய அடவியை யுடைய ஏற்றத்துக்கு நாங்கள் வந்ததும் காற்றும் மழையும் சேர்ந்து பொழிய ஆரம்பித்து விட்டன. தங்க இடம் கிடையாது. வீசுகின்ற காற்றினிடத் துச் சரண் புகுவதைவிட வேறு வகையில்லை. மழை யைத் தொடர்ந்து மூடுபனி வருகிறது. ஊழிக்காலம் போன்று எல்லாம் ஒரே இருள். மூன்று அல்லது நான்கு அடிகளுக்குமேல் எதிரே உள்ள வழி தெரிவ தில்லை. நீர்ப்பெருக்கும், உதிர்ந்து நனைந்த சருகும் அவ்வழியை மேலும் மோசமாக்குகின்றன, போதா ததற்கு அட்டையும், நிலப்புழுவும் எங்கும் குசமச வென்று ஊர்கின்றன. சறுக்குடைய அப்பாதை யில் அடியெடுத்து வைக்க அச்சம் ஒரு பக்கம், அரு வருப்பு மற்றொரு பக்கம். இப்படி இரண்டொரு மைல் செல்லுதற்குள் மூடுபனியின் மப்பு நீங்குகிறது, அச்சுந்தர வனத்தின் மெய்க்காட்சி இப்போது உள்ளபடி தோன்றுகிறது. ஓங்கி வளர்ந்த விதவித மான மரங்கள், அவைகளில் ஒட்டி வளர்கின்ற நீர் வேம்பு தினுசுகள், மரங்களைச் சார்ந்து அலங்கரிக் கின்ற கொடி வகைகள், நிழலில் விரியும் மெல்லிய மலர்கள், அவைகளின் எண்ணிறந்த நிறங்கள், பூமி யில் பரவியுள்ள மழமழப்பான பாசி, அவைகளைப்

பொத்துக்கொண்டு மேலே வந்துள்ள விதவிதமான வர்ணம் தீட்டிய காளான்கள் ஆகிய இவை யாவும் கண்ணைக் கொள்ளைகொண்டு போகின்றன. புள்ளினங்கள் மரக்கிளைகளில் மறைந்திருந்து கொண்டு செவிக்களிக்கும் விருந்து மற்றொரு வகையானது. மனதோ சப்த உலகிலும் உருவ உலகிலும் ஊசலாடுகிறது. மூடுபனியும் அதன் பின் தென்பட்ட பேரழகுக் காட்சியும் வாழ்க்கை சம்பந்தமான ஒரு பரம உண்மையை விளக்குகின்றன. மனிதன் அஞ்ஞான இருளில் உழலும்போது மேல்நோக்கிச் செல்லுதலே சாத்தியமாவதில்லை. ஆனால் ஞானோதயமாகும் போது முன்னேற்ற மடைவது மட்டுமன்றி, வாழ்க்கையின் தெய்வீக அம்சங்களை யெல்லாம் உள்ளபடி அனுபவிக்கின்றான்.

உச்சி வேளையில் பிரிங்பங் எனும் இடத்தில் நீராடிச் சமைத்து உண்டு, இளைப்பாறி விட்டுச் சாயங்காலம் ஜிப்தி எனும் கிராமம் போய்ச் சேர்ந்தோம். ஜிப்தி எனும் பதத்துக்குச் சிக்கனம் என்பது பொருள். செங்குத்தான மலை. பாதாளத்தில் காளி கங்கை மறுபடியும் தென்படுகிறது. வீடு கட்டுதற்கும் பாதை அமைப்பதற்கும் இடம் கிடைப்பது அரிது. ஆக ஊரின் பெயருக்கு ஏற்பச் சிக்கனமாகவே இடம் கையாளப்பட்டிருக்கிறது. பாதையோரம் உள்ள ஒரு கடையின் மாடியில் நாங்கள் தங்குதற்கு இடம் கிடைத்தது.

நள்ளிரவு மணி எத்தனை என்று சொல்ல முடியாது. இடியின் முழக்கம் எங்கள் தூக்கத்தை யெல்லாம் விரட்டியடிக்கிறது. பளீர் பளீர் என்று மின்னுகிறது. படபட வென்று தலைக்குமேல் பிளக்கிறது;

காதைத் துளைக்கிறது; வீடும் அசைகிறது. மழையோ கொட்டுகிறது. கூரையினின்று மழைநீர் படுக்கையின்மீது ஒழுகுகிறது. குடையை விரித்து வைத்துக் கொண்டு அதன்கீழ் சுருண்டு கிடக்கிறோம். விடியும் வரையில் வீடு விழாதிருந்தால் போதுமென்ற பிரார்த்தனை. இது இடி முழக்கமா, அல்லது ஊழியில் சிவ தாண்டவமா எனும் ஐயத்துடன் இரவு கழிக்கப் பட்டது.

### ஜிப்தியிலிருந்து மால்ப்பா வரையில்—10 மைல்

துவக்கத்தில் சுமார் ஒரு மைலுக்கு வழி நன்றாயிருக்கிறது. பிறகு வாயில் போன்று நிற்கும் இரண்டு பாறைகளுக்கிடையே வழி நுழைகின்றது. இந்த இடத்துக்கு பிந்துக்கோட்டை என்று பெயர். யமலோகத்துக்கு வாயில் என்று பெயரிட்டிருந்தால் மிகப் பொருத்தமா யிருக்கும். பல வருஷங்களுக்கு முன்பு இதைவிட மோசமான வழி ஒன்றில் போகவேண்டி யிருந்ததாம். வானுலகை எட்டிப் பிடித்துக் கொண்டிருக்கும் இம்மலையின் உச்சியில் அவ்வழி இருந்ததாம். அதை அவர்கள் நீர்ப் பானி வழியென்று திகிலடைந்து பன்முறை மொழிந்தது காதில் வீழ்ந்தது. நீர் என்பதும் பானி என்பதும் ஜலம் எனும் ஒரே பொருளைக் குறிக்கும். பின்பு அதை நீர்ப் பானி என்பானேன் என்ற ஐயம் உண்டாயிற்று. நீர்ப்பானி யன்று, நிர்ப்பானி; அதாவது, தண்ணீர் இல்லாத இடம், என்று ஒருவர் ஐயத்தை அகற்றி வைத்தார். ஆபத்தே வடிவெடுத்த அவ்வழியில் மடிந்தவர்களுக்குக் கணக்கில்லையாம். கேள்வி

மாத்திரத்தில் உள்ள அவ்வழியைப் பற்றிய பேச்சை இத்துடன் நிறுத்திவிட்டுப் புதிய, அதிக ஆபத்துக்கு இடமில்லாத வழியில் நாங்கள் பட்ட பாட்டை இனி வர்ணிப்போம்.

நிர்ப்பானி மலையின் சிகரங்கள் இடது புறம் செங்குத்தாக ஆகாயத்தை அளாவிக்கொண்டு நிற்கின்றன. வலது புறம் சுமார் மூவாயிரம் அடிக்குக் கீழ் பாதாளத்தில் காளி கங்கை கர்ஜித்துக்கொண்டிருக்கிறது. மூன்று மைல் தூரத்துக்கு ஒரு பெரிய இறக்கம். இது நான்காவது இறக்கமாகும். ஏணிப் படியில் இறங்குவது போன்று இருக்கிறது. வழி சில இடங்களில் மூன்று அடி அகலம், சில இடங்களில் இரண்டடி அகலம். சில இடங்களில் கஷ்டப்பட்டு ஒரே அடி அகலத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. வெட்டி யெடுத்த பாறை, கட்டி யடுக்கிய கூழாங்கற்கள் ஆகிய யாவும் பெரிதும் வழுக்குடையவைகளாகவே இருக்கின்றன. நிர்ப்பானி மலையினின்று நீர் வீழ்ச்சிக்குப் பதிலாகக் கல் வீழ்ச்சி, நினைத்த மாத்திரத்தில் ஏற்பட்டுவிடும். மழை பெய்த பிறகு அது அடிக்கடி நிகழ்வது இயல்பு. உருண்டு வரும் கல் கண்ணுக்குத் தெரிந்தால் முன்புறம் அல்லது பின்புறம் ஓடித் தப்பிக்கலாம். அது கண்ணுக்குத் தெரியாதபடி மலை செங்குத்தாயிருக்குமிடத்து, கல் உருண்டு வரும் சத்தம் கேட்டால், சுவரோடு சுவராக ஒட்டி உட்கார்ந்து கொள்ளவேண்டும்.

இனி நடந்து செல்லுதற்குத் தனிப்பயிற்சி யொன்று உண்டு. அல்மோராவினின்று கொண்டு வந்த நெற்றியளவு உயரமுள்ள, கூர்மையான இரும்

பூண்பிடித்த தடி இவ்விடத்தில் ஒப்பற்ற உயிர்த் துணையாகின்றது. இரண்டு கால், ஓர் ஊன்றுகோல் ஆகிய மூன்றினுள் ஏதேனும் இரண்டைத் தரையில் உறுதியாகப் பதிய வைத்துக்கொண்டு மூன்றாவது உறுப்பைத் தூக்கி இடம் மாற்றிவைக்கவேண்டும். இறைவனது நாம உச்சாரணைக்கும் வழி நடப்பதற்கும் சிந்தையைச் சமனாகப் பங்கிட்டுக் கொடுத்தல் அவசியம். கால் வழுக்கி விட்டால், அல்லது வழியினின்று ஓர் அங்குலம் பிசகினால் பின்பு ஆளைக் காணமுடியாது. பாறையில் மோதி உருண்டுவரும் பிணத்தைச் சீறிக் கொந்தளித்துக் கொண்டிருக்கும் காளி நதி விழுங்கிவிடும். சில இடங்களில் நிமிர்ந்து நிற்க இயலாதென்றால் நடப்பதைப்பற்றிய பேச்சு எங்ஙனம் எழப்போகின்றது! அங்குத் தவழ்ந்து கொண்டே போகவேண்டும். கை, கால், கழி ஆகிய அனைத்துக்கும் அங்கு வேலையுண்டு. தைரியமற்றவர் படும்பாட்டைச் சொல்லால் விளக்க முடியாது.

கஷ்டம் வருமிடத்து அதற்கு முடிவே இல்லையென்று தோன்றும். அவ்வாறே இத்தகைய ஆபத்துக்கு ஏதுவான வழிப் பயணமும் வளர்ந்து கொண்டே போகின்றது. கீழே நதி மட்டத்துக்கு இறங்கியாய் விட்டது. இது ஓடுதற்கென்றே பாதாளம் வரையில் வெட்டி யெடுக்கப்பட்டது போன்றிருக்கிறது மலைத்தொடர். நதியின் இரைச்சல் காதைத் துளைக்கிறது. எங்கிருந்து அதற்கு இவ்வளவு வீராவேசம் வந்ததோ தெரியவில்லை. அதன் முன்னிலையில் அடி பணிவதைத் தவிர மனிதன் வேறொன்றும் செய்ய முடியாது. இனிக் கொஞ்ச தூரத்துக்கு வழி

நதியோரம் நோக்கிச் செல்லுகிறது. சில இடங்களில் பாதையமைக்க முடியாதவாறு பாறை துண்டாக வெட்டுண்டு கிடக்கிறது. அத்தகைய இடங்களில் மரக்கட்டைகளைக் கட்டியடுக்கிப் பாதைபோன்று செய்திருக்கின்றனர். வலிவற்ற அக்கட்டைகள் எப்பொழுது ஒடிந்து விழுமென்று காளி கங்கை காத்துக்கொண்டிருக்கிறது. இப்போது பாதையில் ஆங்காங்கு நீர் சொட்டிக் கொண்டிருக்கிறது. சில இடங்களில் நீர்வீழ்ச்சிகளே வழிமீது உண்டு. குடையை விரித்துப் பிடித்தால் நீரின் வேகம் மனிதனை நதிக்குள் தள்ளிவிடும். ஆதலால் நனைந்து கொண்டே எச்சரிக்கையாகக் கழியை ஊன்றிப் பிடித்துக் கொண்டும், பாறையை மற்றொரு கையால் பிடித்துக் கொண்டும், செல்ல வேண்டும். நம் உயிரைக் காப்பது நாமல்ல, நம்மிலும் மேலான பரம்பொருள் ஒன்று நம்மைக் காத்து வருகிறது எனும் உறுதி அவ்விடத்து இயல்பாகவே நமக்கு வந்துவிடும்! நதியோரம் சிறு ஏற்றங்களும் இறக்கங்களும் மாறி மாறி வந்து கொண்டிருக்கின்றன. செங்குத்தாயுள்ள அவைகளின் மீது தவழ்ந்து ஏறவும் இறங்கவும் செய்யவேண்டும். கல், காற்று, நீர் ஆகிய பூதங்களுக்கு அஞ்சிக்கொண்டு பத்து மைல் தூரம் போவதற்கு எட்டு மணி நேரம் பிடித்தது! போய்ச் சேர்ந்த இடம் மால்ப்பா என்பது; உயிர் தப்பிப் பிழைப்பதற்கு ஒரு பாறையின்மீது கட்டப்பட்டு, தர்ம சாலை எனும் பெயர் பெற்றுள்ள, இரண்டு அறைகளையுடைய ஒரு குடிசையே அது.

மால்ப்பாவில் இராத் தங்கல்

## 8

மால்ப்பா என்பது ஒரு கிராமமன்று. வழியில் இராத் தங்குவதற்காகக் கட்டப்பட்டுள்ள ஒரு குடிசை இருக்கிறது. இதற்குச் சற்று மேலே குகை ஒன்று உண்டு. அதில் சுமார் ஐம்பது பேர் தங்கலாம். ஆனால் அங்குத் தொத்தி ஏறுவதற்கு மலையிலே பிறந்து வளர்ந்த மலைவாசிகளுக்குத்தான் இயலும். யாத்திரை வாசிகளுக்கென்று ஏற்பட்ட சிறு வீடு ருமாதேவி எனும் ஒரு பூட்டிய அம்மையாரால் கட்டுவிக்கப்பட்டது. அந்த அம்மை, அன்னை ஸ்ரீ சாரதா தேவியின் சிஷ்யை யாவர். அம்மலை நாட்டைச் சார்ந்த ருமா தேவியார் அப்பக்கங்களில் மிகப் பிரசித்தி பெற்றவர். தர்ம சாலைகள், வைத்திய சாலைகள் முதலியன கட்டுவித்தல், பூட்டியர்களுக்கிடையில் மதப்பிரசாரம் செய்தல் ஆகிய புண்ணிய கருமங்களில் அவர் ஈடுபட்டிருக்கிறார். அந்த அம்மையாரைத் தற்செயலாகச் சந்திக்கும் பாக்கியம் எங்களுக்குக் கிடைத்தது. பூட்டிய மாது எனினும் அவர் நன்றாக ஹிந்தி பேசுகின்றார். ஸ்ரீராம கிருஷ்ண மடத்துடன் தொடர்புடையவர். ஆதலால் மடத்துப் பெரியார் பலரது க்ஷேமங்களைப்பற்றி அவர் எங்களை விசாரித்தார்.

மால்ப்பாவில் தங்கியிருப்பது பூமியை வெட்டி அதன் மத்தியில் தங்கியிருப்பது போன்றிருக்கிறது. நான்கு புறங்களிலும் மலைச்சிகரங்கள் வானுற ஓங்கிக் கண்ணுக்குத் தெரியாது மறைந்து நிற்கின்றன. கழுத்துச் சுளுக்குமாறு உச்சியை நிமிர்ந்து பார்த்தால் மட்டும் கொஞ்சம் வெட்டவெளி தென்படுகிறது.

காளிகங்கையும் அதன் கணக்கற்ற உபநதிகளில் ஒன்ருகிய மால்பா நதியும் போட்டிபோட்டுக் கொண்டு பேரிரைச்சல் எழுப்புகின்றன. நான்கு திக்குகளிலும் சூழ்ந்துள்ள சுந்தர வனத்தை என் னென்பது! நீர்வளம், நிலவளம், மலைவளம் மரஞ் செடி கொடிகளின் வளம் ஆகிய நான்கு வளங்களும் ஒன்றுகூடித் தங்கள் முழு ஆற்றலையும் வெளிப்படுத் தியதின் பயனுக அவ்வனம் உண்டாயிருக்க வேண் டும். வனப்பில் மரம் செடி கொடிகள் ஒன்றை யொன்று வெல்ல முயன்று கொண்டிருப்பது போன் றிருக்கிறது அக்காட்சி. நலம் மிக்க நல்லார் இணங் கியிருப்பதற்கு ஒப்பாகும் இவ்வனம். ஒவ்வொரு மர மும் மகிழ்ச்சியே வடிவெடுத்தா லென்ன விளங்கு கிறது. மரத்தைச் சார்ந்துள்ள கொடி, பெரியார் கேண்மையைப் பெற்றது போன்று பூரித்துக் கொண்டு தொங்குகிறது. செடி சிரிக்கிறது, பூ புன் னகை புரிகின்றது. இலை ஒவ்வொன்றினின்றும் இன்பம் ததும்புகிறது. தெய்விக எழில் எது என் பதை வனம் முழுவதும் சேர்ந்து விளக்குகின்றது. ஓரறிவு உயிரின் கண் இன்பம் இங்ஙனம் இலங்குகை யில் ஆறறிவு உயிராகிய மனிதன் மாட்டு அது எத் தகைய மேன்மையுடன் மிளிரமாட்டாது! மனிதன் மட்டும் ஆனந்தமாக வாழக் கற்றுக்கொள்வானுகில் இப்பூலோகமே கயிலாயமாய்விடாதோ?

## ஒரு சாதுவின் ஒப்பற்ற அனுபவம்

மாலை வேளையில் இருள் சூழ்தற்கு முன்பு சாது ஒருவர் மேலே இருந்து, அதாவது நாங்கள் செல் லும் வழியில் எங்களை எதிர்த்து வந்து சேருகிருர்.

இளம் வயது. பலவிதமான இன்னல்களுக்கு உட்பட்டதன் அறிகுறிகள் முகத்தில் தோன்றுகின்றன. குற்றுயிர் உற்றவர் போன்று காணப்படுகிறார். நடப்பதே அவருக்குப் பெரும் சிரமம்போலும். முக அடையாளம் அவர் தென்னிந்தியர் என்று தெரிவிக்கிறது. தைரியமாக நாங்களும் "எங்கிருந்து வருகின்றீர்?" என்று தமிழில் வினவுகின்றோம்.

"கயிலையங்கிரியிலிருந்து திரும்பி வருகின்றேன்" என்று தமிழிலேயே பதில் வருகிறது.

எங்களுக்கு இருவிதப் பேராச்சரியம். அடிவாரத்தினின்று இருநூற்று நாற்பது மைல் தூரம் உட்புறத்தில் ஹிமயமலையில் சற்று நேரத்துக்கு முன்பு வேற்றுருக இருந்த ஒருவர் இப்போது நம் தமிழர் ஆய்விட்டார்! தாய்மொழி மக்களுக்கிடையில் எத்தகைய ஒற்றுமையை உண்டு பண்ணுகிறது என்பது பிறநாடுகளில் வெகு தூரம் பிரயாணம் போகின்றவர்களுக்கே விளங்கும். இரண்டாவது ஆச்சரியம், தக்க பருவத்துக்கு ஆறு வாரத்துக்கு முன்பே அவர் கயிலையங்கிரிக்குச் சென்று வரச் சாத்தியப்பட்டதா என்பது. அவருக்குத் தாக சாந்தி முதலியன செய்து வைத்துவிட்டு அவருடைய வரலாற்றை ஆவலுடன் கேட்டோம்.

நலிவால் அடங்கிய குரலில் அவரும் சொல்லுவாராயினர்: "நான் ஸ்ரீ ரமண மகரிஷியின் பக்தன். மானச சரோவரத்தில் நீராடி ஸ்ரீ கயிலாயகிரி தரிசனம் பண்ண வேண்டுமென்று உத்தேசித்துச் சென்ற மார்ச்சு மாதம் அல்மோரா வந்து சேர்ந்தேன். மூன்று மாதம் முன்னதாகவே நான் வந்து

விட்டதாகவும், அம்மூன்று மாதங்களையும் திருக்கேதாரம், பத்ரிகாசிரமம் முதலிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று கழிப்பது உத்தமம் என்றும் எனக் கெடுத்து ஓதப்பட்டது. கயிலாயத்தைக் கோரிவந்த நான் மற்றப் பதிகளுக்குச் செல்லுவதும், கால வசதியை முன்னிட்டுக் காத்திருப்பதும் முறையன்று என்றெண்ணி அப்பொழுதே இவ்வழியே ஏகினேன். இவ்விடத்திலேயே அப்போது உறைபனி ஏராளமாயிருந்தது. பனிக்கட்டி நன்கு உருகவில்லையாதலால் அப்போது காளி நதியில் இவ்வளவு உக்கிரம் தென்படவில்லை. கர்பியாங்கை விட்டு மேலே போகக் கூடாதென்று பலர் எச்சரிக்கை செய்தனர். ஆயினும் இரண்டு வாரத்துக்குமேல் அங்கு என்னால் தங்கி யிருக்க முடியவில்லை. வழியில் நில்லாது கயிலையை நோக்கிச் செல்லவேண்டுமென்றும், அதன் பலனாக மரணமே நேரிடினும் அதை அமைதியாக ஏற்றுக்கொள்ள வேண்டு மென்றும் தீர்மானித்துக் கொண்டு புறப்பட்டேன். உடலில் இரண்டு வேஷ்டி, இரண்டு சட்டை, ஒரு கம்பள அங்கி, ஒரு கம்பளம் ஆகிய இவைகளைத்தவிர வேறுபொருள் எதுவும் கிடையாது. பெயரளவுக்கு ஒரு ஜோடி பாதரட்சை. பணத்தை நான் தேடிக் கொள்ளவில்லை. யாராவது ஆகாரம் கொடுத்தால் புசிப்பது, இல்லாவிட்டால் பட்டினி கிடந்துகொள்வது என்று நிச்சயித்துக் கொண்டேன். நான் திபேத்துக்குள் போகும்போது லிப்புத் தடாகக் கணவாய் வழி திறக்கவில்லை. அதை எப்படிக் கடந்து சென்றேனோ, என்று எனக்கே விளங்கவில்லை. திபேத்தில் ஆட்டுமந்தைகள் சென்ற

வழியை உத்தேசமாகப் பின்பற்றினேன். ஒரு நாளெல்லாம் நடந்தால் ஒருவர் அல்லது இருவரைச் சந்திப்பது அரிது. நான் உடுத்திருந்த அற்ப உடைகளுக்காகத் திருடர் பலர் என்மீது கண்வைத்ததும் உண்டு. அவர்கள் என்னைக்கொத்தி யெறியாதுசும்மா விட்டது கயிலை நாதனது கிருபை என்றே சொல்ல வேண்டும். அன்ன பானமில்லாது இரண்டுநாள் மூன்றுநாள் பட்டினி கிடந்ததுண்டு. நான் கயிலாய தரிசனத்தின் பொருட்டு அங்குச் சென்றுள்ள யாத்திரைவாசி என்றறிந்த திபேத்தியர்கள் கொஞ்சம் சத்துமாவு தருவார்கள். ஆனால், பச்சை மாமிசத்தைப் புசிக்கும் அவர்களிடம் சத்துமாவைக் காண்பதுதான் அரிது. திக்கற்றவனாகிய என்னிடத்து அவர்கள் காட்டிய கருணையை நான் மறக்க முடியாது.

"திண்டாடி வழியைக் கண்டுபிடித்து மானச சரோவரத்தில் புண்ணிய ஸ்னானம் செய்துவிட்டுக் கயிலாயகிரி அடிவாரம் போய்ச்சேர்ந்தேன். அங்குத் திபேத்தியர் சிலர் தென்பட்டனர். இரண்டொரு ஹிந்திவார்த்தையைக் கொண்டும் கைச்சாடையைக் கொண்டும் பேச்சு நடந்தது. இவ்வருஷம் பனிக் காலத்துக்குப் பிறகு திருக்கயிலாயத்தைப் பிரதக்ஷிணம் செய்தவர்களுள் அவர்களே முதலாயவர் என்பதும், பிரகாரத்தில் உறை பனியால் இன்னும் ஆபத்துக்கு இடமுண்டு என்பதும் விளங்கலாயின. நல்ல மனமுடையார்க் கிடையில் மொழியின் உதவியின்றியே பேச்சு நடக்கக்கூடும் என்பதை நான் கயிலாயகிரியின் அடிவாரத்தில் கண்டுகொண்டேன்.

அவ் உறைபனியின் மீது கிரியைப் பிரதட்சணம் பண்ணினதை மறுபிறப்பு எடுத்ததென்றே சொல்ல வேண்டும். கைகால் முதலியவைகள் அப்போது அறவே உணர்ச்சி யற்றுப்போயின. விரல்கள் இன்னும் நல்ல நிலேக்கு வந்து சேரவில்லே, பாருங்கள்.

"மலேயை வலம் வந்து முடிப்பதற்கு முன் மூன்று நாய்கள் எங்கிருந்தோ ஓடிவந்து என்னே எதிர்த்தன. திபேத்திய நாய்களேக் கரடிகள் என்று சொல்லுவது ஒவ்வும். மெலிந்து வாடி வதங்கிக் கிடந்த எனக்கு அவைகளிடமிருந்து தப்பித்துக் கொள்ளுதல் சாத்தியப்படவில்லே. உதவியை நாடிக் கூவியழைத்தேன். மானுடர் யாரும் அருகில் தென்படவில்லே. நாய்கள் துணியைக் கிழித்து உடல்மீது வாய்வைக்க ஆரம்பித்துவிட்டன. "கயிலாயபதி! வேண்டுமானல் இவ்விடத்து உட்கார்ந்து உயிர் விடுகிறேன். என்னே இப்படிக் கொல்லாதே, கயிலாயபதி! கயிலாயபதி!" என்று முறையிட்டேன். சிறிது நேரத்துக்குள் நாய்கள் என்னே விட்டு விட்டு ஓடிப் போயின. என்னே அப்போது காத்ததும் இப்போது காப்பதும் கயிலாயபதி என்பதை நன்கு உணர்கிறேன்." இங்ஙனம் அவர் மொழிந்ததை வாய் பொத்தி, மனம் திகைத்து நாங்கள் கேட்டுக்கொண்டிருக்கிறோம். பின்பு கேள்விகள் பல பிறக்கின்றன. பழையபடி ஒடுங்கிய குரலில் அவர் அவைகளுக்குப் பதில் விடுக்கிறார். கயிலாயத்துக்குப் போய்க் கொண்டிருக்கும் ஒருவர், எங்களோடு சம்பந்தப்படாதவர், அங்கு அமர்ந்திருக்கிறார். அவருக்குப் போதிய அளவு உடைகள் கிடையா. இதைக்

கண்ணுற்ற கயிலாயகிரி சாது, தம் கைவசம் இருக்கும் ஒரே கம்பள அங்கியைக் கழற்றி அவருக்கு அளிக்கிறார். "இனி இவ் அங்கி என்னைவிடத் தங்களுக்கு மிகப் பயன்படும்" என்று இனிது இயம்புகிறார்! தியாகமே வடிவெடுத்த அக்காட்சி எங்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. பெருஞ் செல்வ முடையவன் ஒன்றை எடுத்து ஒருவருக்கு வழங்குவது பெரிதன்று. தனக்குப் பயன் படும் ஒரே பொருளைப் பரிவுடன் இன்னொருவனுக்கு எடுத்து வழங்குபவனை யன்றோ வள்ளல் என்று சொல்ல வேண்டும்! கயிலாய யாத்திரையில் நாங்கள் கண்ட முக்கியமான அதிசயங்களுள் ஒன்று இச் சாதுவின் செயலாகும்.

மால்ப்பாவில் கழிந்த இரவை மொழியோவியத்தால் விளக்க முயலுவது பொருந்தும். பகலில் ஆகாயத்தை எட்டிப் பிடிக்க முயன்றுகொண்டிருந்த மலைகள் இரவில் ஆகாயத்தோடு ஒன்றித்து விடுகின்றன. இது மலை, இது விண் என்று பிரித்துப் பார்ப்பது கூர்மையான கண் பார்வை யுடையவர்க்கும் கொஞ்சம் கஷ்டமாகத்தானிருக்கிறது. விண்ணில் மீன்களும் மலையில் மின்மினிப் பூச்சிகளும் இருளுக்கு ஒப்பற்ற சோபையைக் கொடுக்கின்றன. இருளுக்கும் அழகுண்டு என்பது அங்கு நன்கு புலனாகின்றது. மின்மினிப் பூச்சிகள் இங்குமங்கும் பறந்து விதவிதமாகக் கோலமிடுகின்றன. இரண்டு நதிகளின் இரைச்சல் மனதை ருத்திரனது வீராவேச உலகத்துக்கு இழுத்துக்கொண்டு போகிறது. படுத்திருக்கும் வீடு அந்த இடத்தின் பயங்கரத்தைக்

குறைப்பதா யில்லை. மேலே பெயரளவுக்குக் கூரை; நனைந்து கரடு முரடாயிருக்கும் தரையின்மீது காட்டுத் தழை; அதன் மீது படுக்கை. வீட்டைச் சுற்றிலும் நிற்கும் ஆடுகள் இடையிடையே கதவை உந்தித் தள்ளிக்கொண்டு உள்ளே வரப்பார்க்கின்றன. அவைகளை விரட்டி யோட்டும் வேலை ஒரு பக்கம்; கயிலாயத்தினின்று வந்த சாது சொன்ன கடும் வரலாற்றைப் பற்றிய மனோ ராச்சியம் மற்றொரு பக்கம்; காலையில் நடக்கவேண்டிய கடுமையான பாதையைப் பற்றிய எண்ணம் இன்னொரு பக்கம். அந்நிலையில் எல்லாம் கனவு உலகம் போன்றிருக்கிறது. நல்ல வேளையாக அச் சொப்பன லோகத்தில் மின்னலும் இடியும் மழையும் இல்லாதுபோய் விட்டன.

மால்ப்பாவிலிருந்து கர்பியாங் வரையில்—12 மைல்

முந்திய நாள் வழியில் என்னென்ன அல்லல்களுக்கெல்லாம் ஆளாயினமோ அவைகள் அங்கு மீண்டு மொரு முறை அனுபவிக்கப்படுகின்றன. ஒடுங்கிய வழுக்குடைய வழியில் உயரத் தொத்தி ஏறுதல், தலைகீழாக இறங்குதல், தடியின் உதவியைக்கொண்டு தவழ்ந்து செல்லுதல் ஆகியவைகள் நடைபெறுகின்றன. ஆட்டு மந்தைகளைப் பற்றி ஈண்டுச் சிறிது சொல்லவேண்டியது அவசியம். திபேத்தில் பனிக்காலத்தில் புல் ஒன்றும் அகப்படாதாதலால் ஆடுகளை யெல்லாம் அப்போது இந்தியாவுக்கு ஓட்டிக்கொண்டு வந்துவிடுகின்றனர். ஆறு மாதகாலம் சேகரிக்கப்பட்ட ஆட்டு ரோமங்களை யெல்லாம் அப்போது அவ் ஆட்டின்மீதே சுமை சுமையாகக் கட்டிப் போட்டு ஏற்றுமதி செய்து விடு

கின்றனர். வேனிற் காலத்தில் வழி திறக்கும்போது இவ் ஆடுகள் மறுபடியும் திபேத்துக்கு ஓட்டப்படுகின்றன. அப்போது இந்தியாவிலிருந்து கோதுமை மாவு, வெல்லம் முதலியவைகளைத் திபேத்துக்குக் கொண்டு போகின்றனர். நூற்றுக்கணக்கான ஆடுகள் அடங்கிய மந்தைகள் அடிக்கடி வழியில் வரும். ஒவ்வொரு ஆட்டின்மீதும் சுமார் பத்து பவுண்டு எடையுள்ள சாமான்கள் எடுத்துச் செல்லப்படும். அவைகளைச் சந்திக்குமிடத்து, வழி செங்குத்தாயிருக்குமாயின் மனிதர் சுவரோடு சுவராய் ஒட்டி நின்று கொள்ள வேண்டும். வழியின் ஓரத்தில் நின்றால் ஆட்டு மந்தையால் மோதப்பட்டுப் பள்ளத்தாக்கில் அல்லது நதியில் விழ ஏதுவாகும். ஒரு மந்தையை மீண்டு செல்வதற்குச் சுமார் அரைமணி நேரம் பிடிக்கும். வழியில் உள்ள கஷ்டங்களில் இதுவும் ஒன்று.

யாக்கை எனும் இடிகரையை மெய்யென்றிருப்பவர் ஆத்ம சாதனத்துக்கு உரியவர் ஆகார் என்று தாயுமான சுவாமிகள் பகர்ந்துள்ளார். இந்த உவமானத்தின் சிறப்பு மால்ப்பாவினின்று கொஞ்சம் மேலே போகின்றவர்களுக்கு விளங்கும். காளி நதியின் கரை அங்குச் சதா இடிந்து விழுந்துகொண்டிருக்கிறது. ஒரு மலையே சரிந்துவிழுந்து மனிதரையும் ஆட்டுமந்தைகளையும் உயிரோடு புதைப்பதுண்டு. உடலை ஒருவேளை நித்தியமென்று சொன்னாலும் அங்குள்ள ஆற்றங்கரையை அங்ஙனம் சொல்லமுடியாது. முந்திய இரவுதான் ஓரிடத்தில் சுமார் மூன்னூறு அடி உயரத்திலிருந்து எல்லாம் சரிந்து விழுந்து

வழியே இல்லாது செய்துவிட்டது. அவ்விடத்தில் மரக்கிளைகளைப் பிடித்துக்கொண்டு உயரத் தொத்தி யேறிப் பின்பு கீழே இறங்கவேண்டியதாயிற்று. அதைக் கடந்தபின் வழியின் கடுமையைப்பற்றி எண்ணிப் பிரமித்து நின்றுகொண்டிருக்கிறோம். அப்போது உச்சியினின்று ஒரு கல் உருண்டோடி வந்து தண்ணீரைத் தடாரென்று வாரி இறைத்து விட்டு நதியினுள் மறைகிறது. அக் கல் மனிதன் மீது வந்து மோதினால் அவன் கதி என்னுகும் என்பது அப்போது விளங்குகிறது. அவ்விடத்தில் மனிதன் உயிர் தரித்திருப்பது அவனது சுயப்பிரயத்தனத்தாலன்றி ஈசன் செயலாலே என்று மனதுக்கோர் உபதேசத்தை இயற்கைத் தாய் புகட்டுகிறுள். மால்ப்பாவினின்று ஐந்து மைல் தூரம் சென்ற பிறகு கர்பியாங் பரியந்தம் வழியில் ஆபத்துக்கள் அதிகம் கிடையா.

ஏழு மைல் நடந்த பிறகு, பூதி எனும் கிராமத்தில் உச்சி வேளையில் சமைத்து உண்டு இளைப்பாறுதற்குத் தங்கினேம். தங்குதற்கு வேறு இடம் ஒன்றும் கிடையாமையால் பள்ளிக்கூடத்துக்குப் போனேம். உபாத்தியாயர் உடனே பிள்ளைகளை வீட்டுக்கு அனுப்பிவிட்டுப் பள்ளிக்கூடக் கட்டிடத்தை எங்கள் வசம் ஒப்புவிக்கிறுர். அப்படி அவர் செய்வது முறையோ என்று கேட்டதற்கு, அரிதாகக் கயிலாய யாத்திரை வருபவர்களுக்கு அத்தகைய அற்பக் கைங்கரியங்கள் கூடத் தம்போன்றவர்கள் செய்யலாகாதா என்று உபாத்தியாயர் மறுத்து வினவுகிறுர். அக்கிராமத்தின் இயற்கை அழகை என்

னென்பது! விச்வரூபம் தரித்த மொட்டை மலை ஒரு பக்கம், அடர்ந்த காடு ஒரு பக்கம், பனிக்கட்டியால் மூடி பூண்ட மலை இன்னொரு பக்கம், கண்ணுக் கெட்டுமளவு பள்ளத்தாக்கு மற்றொருபக்கம்; அத்தகைய இடத்தில் அமர்ந்துகொண்டு பூதி எனும் கிராமம் பிரகிருதி தேவியின் அழகை அரசு புரிகிறது.

இரண்டு மைலுக்கு ஒரு பெரிய ஏற்றம்; திணறிக் கொண்டும் பெருமூச் செறிந்துகொண்டும் மேலே போகவேண்டும். பிறகு ஒரு மைலுக்கு வழி சமனயிருக்கிறது. தேவதாரு மரங்களும், ஏனைய விதவிதமான மரங்களும், பட்டுப்போன்ற புல் தரையும் அதன்மீது நவரத்தினங்கள் போன்ற சிறு புஷ்பங்களும்கூடி அவ்விடத்துக்கு அரியதொரு சோபையைக் கொடுக்கின்றன.

பிறகு இரண்டு மைலுக்கு இலேசான இறக்கம். பனிக்கட்டி மண்டலம் எங்கள் பாதத்துக்குக் கீழ் வந்துவிடுகிறது! உஷ்ணப் பிரதேசத்திலேயே பிறந்து வளர்ந்த நாங்கள், சொப்பனத்திலும் அவ்வளவு பெரிய உறைபனிப் பாறையைக் காணுத நாங்கள் இப்போது உண்மையாகவே அதன்மீது உலாவுகிறோம். கீழ்ப்பாகம் உருகி ஓடையாக ஓடுகிறது. மேற்பாகமோ வெளுத்து உறைந்த பாறை; தட்டினுல் ஒருவாறு கற்பாறைபோன்று சத்தப்படுகிறது. கழியின் கூர்மையான இரும்புப் பூணுல் விரைந்து குத்திஞல் "சத்" தென்று அது உள்ளே இரண்டு அங்குலம் நுழைகிறது. சிறு துண்டுகள் சிதறி ஓடுகின்றன. அவைகளைக் கையில் எடுத்தால் தேள்

கொட்டுவது போன்றிருக்கிறது. அவைகள் கல் அல்ல, பனிக்கட்டி என்பது அப்போது விளங்கு கிறது. உலகில் இத்தகைய சிருஷ்டியும் உண்டா எனும் வியப்பு உண்டாகிறது.

இக்காலத்து அரசியல் துறையில் வைத்துப் பார்க்குமிடத்து, இந்தியாவின் முடிவில் இருக்கும் கடைசிக் கிராமமாகிய கர்பியாங் வந்து சேருகிறோம். இது சமுத்திர மட்டத்துக்குமேல் 10,500 அடி உய ரம். நான்கு திசையிலும் உறை பனி மலைகள். அல் மோராவிலிருந்து சுமார் 150 மைல் தூரம் நடந்து வந்தாய்விட்டது. கயிலையங்கிரிக்கு இன்னும் சுமார் 150 மைல் பாக்கி. இக்கிராமத்திலிருந்து எங்கள் யாத்திரை புதியதொரு கோலம் பெறுகிறது.

## 9

### கர்பியாங்கில் தங்கல்

கயிலையங்கிரி யாத்திரை முறை கர்பியாங் எனும் ஊரிலிருந்து அறவே மாறுகிறது. அதற்கு வேண் டிய ஏற்பாடுகளைச் செய்தற்கு அவ்வூரில் இரண்டு அல்லது மூன்று நாட்கள் தங்கவேண்டும். கர்பி யாங் சமுத்திர மட்டத்துக்கு மேல் 10,500 அடி உய ரத்தில் இருக்கிறது. உயரப் போகப் போக சுவா சிப்பது கஷ்டமாதலால் கூலியாட்கள் மூட்டை தூக் கிக்கொண்டு மேலே போவதில்லை. அதற்காகக் குதிரைகள் அமர்த்துவது வழக்கம். நடந்துபோக இயலாதவர்களும் கர்பியாங்கிலிருந்து குதிரைச் சவாரி செய்வார்கள். அங்கு அவைகள் வாடகைக்கு அகப்படும். அவைகளை அமர்த்துவது முக்கியமான வேலை. இனி வழியில் தங்குதற்கு வீடு இல்லை. ஆத

லால் கர்பியாங்கிலிருந்து கூடார வாசம் ஆரம்பிக்கிறது. வாடகைக்கு அங்குக் கூடாரங்களும் அகப்படும். திபேத்தில் தயாரிக்கப்படும் கம்பளம் ஒன்று உண்டு. அதற்குக் கொத்மா என்று பெயர். கூடாரத்துக்குள் பனிக்கட்டி போன்ற தரையின்மீது விரிக்க அவைகளிற் சிலவற்றையும் வாடகைக்கு எடுத்துக் கொள்ளவேண்டும். திபேத்தின் எல்லைப் புறத்தில் திருடர் பயம் மிகுதியாயுண்டு. கம்பளத்துக்காகவும் உணவுப் பொருள்களுக்காகவும் வேண்டி அவர்கள் வழிப்போக்கர்களைக் கொள்ளை யடிப்பதும் கொலை யாடுவதும் உண்டு. கூடுமானால் குதிரைகளையும் அவர்கள் அடித்து ஓட்டிக்கொண்டு போய்விடுவார்கள். ஆதலால் பாதுகாப்புக்காகத் துப்பாக்கியும் ஏராளமாகத் தோட்டாக்களும் வேண்டும். அவைகள் கர்பியாங்கில் வாடகைக்கு அகப்படுகின்றன. இந்த யாத்திரையில் அவைகளைக் கையாளுதற்கு அரசாங்க அனுமதி வேண்டியதில்லை. துப்பாக்கியைக் கையாளுதல் வழிகாட்டியின் தொழில். குதிரை, கூடாரம், கொத்மா, துப்பாக்கி ஆகிய இவைகளையெல்லாம் விட முக்கியமானவன் வழிகாட்டி. யாத்திரைவாசிகளின் உயிர் திபேத்திலிருக்கும் பரியந்தம் அவன் கைவசம் இருக்கிறதென்றே சொல்லவேண்டும். அவன் செய்யும் அரும்பணியைப்பற்றிய வர்ணனை பின்னால் வரும். தக்க வழிகாட்டி ஒருவனை நாங்கள் நியமித்துக் கொண்டோம். கிச்சா கம்பா என்பது அவன் பெயர்.

மேலைத் திபேத்தின் எல்லைப் புறத்தில் இந்தியாவின் கடைசிக் கிராமம் கர்பியாங் என்கிறோம்

ஆதலால் அது ஒரு முக்கியமான வியாபார ஸ்தலம். பூட்டிய வியாபாரிகளே அங்குப் பெரிதும் வசித்து வருகின்றனர். வீடுகள் அழகாகவும் வலிவுடையவை களாகவும் கட்டப்பட்டிருக்கின்றன. வீடுகளை அழகாகக் கட்டுவது ஒன்று. அவைகளை அழகாக வைத்திருப்பது மற்றொன்று. கர்பியாங்கில் வீடுகளும் வீதிகளும் மிக அசுசியாகவே வைக்கப்பட்டிருக்கின்றன. இந்தியக் கிராமங்கள் அசுசிக்குப் பேர் போனவைகளென்றால், இந்தியாவின் முடிவில் இருக்கும் கர்பியாங் அசுசியே வடிவெடுத்திருக்கிறது. கீழே ஒன்றரை மைல் தூரத்தில் காளிநதி ஓடுகிறது; எனினும் கிராமத்தில் ஜலவசதி போதாது. அருகிற் சென்று பார்த்தால் மனிதன் சுத்தமாக வாழக் கற்றுக் கொள்ளவில்லை யென்பது புலனாகின்றது. ஆனால், தூரப் பார்வைக்கு இயற்கை வனப்பளிக்கிறது. நான்கு பக்கமும் உயர்ந்த மலைகள்; நடுவில் நீண்டதொரு பள்ளத்தாக்கு! சாகுபடி செய்வதற்குத் தட்டையான பூமி. அதில் கர்பியாங் கிராமம்.

எங்களுக்குக் கடிதமெழுதுபவர்கள், எங்கள் பெயரையிட்டு, கயிலாயகிரி யாத்திரைவாசிகள், அல்மோரா, என்று விலாசம் எழுதினால் போதுமானது. தேடிவந்து கடிதம் கைக்குச் சேர்ந்து விடுகிறது. தபால் இலாகா அவ்வளவு தூரம் உதவி புரிகிறது. நாங்கள் கடைசியாகக் காணும் தபாலாபீசு கர்பியாங்கிலிருக்கிறது. வந்த கடிதங்களைப் பெறுதற்கும், நாங்கள் திபேத்துக்குள் சென்றபிறகு வரும் கடிதங்களை நிறுத்தி வைக்கும்படி சொல்லுதற்கும், பிற காரியங்களை முன்னிட்டும் தபால் நிலை

யத்தை நாடிச்சென்றோம். சந்து பொந்துகளில் அலைந்து தடுமாறிச் சென்றபின் தபாலாபீசு என ஒரு வீடு காட்டப்பட்டது. தபால் பெட்டியும் பெயர் விளக்கப் பலகையும் தென்படவே அதுதான் தபாலாபீசு என்பது தோற்றமாயிற்று. மாடி மூடப்பட்டுக் கிடக்கிறது. கீழ்த்தளத்தில் வைக்கோல் குப்பை கூளம். என் செய்வதென்று தெரியாது திகைத்து நிற்கின்றோம். வழியில் செல்லும் வயோதிகர் ஒருவர் "அதில் மேலே ஏறுங்கள்" என்கிறார். பின்னும் பிரமித்த எங்களுக்குப் பனிச்சென்று உண்மை விளங்குகிறது. பிரம்மதேவன் படைப்பில் வேறு எங்கும் கண்டிராத ஒரு படிக்கட்டை இங்குக் காண்கிறோம். பாதம் வைப்பதற்குப் பள்ளம் பள்ளமாக வெட்டப்பட்ட மரத் தூண் ஒன்று மாடியையும் தரைத்தளத்தையும் இணைக்கின்றது. திரும்பி வந்து பாதரட்சைகளைக் காண்போம் என்னும் நம்பிக்கையுடன் அவைகளை வீதியில் விட்டுவிட்டு ஒருவாறு தென்னை மரத்தில் ஏறுவது போன்று அக் கம்பத்தில் ஏறிக் கதவைத் தள்ளிப் பிடித்துக்கொண்டு ஓர் இருட்டறைக்குள் நுழைந்தோம்!

சாயை போன்று மனிதர் சிலர் தென்படுகின்றனர். இருளில் பார்க்கும் இயல்பு சிறிது நேரத்துக்குள் கண்ணுக்கு வந்துவிடுகிறது. மற்றவர் கண்ணுக்கு முக்கியமானவராக ஒரு தொண்டு கிழவனார் தென்படுகிறார். அவர் ஆற்றும் அலுவலிலிருந்து அவர்தான் போஸ்ட் மாஸ்டர் என்று யூகிக்கிறோம். அவர் கேள்விகளுக்கு இன்புடன் பதில் இறுக்கிறார். அவர் சிரிக்கும்போது பொக்கைவாயின் இரு நுனி

களும் காதுவரையில் நீள்கின்றன. அதைப்பார்க்கப் பிரீதியாயிருக்கிறது. கடிதக்கட்டு ஒன்றை முன்னே எடுத்துப்போடுகிறார். ஒரு வருஷத்துக்கு முன்பு வந்த கடிதங்கள் கூடக் கேட்பாரின்றிக் கிடக்கின்றன! எங்கள் கடிதங்களைப் பொறுக்கி யெடுப்பதில் எங்களுக்கு உண்டான ஆனந்தத்தை வர்ணிப்பதைவிட வாசகர் யூகிப்பது நன்று. அவ்வளவு தூரத்தில், மலையுச்சியில், பல கஷ்டங்களுக்கு உட்பட்டுச் சென்றவிடத்தில் அன்பர் கடிதங்களைக் காணுமிடத்து ஆனந்தம் ஏன் உண்டாகாது?

மூன்று நாட்களில் ஆயத்தங்களெல்லாம் ஆய் விட்டன. சென்னை, பம்பாய், வங்காளம், ஐக்கிய மாகாணங்கள் ஆகிய நான்கு மாகாணத்தவர், நான்கு கூட்டங்களாக முன்பின்னுக அல்மோராவி னின்று புறப்பட்டவர்கள், இவ்வூரிலிருந்து ஒன்று சேர்ந்து போவதென ஏற்பாடு பண்ணப்பட்டது. மானுடர் மொத்தம் நாற்பத்து நான்குபேர்; குதிரைகள் அறுபத்து நான்கு; வழி காட்டுபவன் கொண்டுவந்த நாய்கள் இரண்டு; ஆக மொத்தம் நூற்றுப்பத்து உயிர்ப்பிராணிகள் திபேத்தில் கயிலையங்கிரிக்குச் செல்ல ஆயத்தமாயின. மூட்டைகளை நிறுத்தெடுத்தல், அவைகளைக் குதிரைகளின் மீது ஏற்றுதல், சவாரி செய்கின்றவர்களுக்குத் தகுந்த குதிரைகளைப் பொறுக்கிக் கொடுத்தல் ஆகிய செயல்களால் உண்டான அமளிக்கோர் அளவில்லை. நான்கு மணிநேரம் தலை தடுமாறித் திண்டாடி வேலை செய்தபிறகு எல்லாம் ஒருவகையில் ஓர் மைக்கு வருகின்றன. அணியணியாகக் கட்டப்

பட்டிருக்கும் குதிரைகளில் சில அவிழ்த்துக் கொண்டு, முதுகின்மீது மூட்டையுடனே இங்குமங் கும் துள்ளிக் குதித்தோடுகின்றன; மூட்டை யேற் றும்போது இன்னும் சில இரண்டு காலில் நிற்க முயலுகின்றன, புறப்படும்போது இவ்வளவு துடி துடிப்புடைய குதிரைகள் திரும்பிக் கர்பியாங் வரும் போது குற்றுயிரோடு எலும்பும் தோலுமாக வந்து சேரும்.

## 10

### கர்பியாங்கிலிருந்து காலபானிவரையில் 10 மைல்

தன் பொறுப்பை ஏற்றுக்கொண்ட பிறகு வழி காட்டி சேனைத்தலைவன் போன்று வினையாற்று கிறான். அவனது உத்தரவின்றி மனிதனாவது குதிரையாவது புறப்படலாகாது. எல்லாம் ஆயத்த மானபின்பு எங்களையெல்லாம் ஓரிடத்தில் நிற்க வைத்துவிட்டு அவனும் மற்றக் குதிரையாட்களும் அணியாகத் தலை வணங்கி நிற்கின்றனர். அப் போது அவர்களின் தாய்மார்கள் வந்து, தலையில் வெற்றிக்கொடி சூட்டி, வழியில் நேரும் அல்லல்களை யெல்லாம் வென்று, கயிலை மலையானது தரிசனம் பெற்று, இனிது திரும்பி வரவேண்டுமென்று ஆசி கூறுகின்றனர். அக்காட்சி மனதைக் கவர்கிறது. பண்டைக் காலத்தில் வீரர்களைப் போர்க்களத்துக்கு அனுப்பிய தாய்மார்களின் செயலை இச்சம்பவம் ஞாபகமூட்டுகிறது. ஆசிச்சடங்கு முடிந்ததும் ஜெய கோஷம் முழக்கிக்கொண்டும், கயிலாய பதியை வழுத்திக் கொண்டும் கூட்டம் புறப்படுகிறது.

ஒரு மைல் தூரம் இறங்குகிறோம். இன்னு மொரு மைல் தூரம் நதியோரம் நடக்கிறோம். பிறகு பலமில்லாத ஒரு பாலத்தின் வாயிலாகக் காளி நதி கடக்கப்படுகிறது. பலநாளாகக் கண்ணால் பார்த்துக் கொண்டு வந்த நேபாள ராஜ்யத்தில், இப்போது தான் கால் வைக்கிறோம். பாதை நதியோரமே போவதால் சமனாகவே இருக்கிறது. இருமருங்கிலும் மலைகள் வானத்தைத் துளைத்துக்கொண்டு நிற்கின் றன. கர்ப்பியாங்குக்கு மேலும் கீழும் ஆங்காங்குத் தென்படும் அருவிகளைக் கணக்கில் எடுக்க முடியாது. ஓரிடத்தில் ஒரே பிரவாகமாக அது ஓடுகிறது. ஆகாய கங்கை பூலோகத்தில் பிரசன்னமான தென்று அதைத்தான் சொல்லவேண்டும். அதன் கர்ஜனை காதைத் துளைக்கிறது; நெஞ்சைக் கலக்கு கிறது. வீழ்ந்து தத்தளிக்கின்ற தண்ணீரினின்றும் புகை பறக்கின்றது. அப்புகையின்மீது சூரிய கிர ணம் படியும்போது வானவில் ஆயிரக்கணக்கில் ஆவிர்ப்பவிக்கின்றது. கணக்கில் அடங்காத இத் தனை இந்திர தனுசுகள் நர்த்தனமாடும் இவ்வி டத்தை இந்திரலோகம் என்றே இயம்பவேண்டும். இன்னோரிடத்தில் மலைச்சுவரைப் பொத்துப் பீறிட் டுக்கொண்டு வருகிறது புனல் வீழ்ச்சி. மலைச்சாரல் நெடுக வெள்ளிப்பட்டை பதித்ததுபோல் தோன்று கிறது தூரத்தில் உள்ள ஓர் அருவி. கார்மேகம் போன்ற மலையின் மீது மறையாத மின்னல் போன்று மிளிர்கிறது மற்றொரு வீழ்ச்சி. கழுத்தொ டியத் தலை நிமிர்ந்து பார்த்தால் மலையுச்சியில் சிவ பெருமானது ஜடாபாரத்தினின்று வருவதுபோல்

புறப்படுகிறது ஒரு புனல் வீழ்ச்சி. ஆனால் அது அடிநிலத்தை வந்து தொடுதற்கு முன்பே அதை நுண்ணிய அணுக்களாகச் சிதறடித்துத் தூக்கிக் கொண்டு போய் விடுகிறது மெல்லிய பூங்காற்று. வேறு ஓரிடத்தில் தூவானம் நம் தேகத்தில் படிந்து நம்மை நீராட்டுகிறது. மகாராஜாக்களுக்கும் கிடைப்பதற்கரிய அத்தகைய மஞ்சனத்தை கயிலா யத்துக்குப்போகும் வழியில் இயற்கைத்தாய் இலவச மாக எல்லார்க்கும் அளிக்கின்றாள். மற்றோர் அருவி மலையில் பட்டும் படாதும் கீழே இறங்கி வருகின்றது. கங்கை என்னும் மங்கை புன்னகை பூத்தவளாய் விண்ணுலகினின்று மண்ணுலகுக்கு எழுந்தருள்கின் றாள் போலும்! முன்னைய மேலோர் நதியை உயர் திணையாகக் கருதியது வெறும் கற்பனையன்று என் னும் தெளிவு இக்காட்சியைக் காண்பவர்க்கு உண் டாகும். வான் உலகினின்று நிலவுலகின்கண் கூடை கூடையாக முத்தைவாரிச் "சல், சல்" என்று இறைத்தாலென்ன இன்னுமோர் இடத்தில் நீர் சிதைந்து சிந்துகிறது. ஒரு கூடை முத்துக்கும் மற் றொரு கூடை முத்துக்கும் இடையே இருக்கும் இடைவீடே அக்காட்சிக்கு அத்தகைய கவர்ச்சி யைத் தருகின்றது. கயிலைக்குப் போகும் வழியில் நாம் காணும் இத்தகைய நீர் வீழ்ச்சிகளால் மன துக்கு உண்டாகும் எழுச்சியே இந்த யாத்திரையின் ஒப்பற்ற பலன்களில் ஒன்றாகும்.

பிற்பகல் மூன்று மணிக்குப் புறப்பட்ட நாங்கள் இரவு எட்டு மணிக்குக் காலபானி போய்ச் சேரு கிறோம். கூடாரங்களை அடிப்பதற்கு வசதியான



கூடார வாசம்






கர்பியாங்கில்
எங்கள்
குதிரைப் படை

சமதரை ஒன்று இருக்கிறது. ஆனல் இருளில் அவை களை நாட்டுதற்குள் பெருங்கஷ்டம் ஏற்படுகிறது. போதாததற்கு அதே வேளையில் மழையும் வந்து விடுகிறது. அவரவருக்குரிய படுக்கை முதலிய சாமான்களைப் பிரித்தெடுக்கும் வகையில் ஒரே அமளி. குதிரைச் சவாரி செய்துகொண்டுவந்த ஒரு வரைக் காணுமையால் கவலைக் கடலின் உக்கிரம் பன்படங்கு அதிகரிக்கிறது. கையில் தீபம் ஒன்றை எடுத்துக்கொண்டு வழிகாட்டியும் மற்ெருருவரும் கூவியழைத்த வண்ணமாய்ப் பாதையைப்பற்றித் திரும்பிப் போகின்றனர். நெடு நேரத்துக்குப் பிறகு அவர்கள் காணுமற் போனவரைக் குதிரையுடன் அழைத்து வருகின்றனர். இருளில் குதிரை தனி யாக மேலேவர மறுத்து, திரும்பிக் கர்பியாங்குக்கு ஓட முயன்றதாம். ஆனல் அதை மேலே செலுத்தப் போராடினர் அதன்மீது சவாரிசெய்தவர். உதவிக்கு இருவர் செல்லாதிருந்தால் அப் போராட்டத்தில் குதிரையே வெற்றியடைந்திருக்கும்.

விறகு எரித்துச் சமைக்கும் வேலை கர்பியாங்கில் முடிவுற்றது. கூடார வாசத்தோடு மண்ணெண் ணெய் அடுப்பில் (Kerosene Oil Stove) சமைக்கும் வேலையும் ஆரம்பமாகிறது. ஏனெனில் உறைபனிப் பிரதேசத்தில் மரம் செடி கொடி முதலியன வளரா. ஆதலால் விறகும் அகப்படா. புதிய மூன்று மண் ணெண்ணெய் அடுப்புகளை மூட்ட முயலுகிறோம்! ஆனல் அவைகள் எரிய மறுதலிக்கின்றன. அதற்குக் காரணம் கயிலை மலையானுக்குத்தான் வெளிச்சம்! நெடுநேரத்துக்குப் பிறகு அரைகுறையாக வெந்த

உணவை உண்டு பசிப்பிணியை ஒருவாறு துடைத்து விட்டுத் தூங்க முயலுகிறோம். ஆனால் குளிரோ தூக்கத்தை வெருட்டி யோட்டுகிறது. கூடார வாசத்தின் முதல் நாளிலேயே இத்தனை இன்னல்கள் என்றால் இனி இதுபோன்று மூன்று வாரம் கழிப்பது எங்ஙனம் எனும் பீதி ஏற்படுகிறது.

## 11

### கணவாயைக் கடத்தல்

கூடுகின்ற மூன்று நதிகளுள் ஒன்று சேறுபடிந்து கறுப்பு நிறமுடையதா யிருக்கிறது. ஆதலாலே அவ்விடத்துக்குக் காலபானி (கறுப்பு நீர்) எனும் பெயர் வந்தது. உச்சி வேளையில் அவ்விடத்தை விட்டுப் புறப்படுகிறோம். ஆனால் மூன்று மைல் கடந்ததும் மேலே செல்லலாகாது என்று வழிகாட்டி கட்டளையிடுகிறான். நாங்கள் தங்கிய இடத்திலேயே இலேசாகப் பனிக்கட்டி விழ ஆரம்பித்துவிட்டது. கணவாயின் அருகில் சென்றால் வீழ்கின்ற பனிக் கட்டியில் மனிதன் மூழ்கிவிடுவான். எட்ட இருந்து கொண்டே அதன் கடுமையைக் காணலுற்றோம். இவ்விதம் நாள் ஒன்று கழிந்தது. வானம் தெளிவுற்றதும் மறுநாள் மாலையில் லிப்புத் தடாகக் கணவாயின் அடிவாரத்தில் சென்று தங்கினோம். பனிக் கட்டி ஆங்காங்குச் சிதறிக் கிடக்கிறது. கம்பள உடைகளை ஏராளமாகப் போட்டுக்கொண்ட நாங்கள் பூதகணங்கள் போன்று தென்படுகின்றோம். குளிர் நிறைந்தது எனினும் அந்நிலை உள்ளத்தில் குதூகலத்தை ஊட்டுகிறது. இரவில் வழிகாட்டி வானத்தை உற்று நோக்குகிறான். அதிகாலையில் எல்லாம்

தெளிவுற்றிருக்குமென்றும் ஆதலால் நான்கு மணிக்கே நடக்க ஆரம்பிக்கவேண்டு மென்றும் அவனிடமிருந்து ஆணை பிறக்கின்றது. கடப்பதற்கு மிகக் கஷ்டமான இடம் லிப்புத் தடாகக் கணவாய். அங்குப் பனிக்கட்டி விழும்பொழுதும் ஆபத்து, அது வெயிலில் உருகி ஓடும்பொழுதும் ஆபத்து. ஆதலாலே தெளிவுற்றிருக்கும்போது அக்கணவாயைக் கடக்க வேண்டும்.

விடியற்காலம் மூன்று மணிக்குக் கடிகாரம் ஆர்ப்பரித்து எங்களை எழுப்புகின்றது. குளிரையும் பொருட்படுத்தாது எல்லாரும் எழுந்து சுறு சுறுப்பாக வேலை பார்க்கின்றனர். அரைமணி நேரத்துக்குள் சிற்றுண்டியைத் தயார் செய்து உண்ண ஆரம்பிக்கின்றோம். அவ்விடத்துச் சிற்றுண்டியைப் பேருண்டி போன்று பெரு மிதமாகக் கொள்ள வேண்டும். இலேசான காற்றுடைய அவ்விடத்தில் உச்சியில் ஏறும்போது வயிறு நிறைந்திருந்தாலன்றி வாந்தியும் மயக்கமும் வரும். போதாததற்கு சட்டைப் பையிலும் கொஞ்சம் உண்டியும் மாங்காய் வற்றலும் எடுத்துக் கொள்ளப்படுகின்றன. குதிரையாட்கள் மூன்றரை மணிக்கே கூடாரங்களைக் கலைக்கின்றனர்; விரைந்து மடித்துச் சுருட்டிக் கட்டிக் குதிரைகள் மீது ஏற்றுகின்றனர். ஒவ்வொரு சிறு செயலையும் வழிகாட்டியானவன் கூர்ந்து கவனிக்கிறான். நான்கு மணிக்கு முன்பே எல்லோரையும் நடாத்துகின்றான். உயிர்ச்சேத மின்றி அனைவரையும் அப்புறம் கொண்டு சேர்ப்பது அவன் பொறுப்பன்றோ?

மலையில் மேலே செல்லச் செல்லக் காற்று இலேசாகின்றது. பதினாயிரம் அடிக்கு மேலே சுவாசிப்பதற்குச் சிரமம் ஏற்படுகிறது. லிப்புத் தடாகக் கணவாயின் உயரம் 16,800 அடி. நான்கு மைல் தூரத்துக்கு ஒரே ஏற்றம். நடக்கும்போது ஆயாசம் விரைவில் வந்துவிடுகிறது. போதிய அளவு காற்று இன்மையால் மூச்சு வாங்குவதற்கு மூக்குத் துவாரம், வாய் ஆகியவைகளை ஒருமிக்கப் பயன் படுத்த வேண்டியிருக்கிறது. அப்படி யிருந்தும் ஹிருதயம் துடி துடிக்கிறது. அதன் வேலை நின்றுவிடும் போலும் தென்படுகிறது. வயிற்றில் ஆகாரம் போதாதிருந்தால் வாந்தி வருகிறது; உட்கொள்ளக் காற்றுப் போதாமையால் தலை சுழலுகிறது. இவ்விரண்டு வேதனைகளையும் நீக்குதற்கு இடையிடையே சிற்றுண்டி ஏலவேண்டும்; பிறகு மாங்காய் வற்றலைச் சப்பிக் கொண்டே நடக்கவேண்டும்.

இந்த யாத்திரையில் நாள்தோறும் நடப்பதன் பலனாகக் காலில் ரத்தம் சுரந்து கொண்டால் அதற்கு ஒரு பரிகாரம் உண்டு. காலைத் தூக்கி மேட்டின்மீது போட்டுக்கொண்டு தலைகீழாகச் சரிந்து சிறிதுநேரம் கிடந்தால் காலில் விஞ்சிய ரத்தம் உடலுக்கு வந்து விடும். ஆனால் பனிக்கட்டியின்மீது நடக்கும்போது ரத்த ஓட்டம் மிகக்குறைவு. ஆயாசம் உண்டாவதெல்லாம் சுவாசிப்பதற்குக் காற்றுப் போதாமையாலே. தலை சுற்றுகிறது; சற்றுக் கீழே பனிக்கட்டியின்மீது உட்காரலாமென்ற அவா உண்டாகிறது. அதற்கு எத்தனம் செய்யும்போது வழிகாட்டி அருகில் ஓடி வருகிறான்; உடலைப் பிடித்து

ஒரு குலுக்குக் குலுக்குகிறான். அன்புடன் தோளில் தட்டிக் கொடுக்கிறான்; உற்சாகமூட்டி ஓயாது நடக்கும்படி வேண்டுகிறான்; உட்கார வொட்டாது தடுப்பதில் அவனுக்கு ஏன் அவ்வளவு அக்கறை என்பதன் மர்மம் சிறிது நேரத்துக்குள் எங்களுக்கு எடுத்து ஓதப்பட்டது. அலுப்புற்றவன் உறைபனியின் மீது அமர்ந்தால் அவனுக்கு உறக்கம் வரும். தலைசாய்ந்து படுத்தால் ஆள் பின்பு எழுந்திரான். நெடுந்துயிலில் உடல் துறந்து விடுவான்! மரணங்களுள் உறைபனியின்மீது உறங்கி உயிர் துறப்பதே சாலச் சிறந்ததென்று சொல்லப்படுகிறது. சமாதி நிலையில் உடலை உகுப்பதற்கு ஒப்பானதாம் அது. தான் சாகப் போகின்றான் என்று தெரிந்து கொள்ளாது மனிதன் தூங்கி விடுகிறான். அப்படிப்பட்ட ஆபத்து ஏதாவது தற்செயலாக ஏற்படாதிருத்தற் பொருட்டே வழிகாட்டி உற்சாக மூட்டி எங்களை நடாத்துகின்றான்.

அதிகாலையில் உறைபனியின்மீது நடப்பதால் ஆபத்துக் குறைவு என்று சொல்லவேண்டுமே யொழிய ஆபத்தே இல்லையென்று சொல்ல முடியாது. உயர ஏற ஏறச் சில இடங்களில் வழி ஒடுங்கி விடுகிறது. ஒரு பக்கம் பாதாளம் போன்ற பள்ளத்தாக்கு; மற்றொரு பக்கம் பனிக்கட்டியால் மூடப்பட்ட செங்குத்தான மலை. மேலிருந்து உறைபனிப்பாறை வீழ்ந்தால் மனிதன் உயிரோடு புதைக்கப்படுவான் அல்லது பாதாளத்துக்குப் பிணமாகக் கொண்டு சேர்க்கப்படுவான். பாதையின் மீதுள்ள பனிக்கட்டியும் இலேசாக உருகிக் கொண்டிருக்கிறது. சில

இடங்களில் பனிக்கட்டியைப் பொத்துக்கொண்டு கால் கீழே பூமிக்குள் நுழைகிறது. இரும்புப் பூண் பிடித்த ஊன்றுகோல் இப்போது உயிரைக் காக்க வல்லதாயிருக்கிறது. ஆயினும் காலின் கீழ் உள்ள உறை பனிப்பாறை அடியோடு நழுவி விட்டால் அதோகதிதான். எமனுடைய வாயினுள் புகுந்து சுவர்க்கத்துக்குப் போவது போன்றிருக்கிறது இவ்விடம். அத்தகைய ஆபத்துக்கு ஏற்ப அங்குக் குடிகொண்டுள்ள அமைதி, நமனுடைய முன்னிலையில் இயல்பாகவே உண்டாகும் அமைதியை ஒத்திருக்கிறது. இறைவனுடைய திருநாமத்தை உச்சரித்துக்கொண்டு அடியடியாக அளந்து மேலே ஏறும்போது அகன்று கனத்த உறை பனியின்மீது வந்து விடுகிறோம். அது எவ்வளவு ஆழமுடையது என்பது நமக்குத் தெரியாது. ஆதலால் அது வழுக்கி விழுந்து விடும் எனும் அச்சமில்லை. ஆனால் கால் தடுமாறுகிறது; தலை சுழல்கிறது; கண் சிறிது சிவந்து விடுகிறது; சுவாசிப்பதற்குக் காற்றுப் போதாது; நாசித்துவாரங்களும் வாயும் சேர்ந்து திணறுகின்றன. நிமிர்ந்து பார்த்தாலோ வெள்ளி மயமான வழி இன்னும் வானுலகை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறது. மேலும் செல்ல மனம் மறுதலிக்கிறது. அப்போது அதற்கோர் உபதேசம் புகட்டவேண்டி வருகிறது; 'மனமே! உச்சியைப் பார்த்து ஏக்கமுறாதே; பாதத்தின் கீழ் உள்ள தரையைப் பார். அது சமுத்திர மட்டத்துக்கு மேல் பல்லாயிரம் அடி உயரம் இருப்பினும் இப்போது அது உன்னால் வெல்லப்பட்டிருக்கிறது. இத்தனை

காள் நீ பட்ட சிரமத்தின் பலனைக இவ்வளவு தூரம் நீ வெற்றியடைந்துள்ளாய். பாதத்துக்குப் பக்கத்தில் உள்ள நிலத்தைமட்டும் அடியடியாக வென்று கொண்டு போ. இன்னும் சிறிது நேரத்தில் நீ முழுவதும் வெற்றியடைந்து விடுவாய்.' இவ்வாறு மனதை உற்சாகப் படுத்திக்கொண்டு ஏறவேண்டும்.

லிப்புத்தடாகக் கணவாய்ப் பாதையின் உச்சி, கடல் மட்டத்துக்கு மேல் 16,800 அடி உயரம் உள்ளது. உச்சியின் அருகில் வர வர உள்ளத்தில் உற்சாகம் ஊற்றெடுக்கிறது. மேலே போய்ச் சேர்ந்ததும் மனதில் உண்டாகும் எழுச்சி என்றைக்கும் மறக்கவொண்ணாதது. இயற்கையின் இரு அம்சங்கள் இங்குத் தெற்றெனத் தோன்றுகின்றன. ஒரு கணத்தில் உயிரை மாய்த்து விடுவது போன்று இயற்கைத்தாய் ஒரு புறம் பயமுறுத்துகிறாள்; இன்னொரு புறம் தனது வனப்பின் வாயிலாக மனிதனைப் பேரானந்தத்தில் திளைக்கும்படி செய்து விடுகிறாள். சௌந்தர்ய இயல்புடன் காட்சி கொடுக்கும்பொழுது அவள் பார்வதி என்றோ லக்ஷ்மி என்றோ அழைக்கப் படுகிறாள். உக்கிர வடிவுடன் இலங்கும்போது அவளுக்கு மகாகாளி யென்றும் சாமுண்டி யென்றும் பெயர். பராசக்திக்கு இருப்பிடமாகிய ஹிமய மலையில் இந்த இரண்டு அம்சங்களையும் மாறி மாறிக் காணலாம். ஒரு வேளையில் உயிரை வாங்கிவிடுபவள் போல் பயமுறுத்துகிறாள்; இன்னொரு வேளையில் இன்பக் கடலில் நம்மைத் திளைக்கச் செய்கிறாள்.

உறை பனிப் படலமாயுள்ள கணவாய் ஜோதிமயமாயிருக்கிறது. அதில் கண் பூத்துப் போகாதிருத்

தற் பொருட்டுக் கறுப்பு அல்லது பச்சைக்கண்ணாடி யணிதல் வேண்டும். பாதத்துக்குச் சற்றுக் கீழே வெள்ளி மலையில் மூன்றாம் பிறை போன்று வடிவுடைய பச்சை நிறமான நீரையுடைய லிப்புத் தடாகம் தென்படுகிறது. அதினின்று சிற்றோடை போன்று காளிநதி உற்பத்தியாகிக் கீழே வடிகிறது. சமவெளிப் பிரதேசத்தில் சரயு நதி என்று சொல்லப்படுவதும், ஹிமயமலையில் நெடுக உக்கிரம் வாய்ந்திருப்பதுமாகிய இந்நதியின் பிறப்பிடத்தையும் பிள்ளைப் பருவத்தையும் இங்குக் காண்கிறோம்.

இந்தியா, நேப்பாளம், திபேத்து ஆகிய மூன்று பிரதேசங்கள் சந்திக்கு மிடத்தில் இப்போது நின்று கொண்டிருக்கிறோம். இரு மருங்கும் வெள்ளி மலைகள் வானத்தைத் துளைத்துக்கொண்டு நிற்கின்றன. இடையில் நாங்கள் நிற்கின்ற வழி வாயில் போன்றிருக்கின்றது. சகுணப்பிரம்மமென்றும் நிர்க்குணப்பிரம்மமென்றும் நாம் நூல்களில் படித்திருக்கிறோம். அதாவது பரம்பொருள் உருவாயும், அருவாயும், உருவருவாயும் இருக்கிறதென்பது கேள்வி. அக்கூற்று உண்மை என்பதை இங்கு இயற்கைத் தாய் நிரூபித்துக் கொண்டிருக்கிறாள். மலைத் தொடர் அடங்கப் பெற்றுள்ள இந்தியாவின் பக்கம் திரும்பிப் பார்க்கு மிடத்து உருவத்தெய்வம் தாண்டவமாடுகிறது. கண்ணுக்கு எட்டுமளவு அடுக்கடுக்காக, ஒன்றுக்குமேல் ஒன்று ஆகாயத்தை எட்டிப் பிடித்துக்கொண்டு மலைத் தொடர்கள் தென்படுகின்றன. அவைகளின் பால் இலங்கும் நிறங்களையும் வடிவங்களையும் சொல்லில் அடக்குவது சாத்தியமன்று.

இயற்கையை மெய்ப் பொருளின் சாயை என்கின்றனர் சான்றோர். சாயைக்கு இத்தகைய அழகு என்றால், அதன் மூலகாரணமாகிய மெய்ப்பொருளின் அழகை யாரே எடுத்து வர்ணிக்க வல்லவர்! அழகை உண்டு பண்ணுவதில் அன்னை பராசக்தி தனது முழு ஆற்றலையும் இங்கே எடுத்துக் கொட்டி விடுகிறாள் என்பதற்கு மேல் ஒன்றும் இயம்ப முடியாது. சாகார சகுணப் பிரம்மம் அல்லது உருவோடு கூடிய கடவுள் என்று இதைத்தான் சொல்லவேண்டும்.

இனித் திபேத்துப் பக்கம் திரும்பிப் பார்த்தால் இக்காட்சி உருவருவாய்ப் பின்பு அருவாய் மாறிவிடுகிறது. நிராகார நிர்க்குணப் பிரம்மத்துக்குச் சான்று வேறு ஒன்றும் வேண்டியதில்லை. எல்லை காணாத வெட்ட வெளி! அதைப் பார்க்க பார்க்கக் கண் குளிர்கிறது. உள்ளம் வெதும்பி ஆனந்தம் ஊற்றெடுக்கிறது. உருவுடன் திகழும் தெய்வம் பெரிதா, அல்லது அருவாய் இலங்குவது பெரிதா என்று எடுத்தோத நாவு ஒருப்பட மாட்டேனென்கிறது. இரு இயல்பும் இறைவனது மகிமையே என்பது ஒவ்வும். இத்தகைய அதிசயக்காட்சி கொடுத்து உள்ளத்தை எம்பெருமானது சன்னதி கொண்டு சேர்க்கும் லிப்புத் தடாகக் கணவாயை வானவர் நாட்டுக்கு வாயில் என்று சொன்னாலும் போதாது. கயிலைக்கு அடுத்தபடியாயுள்ள வானவர் நாடு என்றே சொல்லவேண்டும்.

இவ்வாறு இயற்கையினூடு இலங்கும் இறைவனது இனிமையைக் கண்டு களித்துவிட்டுப் பெரிய இமயத்தின் வடசாரலில் திபேத்துப் பக்கம் இறங்கு

கிறோம். இப்பொழுது இன்னொரு சிறிய இடுக்கண். படிக்கட்டுப் போன்ற ஒடுங்கிய பனிக்கட்டிப் பாதையில் சுமார் நூறு அடிக்குக் கீழே செங்குத்தாக இறங்கவேண்டும். மனிதனைவிட மூட்டை சுமக்கும் குதிரைகள் இவ்விடத்தில் படும்பாடு மிகக்கொடியது. இதைக் கடந்தவுடனே அவ்வளவு உயரத்திலும் உறை பனியால் ஆகிய சமதரை போன்ற இடம் ஒன்று இருக்கிறது. வெள்ளை வெளேரென்ற அப் பொருளின்மீது படுத்தும், புரண்டும், ஓடியும், ஆடியும் விளையாடும் இயல்பு எல்லார்க்கும் வந்து விடுகிறது. அங்கு வயோதிகர்க்கு வாலிபம் திரும்பி விடுகிறது. தங்களை மறந்து கிழவர்கள் கூத்தாடும் போது இளைஞர்களைப்பற்றி என் சொல்வது! ஆடும்போது சிதாகாசம் போன்று அவ்விடம் ஒளிர்கின்றது. நீட்டிப் படுத்துப் பார்த்தால் மகா விஷ்ணுவின் யோக நித்திரைக்கேற்ற க்ஷீர சமுத்திரம் போன்றும் அதே இடம் காட்சி கொடுக்கிறது. அம்பலக் கூத்தும் அரங்கத்து அரி துயிலும் ஒன்றே என்பதை ஆங்குக் காணலாம்.

இங்ஙனம் பனிக் கட்டியின்மீது பாலகர் போன்று விளையாடிவிட்டு மூன்றுமைல் தூரத்துக்குக் கீழே இறங்குகிறோம். உருகிய பனிக்கட்டியினின்று வரும் சிற்றோடைகளுக் கருகிலேயே போகின்றோம். வான் அளவும் பெரு மலைகள் பின்னுக்கு நின்றுவிட நெடுஞ் சுவர் போன்ற குன்றுகளே யாண்டும் தென்படுகின்றன. மரமின்றிச் செடியின்றிக் கொடியின்றி மலைகள் அழகு படைத்திருக்க முடியும் என்பதை இங்குக் காண்கிறோம்.

## 12

## தக்களக் கோட்டை

கணவாயினின்று 12 மைல் கடந்தபின் தக்களக் கோட்டை எனும் ஊர் வந்து சேருகிறோம். திபேத்தில் நாங்கள் பார்த்த ஊர்களில் பெரியது இது ஒன்று தான். இங்கு ஜங்பன் எனும் அரசியல் அதிகாரி இருக்கிறான். அவன் நம் நாட்டில் உள்ள கலெக்ட ருக்கு ஒப்பாவான். திபேத்தில் அதிகார முழுதும் பௌத்த சன்யாசிகளிடம் இருக்கிறது. அரச னுக்குப் பதிலாக ஒரு பௌத்த சன்யாசியே அந் நாட்டை ஆண்டு வருகிறார். தக்களக் கோட்டை யானது கர்னலி எனும் நதிக்கரையோரம் இருக் கிறது. இது பிரம்மபுத்ரா நதிக்கு உபநதியாகும். பார்ப்பதற்கு இது மிக அழகாயிருக்கிறது. ஆங் காங்கு மலையின் மீது உறைபனியும் தென்படுகிறது. திபேத்தில் மழை பெய்வது கிடையாது. அது சுமார் 14,000 அடி உயரத்தில் இருக்கும் பீடபூமியாதலால் பனிக்கட்டியே மழைக்குப் பதிலாகப் பெய்கின்றது. நதியினின்று கால்வாயின் வாயிலாகத் தண்ணீர் பாய்ச்சித் தக்களக் கோட்டையில் கொஞ்சம் கோதுமை, பட்டாணிக் கடலை முதலியவைகளை வேனிற் காலத்தில் சாகுபடி செய்கின்றனர். திபேத் தில் வேறு எவ்விடத்திலும் கிருஷித் தொழிலை நாங்கள் பார்க்கவில்லை.

வீடுகள் கல்லாலும் மண்ணாலும் கட்டப்பட்டிருக் கின்றன. கூரைக்கு மரம், குச்சி முதலியவைகளைப் போட்டுக் களிமண்ணால் மூடியிருக்கின்றனர். இன் னும் சிலர் மலைச்சாரலில் குகை போன்று குழி

வெட்டி அதனுள் வாசம் செய்கின்றனர். அவ் வீடுகள் அழுக்குக்கும் அசுசிக்கும் பேர் பெற்றவை கள். வீட்டின் அருகில் செல்வது நம்போன்றவர் களுக்கு இயலாது. மக்களிடத்தும் ஒருவித வாடை வீசிக்கொண்டிருக்கிறது. நீராடுவதும் பல் துலக்கு வதும் துணி கசக்குவதும் அந்நாட்டில் செயற்கரிய செய்கைகளாம். திபேத்தியர் பலசாலிகள்; ஆனல், அழகுடையவர் அல்லர். குளிர்காற்றுப் படுவதால் அவர்களுடைய முகமும் கையும் கறுப்பாயிருக்கும். ஆண் மக்கள் முகத்தில் உரோமம் வளர்வதில்லை. உடையிலும் அதிக வித்தியாசம் இல்லை. ஆதலால் அவர்களுள் ஆண்கள் யார், பெண்கள் யார் என்று தெரிந்து கொள்வது கொஞ்சம் கடினம். முகத் தோற்றத்தில் அவர்கள் பெரிதும் முரடர்களாகவே யிருப்பர். கற்றவர்களைக் காண்பது அரிது. தேத் தண்ணீர், பச்சை யிறைச்சி, வறுத்த கோதுமை மாவு ஆகியவைகள் தாம் அவர்களின் முக்கிய உணவு. அவர்கள் வீட்டைச் சுற்றிலும் ஆட்டுக் கொம்புகளும் எலும்புகளும் சிதறுண்டு கிடப்பதைக் காணலாம்.

கவரி என்று அழைக்கப்படும் சடைமாடுகள் தக்களக் கோட்டையில் உண்டு. அவைகளின்மீது சவாரி செய்வதும் சாமான்களை ஏற்றிச் செல்வதும் அத்தேசத்து வழக்கம். அம்மாடுகளின் வால் நுனி யில் உள்ள பெரிய குஞ்சங்களே சாமரமாக உப யோகிக்கப்படுகின்றன. கவரியின் பாலைத் திபேத் தியர் அருந்துகின்றனர். தடித்துள்ள அப்பாலின் மணமும் சுவையும் நம்மவர்க்குப் பிடிக்காது. உட

லுக்கும் அது ஒத்துக் கொள்வதில்லை. அதன் வெண்ணெயைத் தோற்பாண்டத்தில் போட்டு விற்கின்றனர். அதன் நாற்றமோ சகிக்க முடியாதது.

ஒரு நாட்டின் பழக்க வழக்கம் மற்றொரு நாட்டில் அநாகரிகமாகத் தோன்றும். நம் கிராமங்களுக்கு ஆங்கிலர் அல்லது புது மனிதர் யாராவது வந்தால் அவர்களை ஏறிட்டுப் பார்ப்பது நம் கிராம மக்களின் வழக்கம். மேல் நாட்டார் கொள்கைப்படி அது மிகக் கெட்ட வழக்கம். பிறர்க்கு எவ்விதத்திலும் ஊறு விளையாதிருப்பதை நல்லொழுக்கம் எனலாம். இடைஞ்சல் உண்டுபண்ண வேண்டுமெனும் எண்ணமின்றியே சிலர் ஊறு விளைவிக்கின்றனர். அங்ஙனம் திபேத்தியர்களுக்கிடையில் நாங்கள் பெற்ற சில அனுபவங்களை ஈண்டு வெளியிடுவது பொருத்தமா யிருக்கும். வேற்றார் சமைக்கு மிடத்துக்குப் போகலாகாது என்பது திபேத்தியருக்குத் தெரியாது. பச்சை மாமிசத்தைப் புசிக்கும் அம் மக்கள் ஆட்டுப் புழுக்கையில் தீ மூட்டித் தேத்தண்ணீர்ப் பானம் பண்ணுவதைத் தவிர வேறு எவ்வித சமையலையும் அறிந்திலர். மண்ணெண்ணெய் அடுப்பு (stove) சத்தமிட்டுக் கொண்டு எரிவது அவர்களுக்கு ஓர் அதிசயக் காட்சி; பூரி, பட்சணம், குழம்பு முதலியவைகளை நாங்கள் சமைப்பது மற்றோர் அதிசயம். இவைகளைக் காண்பதற்காகக் கூடாரத்தைச் சுற்றிலும் வட்டமிட்டு உட்கார்ந்து கொண்டு கூடாரத் துணியையும் உயரத்தூக்கிப் பிடித்துக்கொள்வார்கள். அவர்களை விரட்டியோட்ட முயன்றால் விவகாரம் வந்துவிடும். ஏனென்றால் அவமானப்படுத்து

வதை அவர்கள் சகியார்கள். எப்பக்கம் திரும்பின லும் திபேத்தியர் தலைகள் நம்மை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கின்றன. ஏறிட்டுப் பார்த்துக் கொண் டிருக்கும் அத்தனை தலைகளுக்கிடையில் சமைக்கும் வேலை எப்படியோ முடிவுறுகிறது. இனிச் சாப்பிட வேண்டும். சென்னையிலிருந்து தையலிலை கொண்டு போயிருந்தோம். அதில் உணவைப் பரிமாறிப் பிசைவது அவர்களுக்கு ஓர் ஆச்சரியம். வாயிற் போட்டு மென்று விழுங்குவதும் ஆச்சரியம்! ஐம்பது கண்கள் இங்ஙனம் பார்வையிட்டுக் கொண்டிருக்கும் போது புசிப்பது எங்ஙனம்? எச்சில் இலையை வெளியே எடுத்து எறிந்தவுடனே அவர்கள் அதை எடுத்து நக்கியும் பிய்த்தும் பார்த்தனர். தங்கள் மொழியில் ஏதோ பேசிக் கொண்டு சிரித்தனர். அவர்கள் முன்னிலையில் நாங்கள் பைத்தியக்காரர் ஆனோம்! இன்னும் நாங்கள் நதியில் நீராடுவது, துணி துவைப்பது, பல் துலக்குவது, கை கால் அலம்புவது ஆகிய அனைத்தும் அவர்களுக்கு ஆச்சரியமாகவே விளங்கின. நடையுடை பாவனை யில் எங்களைப்போன்ற நூதனப் பிராணிகளை அவர் கள் முன்பு பார்த்ததில்லை போலும்! அவர்களோடு சண்டையிட்டுக் கொள்ளாதும் அவர்களைப் பொருட் படுத்தாதும் எங்கள் சொந்த அலுவல்களையே கவனிப்பது எங்களுக்கு ஓர் அலாதியான ஆத்ம சாதனமாயிருந்தது.

தக்களக் கோட்டையில் ஒரு மலையின் உச்சியில் பௌத்த மடாலயம் இருக்கிறது. ஐந்து மைலுக்கு அப்பாலிருந்தே அது தென்படுகிறது. அம்மலை

பார்ப்பதற்கு அதிக உயரமாயில்லையெனினும் அதில் ஏற ஏற அது வளர்ந்து கொண்டே போகிறது. புத்தர் கோயில் தரிசனத்தின் பொருட்டும், பெரியார் களைச் சந்தித்தற் பொருட்டும் நாங்கள் அம் மடாலய துக்குச் சென்றோம். மடத்தின் அலுவல்களைக் கவனிப்பவர்கள் எங்களை அன்புடனும் மரியாதை யுடனும் வரவேற்றனர். பௌத்த சன்யாசியை லாமா என்று அழைப்பது அத்தேசத்து வழக்கம். வழிகாட்டி எங்களைக் காசி லாமாக்கள் என்று அறி முகப்படுத்துகிறான். இந்தியாவினின்று போகும் சந்நியாசிகளைக் காசி லாமாக்கள் என்று அவர்கள் அழைக்கின்றனர். இந்தியாவுக்கும் இந்து மதத்துக் கும் பிரதிநிதியாயிருக்கும் ஊர் காசி என்று அவர் கள் எண்ணுகின்றனர். மடாலயம் முழுதும் எங் களுக்குச் சுற்றிக் காட்டப்படுகிறது. பார்க்கப் பார்க்கக் கட்டடம் பெருகிக் கொண்டே போகிறது. மரம் வளராத அவ்வூரில் அவ்வளவு பெரிய மரங்களை உபயோகித்து அவர்கள் மடாலயம் கட்டியிருப்பதி னின்று அவர்கள் சமுதாயத்தில் அது எவ்வளவு முக்கியஸ்தானம் வகிக்கிறதென்பது புலனாகின்றது. நாட்டின் முன்னேற்றத்துக்கு ஏதுவான அலுவல் களெல்லாம் அங்குக் கவனிக்கப்படுகின்றன. ஜாங் பன் எனும் அரசியல் அதிகாரியின் வீடு மடாலயத் துடன் ஒட்டியிருக்கிறது. மடத்தில் உள்ள லாமாக் களின் அனுமதியின் பேரில் அவன் அரசாங்கக் காரியங்களை நிர்வகிக்கின்றான். மக்களும் மடத்தின் உதவியைக் கொண்டே தங்கள் சொந்த அலுவல் களைக் கவனிக்கின்றனர். கெட்ட வழியில் செல் லாது கட்டுப்படுத்துவதும் நல்வழியில் செல்லத்

தூண்டுவதும் மடத்தின் செயல். அதற்கேற்பத் திபேத்திய மக்களும் பௌத்த சந்நியாசிகளிடத்தில் வைத்துள்ள பயபக்தி போற்றத் தக்கது. கல்வி கற்கும் சிறுவர்களெல்லாம் மடத்தில் தங்கியிருந்து கற்று வருகின்றனர். தக்களக்கோட்டை மடத்தில் 250 பிள்ளைகள் படிப்பதாக எங்களுக்குச் சொல்லப் பட்டது. கொஞ்ச தூரத்துக்கு அப்பால் இது போன்ற மற்றொரு நிலையம் பெண்களுக்கென்று இருக்கிறதாம். முற்காலத்தில் இந்தியாவில் ஏற் பட்ட மடங்களும் சமுதாயத் தொண்டின் பொருட்டே இருந்திருக்கவேண்டும்.

மடத்தினுள் வெண்ணெயின் வாடைதான் சகிக்க முடியாததாயிருக்கிறது. மக்களும் அதை உடலில் பூசுக் கொள்கின்றனர். குளிர் காற்றின் கொடுமையினின்று உடலைக் காத்தற்கு அது பெரி தும் பயன்படுகிறது. நாங்கள் சன்னிதிக்குப்போகும் போது பிற்பகல் ஆராதனை நடைபெற்றுக் கொண் டிருந்தது. அது இந்தியாவின் பழங்காலத்து மகிமை யையே எங்களுக்கு ஞாபகமூட்டிற்று. பொன் போன்று மின்னுகிற உலோகத்தில் செய்த புத்தர் பெருமானின் பெரிய திருவுருவம் ஒன்று இருக் கிறது. அதன் எதிரே அணியணியாய் லாமாக்கள் அமர்ந்திருக்கின்றனர். மேள தாளம் நாகசுரம் முதலி யன வாசிக்கப்படுகின்றன. பின்பு எல்லோரும் சேர்ந்து பிரார்த்தனை செய்கின்றனர். ஒருவர் பின் ஒருவராக புத்தர் முன்னிலையில் வணங்குகின்றனர். இக்காட்சி மனதைக் கவர்கின்றது. அவர்கள் வழி பாடு முடிந்ததும் நாங்கள் உள்ளே சிலையின் அருகிற் சென்று வணங்க அனுமதிக்கப்படுகிறோம். தியான

மூர்த்தியாகிய புத்தரின் சிறு சிலைகள் கணக்கற்றவைகள் அணியணியாய் உள்ளே வைக்கப்பட்டிருக்கின்றன. பிறகு மடாதிபதியின் முன்னிலைக்கு நாங்கள் அழைத்துச் செல்லப்படுகிறோம். அவர் எங்களை ஆசீர்வதித்துப் பிரசாதம் வழங்குகின்றார். எங்கள் கயிலை யாத்திரை இனிது முற்றுப்பெற வேண்டுமென்று அவர் ஆசி கூறுகிறார்.

பாலி எழுத்தில் பௌத்த சாஸ்திரங்கள் அங்கு ஏராளமாக வைக்கப்பட்டிருக்கின்றன. சுவரில் சித்திரங்கள் ஏராளமாக வரையப்பட்டிருக்கின்றன. சாதனவகைகள், சுவர்க்கம், நரகம், புத்தரது ஜீவியம் ஆகிய இத்தனையும் சித்திரத்தில் அடக்கப்பட்டிருக்கின்றன. அவைகளை ஆராய்தற்கே பலநாள் வேண்டும். பூஜா பாத்திரங்களெல்லாம் இந்தியாவினின்று கொண்டுபோகப்பட்டவைகளாம். "ஓம் மணிபத்மே ஹூம்" என்பது அவர்கள் சதா உச்சரித்துக்கொண்டிருக்கும் மந்திரம். அதை உச்சரிப்பதோடு தர்மச் சக்கரம் என்னும் ஒன்றைச் சுழற்றுகின்றனர். அது தாமிரத்தால் செய்யப்பட்டது. நமது ஜபமாலைக்குப் பதிலாக அவர்கள் கையிலிருப்பது தர்மச் சக்கரம். தக்களக் கோட்டை மடாலயத்தில் குதிர்போன்ற வடிவுடைய ஒரு பெரிய தர்மச் சக்கரம் இருக்கிறது. அதனுள் ஓர் ஆள் புகுந்து கொண்டு அதை ஓயாது சுற்றிக் கொண்டிருக்கிறான். சுற்றுக்கொரு தடவை அது மணியடிக்கிறது. 'ஓம் மணிபத்மே ஹூம்' எனும் மந்திரமும் அத்துடன் உச்சரிக்கப்படுகிறது. ஆள் மாறி மாறி அதனுள் புகுந்துகொண்டு அதை ஓயாது சுற்றிக்கொண்டிருக்

கிறார்களாம். இந்தியாவின் மீதும் இந்திய மக்கள் மீதும் திபேத்தியர் பேரபிமானம் கொண்டிருப்பதற்குக் காரணம் இந்தியாவினின்று அங்கு எடுத்துச் செல்லப்பட்ட பௌத்த மதமேயாம். புத்த மதத்தின் உயர்ந்த அம்சங்களெல்லாம் ஹிந்து மதத்தைச் சார்ந்தவைகள் என்பதை நாம் அறிய வேண்டும். மதப்பிரசாரத்தை நல்ல முறையில் செய்வதே இந்தியா உலகுக்கு அளிக்கும் நன்கொடையாகும் என்பதற்குத் திபேத்தே இன்றைக்குச் சான்றாக விளங்குகின்றது.

### திபேத்தில் பிரயாணம்

இதுபரியந்தம் ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்கு உள்ள தூரம், வழியில் தென்படும் அதிசயங்கள் முதலியன சொல்லப்பட்டன. ஆனால் தக்களக் கோட்டையிலிருந்து கயிலையை நோக்கித் திபேத்தில் உட்பிரதேசத்தில் செல்லுவது கடலில் போவதற்கு ஒப்பாகும். சமுத்திரத்தில் இத்தனை நாள் பயணம் போகவேண்டும் என்கிறோம். அதே பேச்சு திபேத்துக்கும் பொருந்தும். தக்களக் கோட்டையிலிருந்து வடமேற்குத் திசையில் ஐந்து நாட்கள் பிரயாணம் செய்து தீர்த்தாபுரி எனும் ஸ்தலத்துக்கு வந்தோம். அங்கிருந்து கீழ்த்திசையில் மூன்று நாட்கள் நடந்து கயிலாயகிரியின் அடிவாரம் வந்தோம். காலை ஒன்பது மணி முதல் மாலை நான்கு மணி பரியந்தம் நடப்பது வழக்கம். வழியில் ஆங்காங்குக் கொஞ்சம் ஓய்வு பெற்றுக் கொள்வதும் உண்டு. நாள் ஒன்றுக்குப் பதினைந்து மைலுக்குக் குறையாமல் நடந்தோம் என்று யூகிக்க

லாம். சில இடங்களில் கண்ணுக்கெட்டுமளவு ஒரே மைதானம். அதைக் கடல் என்றே சொல்லவேண்டும். வேனிற்காலமாதலால் ஆங்காங்குக் கொஞ்சம் புல்லாம் பூச்சி தென்படுகிறது. வேறு சில இடங்களில் ஒன்று அல்லது இரண்டடி உயரமுள்ள குத்துச் செடிகள் இருக்கின்றன. தழை மட்டும் கொஞ்சம் அகலமாயிருந்தால் அவை தேயிலைத் தோட்டமோ எனும் சந்தேகம் வந்துவிடும். பச்சையாயிருக்கும்போதே தீப்பிடித்தெரியும் ஒரு புதுமை இச்செடிகளுக்குண்டு. இச்செடிகளுக்கிடையில் முயல்கள் ஏராளமாய்த் தென்படுகின்றன. சில இடங்களில் காட்டுக் குதிரைகளும் திரிகின்றன. கெண்டைக்காலையுங்கூட மறைக்கமுடியாத இச்செடிகள் இருக்குமிடத்தைத் திபேத்தியர் வனம் என்கின்றனர்! ஹிமயமலையின் தென் சாரலில் நாங்கள்கண்ட வனத்துடன் இதை எப்படி ஒப்பிடுவதென்று எங்களுக்கு விளங்கவில்லை.

மைதானத்தில் விதவிதமான வர்ணமுடைய மணல், கூழாங்கற்கள், நெடுஞ்சுவர் போன்ற குன்றுகள், கரடுகள், காடுகள் அவைகளின் மீது உறைபனி, ஆகியவைகள் பார்க்க மிக அழகாயிருக்கின்றன. சில இடங்களில் சிவப்புக்கல்,பச்சைக்கல் முதலியவைகள் மலைமலையாய்க் குவிந்து கிடக்கின்றன. அவைகளின் நிறம், எடை முதலியவைகளினின்று அவை தாமிரம், நாகம் முதலிய உலோகங்களின் தாதுப் பொருளாயிருக்குமென்று யூகிக்க இடமுண்டு. அங்கு மழை பெய்வதில்லை. இலேசாகப் பனிக்கட்டி மட்டும் சில வேலைகளில் வீழ்கின்றது. குளிர்

காலத்தில் எல்லாம் பனிக்கட்டி மயமாயிருக்குமாம்; ஆக மழையில்லாது, மரம், செடி, கொடியில்லாது ஒரு தேசம் எழில் படைத்திருக்கக் கூடும் என்பதற்குத் திபேத்தே அத்தாட்சியாகின்றது. பிற்பகலில் அங்குக் குளிர்காற்று அடிக்க ஆரம்பித்து விடுகிறது. அதன் வேகம் உடலில் எலும்பைத் தாண்டி அதனுள் உறையும் ஊன்சத்தைப் போய்த் தாக்குகிறது. காற்றுப்படும் அங்கங்களாகிய முகம் கை முதலியவைகள் தீயில் சுட்டவை போன்று கறுத்துத் தீய்ந்துபோய் விடுகின்றன. முகத்துக்கு எண்ணெய் தடவிப் பாதுகாத்தபோதிலும், தோல் ஒரு படலம் உரிந்து வந்துவிடுகிறது. உஷ்ண மானி சில இடங்களில் இரவில் இருபது பாகத்துக்கு வந்தது. அதாவது நீர் உறையும் பாகத்துக்குக் கீழ் பன்னிரண்டு பாகம் போய்விடுகிறது. கைவசம் உள்ள கம்பள உடைகளையெல்லாம் உடலில் அணிந்துகொண்டும் சுற்றிக்கொண்டும் மூட்டை கட்டியது போன்று சுருண்டு கிடக்கவேண்டும். மூன்றரை முழம் உயரமுள்ள ஆள் ஒன்றரை முழத்துக்குக் குறுகி விடுகிறான். ஆள் படுத்துறங்குகிறான் என்பதற்குப் பதிலாகக் கம்பள மூட்டை கிடக்கிறது என்றே சொல்லலாம்! கூடாரமும் சில வேளைகளில் காற்றால் வீழ்ந்துவிடும். இத்தனை வேதனைகளுக் கிடையில் இரவைக் கழிப்பதுதான் மிகக் கடினம்.

பசி நாளுக்குநாள் குறைந்துகொண்டு வரும். ஜீரணசக்தி இங்ஙனத் தளர்ந்து விடுகிறது. ஆகாரத்தைப் பார்த்தாலோ அருவருப்பாய் இருக்கும். கயிலாய பூமி தவத்துக்கும் யோகத்துக்கும் உரியதென்

றும், போகத்துக்கு உரியதன்று என்றும் சொல்லப் படுகிறது. பசி குறைதற்குக் காரணம் ஒருவேளை இதுவாயிருக்கலாம். ஒருவன் விரும்பியபடி ஒன் றைச் சாதிக்க முடியாதென்றால் அவனுடைய பருப்பு வேகாதென்பார்கள். திபேத்தில் வாஸ்தவமாகவே யாருடைய பருப்பும் வேகாது; இது நாங்கள் நேரே கண்ட அனுபவம். இச்செய்தியைக் கேள்வியுற்ற நாங்கள் எங்கள் பருப்பைக் கர்பியாங்கிலேயே மூட்டை கட்டி வைத்துவிட்டு மாதிரிக்கு மட்டும் கொஞ்சம் கொண்டுபோயிருந்தோம். ஆனால் அதை எவ்வளவு நேரந்தான் அவித்தபோதிலும் அது வேவதே கிடையாது. அரிசியைப்பற்றி அனுபவம் மற்றொரு விதமானது. உலையில் இருக்கும்பொழுது சாதகமாகத் தென்படுகிறது. அடுப்பினின்று கீழே இறக்கி வைத்ததும் அது ஊறிய அரிசி போன்று உரு மாறி விடுகிறது. ஆக அரிசியும், பருப்பும் திபேத்தில் உதவா. பூரி, சப்பாத்தி முதலிய கோதுமை யுணவே சிறந்தது. வாசகர் யாராவது கயிலைக்குப் போவார்களானால் அவர்கள் அவல் முத லிய ஏற்கெனவே ஒரு தடவை அவித்துள்ள பொருள் களைக் கொண்டுபோய்ப் பரீக்ஷை செய்து பார்ப்பார் களாக.

## வழிகாட்டியின் அரும்பணி

கிச்சா கம்பா எனும் பெயருடைய வழிகாட்டி யொருவன் கர்பியாங்கில் நியமிக்கப்பட்டான் என்று முன்னமே சொல்லப்பட்டது. அவனுக்கு நாங்கள் கூலியாகக் கொடுத்தது ரூபாய் இருபத்தைந்து மட் டும். பிறகு வெகுமதியாக ரூபாய் பத்தும் கொஞ்சம்

கம்பள உடைகளும் கொடுக்கப்பட்டன. ஆனால் அவன் ஆற்றிய தொண்டுக்குக் கைம்மாருக அவனுக்கு எதைக் கொடுத்தாலும் போதாது. சில பேருடைய சேவை உலகில் எதனேடும் சீர்தூக்க முடியாத அவ்வளவு மேன்மை வாய்ந்ததாகின்றது. தெய்வத் தன்மை சிறிதாவது அமையப் பெற்றவர்க்கே அது இயலும்.

குதிரைகளைக் கவனித்துக்கொள்ளும் கூலியாட்கள் முரடர்கள். காரணமின்றி அவர்களுள் சண்டை வந்துவிடும். சில வேளைகளில் நமக்கும் அவர்களால் பேருபத்திரவம் ஏற்படும். அத்தகைய நெருக்கடிகளில் வழிகாட்டியானவன் முன்னணியில் வந்து நிற்பான். விலங்குகளைப்போன்ற அம்மனிதர்களை அடக்கியாள அவனுக்கே இயலும். ஒடுங்கிய பாதையில் நெடுந் தூரத்துக்குக் குதிரைகளும் ஆட்களும் ஒருவர் பின் ஒருவராகப் போய்க்கொண்டிருப்பார்கள். ஆதியோடந்தமாக அவர்கள் எல்லோரையும் வழிகாட்டி கவனித்துக்கொண்டே போவான். ஓரிடத்தில் குதிரையினின்று ஏதாவது சாமான் தவறிக் கீழே விழும் தருவாயில் இருந்தால் அக்கணத்தில் வழிகாட்டியை அங்குக் காணலாம். யாருக்காவது வழியில் ஏதேனும் துன்பமேற்படுமிடத்து அங்கு அவன் ஆயத்தமாக அத்துன்பத்தைத் துடைக்க வந்து காத்துக்கொண்டிருப்பான். வழி நெடுக ஓடைகள் ஏராளமாயிருக்கின்றன. தண்மையில் பனிக்கட்டிக்கு இந்நதிகள் பின் வாங்கியவைகளல்ல; அத்துடன் அவைகளின் வேகத்தைக் கண்கொண்டு பார்க்கமுடியாது. நம்போன்றவர்

களுக்கு அவைகளைக் கடப்பது எளிதன்று. இங்கு வழிகாட்டி என்ன செய்கின்றான்? ஒவ்வொருவராகத் தூக்கிக்கொண்டுபோய் அக்கரையில் வைக்கிறான். சிலவேளைகளில் ஒரேமூச்சில் இரண்டு அல்லது மூன்று பேரை அப்பால் கொண்டுபோய் விடுகிறான். அதற்கிடையில் வேடிக்கை விநோதங்கள் பல செய்து விடுகிறான். அவனுக்கு விளையாடுவது போன்றிருக்கிறது தன் கடமையைச் செய்வது.

உறை பனியின்மீது ஒடுங்கிய பாதையிருந்தால் முதலில் அவன் ஒரு தடவை அதன்மீது நடந்து அதன் வலிவைச் சோதிக்கிறான். பிறகு அபாயமான எல்லையில் நின்றுகொண்டு ஒவ்வொருவராக அப்பால் அனுப்புகின்றான். அந்த ஆபத்தான விடத்தில் நடக்க அஞ்சுபவர்களைத் தூக்கித் தோளில் வைத்துக்கொண்டு போகிறான். நல்ல விடத்தில் மூட்டைகளை இறக்கிவைப்பதுபோன்று மானுடச் சுமைகளை வைத்துவிட்டுத் திருப்ப ஓடி வந்து பழைய இடத்தில் நின்றுகொள்ளுகிறான். உறைபனி மாரியாக எப்பொழுது எவ்விடத்தில் பெய்யுமென்று அவன் வானத்தைப் பார்த்துக் கண்டுபிடித்து விடுவான். இராத் தங்குதற்குக் கூடாரமடிக்கும் இடங்களை அதற்கேற்றவாறே நியமிப்பான்.

இவையெல்லாம் விடப் பெரிய ஆபத்து ஒன்று உண்டு. தக்களக் கோட்டையை விட்டுப் புறப்பட்டதும் பெரிய ஊர் ஒன்றும் எங்கும் கிடையாது. ஒரு கூடாரம் அல்லது இரண்டு கூடாரங்கள் அடங்கிய ஓரிடத்துக்கு ஒரு கிராமம் என்று பெயர். ஒரு

நாளெல்லாம் நடந்தால் வழியில் இரண்டு மூன்று பேர்களுக்குமேல் சந்திக்கமுடியாது. அவர்களுள் சிலர் கொள்ளைக்காரர்கள். பகலில் பிச்சைக்காரர் போன்று வந்து உளவு அறிந்துகொண்டு போவார் கள். இரவில் ஆள் திரட்டிக்கொண்டு வந்து நம்மை விரட்டியும், அடித்தும், கொலை செய்தும், நம் பொரு ளையும் குதிரைகளையும் கொண்டுபோய் விடுவார்கள். யாசகர் போன்று வருபவர்களுள் திருடர் யார் என் றும் அவர்களுக்குப் பேர்பெற்ற இடங்கள் எவை என் றும் வழிகாட்டிக்குத் தெரியும். அத்தகைய இடங் களில் அவன் இரவெல்லாம் உறங்கமாட்டான். இரண்டு மணி நேரத்துக்கு ஒரு தடவை துப்பாக்கி யில் வேட்டு எழுப்புவான்; பாரா காத்துக்கொண் டிருப்பான். நம் உயிரே அவன் கைவசம் இருக்கிற தென்று சொல்லவேண்டும். ஏனென்றால் திருடர் களுக்கு அவன் நம்மைக் காட்டிக் கொடுத்துவிட் டால் நமக்கு அதோகதிதான். ஆனால் அவன் ஆற்றிய அரும் பணி ஸ்ரீ ராமபிரானுக்குக் குகன் செய்த திருத்தொண்டை எங்களுக்கு ஞாபக மூட்டிற்று.

### மக்களின் வகை

வாழ்க்கை முறை சாதாரணமாக நடந்துகொண் டிருக்கும்போது மாந்தரது இயல்புகளை வகைப் படுத்த முடியாது. மேல் தோற்றத்துக்கு எல்லா ருடைய பான்மையும் ஒரேவிதமாகக் காணப்படும். ஆனால் தகுந்த நெருக்கடியில் சோதனைக்கு உட் படும்போதே மறைந்து கிடக்கும் அவரவர் சுபாவங் களெல்லாம் உள்ளபடி காட்சி கொடுக்கும். அத்

தகைய சோதனைகளுள் கயிலாயகிரி யாத்திரைக்கு ஒப்பிட்டு வேறு எதையும் சொல்ல முடியாது. தொடர்ந்து இரண்டு மாதங்களுக்குக் கஷ்டத்தின் மேல் கஷ்டம் வருகிறது. வசதிகள் மிக மிகக் குறைவு. நாளுக்கு நாள் தேக வலிவு குறைந்து கொண்டே போகிறது. பிணிகள் பல அப்போதைக் கப்போது தோன்ற ஆரம்பிக்கின்றன. சில நிலைமைகளில் உயிர் தரித்திருப்பதே அறிது. இத்தனை வித சோதனைகளுக்கிடையில் ஒருவர்க்கொருவர் உதவிபுரிந்துகொள்ள வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. மனிதனது மனபரிபாகமும் தியாகபுத்தியும் இந்த யாத்திரையிலேயே உள்ளபடி வெளித்தோன்றும். தன்னுயிரில் பற்றுடையார் என்றும், தன்னுயிரையும் மன்னுயிரையும் ஒரே பான்மையுடன் பாராட்டுபவர் என்றும் மக்களை இரு தரத்தாராகக் கப் பிரிப்பது இங்கு எளிதில் இயலும்.

கஷ்டங்களுக்கிடையிலும் குதுகலமாக யாத்திரை செய்த சிலரைப்பற்றி ஈண்டு இயம்புவது பொருந்தும். அல்மோராவினின்று மூன்று மாணக்கர் வந்திருந்தனர். அவர்கள் பிறந்தது வளர்ந்தது எல்லாம் ஹிமயமலையிலேயே. கல்லூரி மூடுதற்குக் கால தாமதமானபடியால் அவர்கள் எங்களை விட ஆறு நாள் பிந்திப் புறப்பட்டு நாள் ஒன்றுக்கு முப்பது மைல் வீதம் நடந்து கேலாவில் எங்களுடன் வந்து சேர்ந்தனர். நாள்தோறும் காலையிலும் மாலையிலும் பகவத்கீதை பாராயணம் பண்ணுவது, தங்கள் உணவைத் தாங்களே சமைத்துக் கொள்வது, பிறருக்குத் தொண்டு புரிவது, ஆகிய இவைகள்

அவர்களுடைய செயல்களாயின. எல்லாரிடத்திலும் மரியாதையாய் நடந்துகொள்வதுடன் சமயோசிதம் போல் வேடிக்கை விநோதம் செய்து உற்சாகமூட்டு வதில் இம் மாணாக்கர்கள் முதன்மை வகித்தனர். மாணாக்கர்கள் இப்படியல்லவோ இருக்கவேண்டு மென்ற எண்ணம் பலர்க்கு உண்டாயிற்று. இவர் கள் திபேத்தில் ஓரிடத்தில் கூட்டத்தைவிட்டுப் பிரிந்து குறுக்கு வழியில் போக முயன்றபோது திடீ ரென்று மூன்று நாய்களால் தாக்கப்பட்டனர். அந் நாய்கள் கரடி போன்றிருக்கும். இரண்டொரு மாதங் களுக்கு முன்பு தன்னந்தனியாய்ச் சென்ற சாது ஒருவர் திபேத்திய நாய்களால் பட்ட பாடு இவர்கள் செவிக்கும் எட்டியிருந்தது. "தம்மால் இயலாத காரியத்துக்கு அவர் கயிலாய நாதனது துணையை வேண்டினார். ஆனால் நாமே செய்து முடிக்கக் கூடி யதற்குக் கடவுளைக் கூப்பிடுவானேன்?" என்று சொல்லிக்கொண்டு அம்மாணாக்கர் நாய்களுடன் போராட ஆரம்பித்தனர். நாயைக் கண்ட விடத்தில் கல் இல்லையென்றும், கல்லைக் காணுமிடத்து நாய் இல்லையென்றும் சொல்லுவார்கள். தத்வார்த்த மாக இதைப்பொருள் படுத்துமிடத்து, கல்லில் நாய் போன்று செதுக்கப்பட்டிருந்த வடிவத்தை ஒருவன் மெய்யான நாய் என்று மதிமயக்கம் கொண்டான். அப்பொழுது அவன் காட்சியில் கல் இல்லாது போய்விட்டது. பிறகு அது கல்லில் அமைந்தது என்று அவன் தெளிந்தவுடனே நாய் மறைந்தது. உலக நடை முறையில் நாயைக் கண்டதும் அதை அடிக்க இளைஞர் கல்லைத்தேடுவர். அவசரத்தில்

அது அகப்படாது. கல்லைத் தேடி யெடுப்பதற்குள் நாய் ஓடி விடும். இவ்விளைஞர்களுக்கோ கல்லும் நாயும் சேர்ந்து அகப்பட்டன; முதலில் பயந்து ஓடுவது போல் பாசாங்கு செய்வர். துரத்திக் கொண்டு அக்கொடிய விலங்குகள் அருகில் வந்ததும் கற்களை எடுத்துப் பீரங்கிக் குண்டு போன்று பொழிவர். நம் தேசத்து நாய்களாயிருந்தால் சிறிது நேரத்தில் மாய்ந்துபோம். ஆனால் இவைகள் அரை மணி நேரம் போராடிக் கல்லடிபட்ட பின்பே களைத்துப் போய் பின்வாங்கின. மாணாக்கர்களும் வீரர் போன்று ஆபத்தினின்று மீண்டுவந்து சேர்ந்தனர். இம்மாணாக்கர் யாத்திரையை விதிப்படி செய்ததுமன்றி அதை ஒரு விளையாட்டுப் போன்றும் எளிதில் செய்து முடித்தனர்.

நேப்பால் சாது என்று ஒருவர் வந்திருந்தார். கொஞ்சம் கம்பள உடைகளை தவிர அவர் கையில் சாமான் ஒன்றும் கிடையாது. யாருக்கும் அவர் தொந்தரவு கொடுக்கமாட்டார். கூட்டத்தோடு சேர்ந்து நடப்பார். பிறகு தனியாக ஓரிடத்தில் உட்கார்ந்து கொள்வார். வரட்டி, ஆட்டுப் புழுக்கை சுள்ளி முதலியவைகள் அகப்பட்ட விடத்தில் தீமூட்டி அதனருகில் உட்கார்ந்துகொண்டு தியானம் பண்ணுவார். வலிய யாராவது ஆகாரம் கொடுத்தால் ஏற்றுக்கொள்வார். இங்ஙனம் அவர் தமது யாத்திரையை இனிது முடித்தார்.

ரிஷீகேச பிரம்மச்சாரி என்பவர் மற்றொருவர். மாறுபடும் நிலைமைகளுக்கிடையிலும் தமது நித்தியச் சடங்குகளை ஒழுங்காகச் செய்தல், தியானம், ஜபம்

முதலியவைகளில் கண்ணுங் கருத்துமா யிருத்தல், எப்போதும் சாந்த மனத்துடன் இருத்தல் ஆகிய பெருமைகள் அவர் பால் தென்பட்டன.

கூலியாட்கள் உட்பட யாத்திரை வாசிகள் எல்லோரும் கூடி இன்னொருவருக்குப் "புடோ" என்ற செல்வப் பெயர் வைத்துவிட்டனர். கிழவர் என்பது அதன் பொருள். அவர் சரீர அமைப்பில் கிழவரா யிருந்தபோதிலும் மன அமைப்பில் யாண்டும் வாலிபர். அவரோடு உறவாடுவதிலும் விளையாடுவதிலும் எல்லோருக்கும் விருப்பம். நடப்பதால் உண்டாகும் ஆயாசத்தைப் போக்குதற்கு அவருடைய உறவு அருமருந்தாயிருந்தது. எல்லார்க்கும் உற்சாகமூட்டுவது அல்லது பஞ்சாட்சர ஜபம் செய்வது ஆகிய இவ்விரண்டுமே அவருடைய ஓயாத அலுவல்கள். இவருக்கு ஓரிடத்தில் கடுஞ் ஜுரம் ஏற்பட்டது. நோயுறுவது கயிலாய யாத்திரைக்குப் பேரிடைஞ்சலாகும். இவருடைய காய்ச்சலை முன்னிட்டுச் சிலர் வழியில் ஒருநாள் பிற்படவேண்டியதாயிற்று. ஆனால் அடுத்தநாள் இவர் இருபத்தைந்து மைல் ஏற்றம் இறக்கங்களில் நடந்து பயணத்துக்கு இடைஞ்சல் வராது தடுத்தது பேராச்சரியமேயாம்.

சரணாகதி

ஜீவர்கள் ஈசுவரனிடத்தில் சரணாகதி யடைவதே சாதனங்களின் முடிவான நிலையாகின்றது. சாஸ்திரங்களும் அதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளன. கயிலாயகிரி யாத்திரையில் சில சந்தர்ப்பங்களில் இறைவனிடத்து அடைக்கலம்

புகுதல் இயல்பாக வந்துவிடும். திபேத்தில் நதிகளைத் தாண்டுதல் அத்தகைய சந்தர்ப்பங்களில் ஒன்று. ஓடைகளையும் சிற்றாறுகளையும் கடக்கும்போது வழி காட்டியானவன் நம்மைத் தூக்கிக் கொண்டு போய் அக்கரை சேர்த்து விடுகிறான். பெருநதிகளைத் தாண்டுதற்கு மனிதனால் இயலாது. பெருநதிகளில் முக்கியமானது சிந்து நதி. இதைக் கடந்து தீர்த்தா புரி எனும் ஸ்தலத்துக்குப் போகிறோம். இந்நதி கற்களை யெல்லாம் உருட்டிக்கொண்டு போகிறது. இதற்குப் பாலங் கிடையாது. குதிரையின்மீது அக் கரை போய்ச் சேரவேண்டும். கடவுள் வழிபாட்டில் நம்பிக்கையில்லாதவர்களது கொள்கையின் வலியை அறிதற்கு இதுவே தகுந்த இடமாகும். வழிகாட்டி நம்மைக் குதிரையின்மீது உட்காரவைத்து அதை விரட்டி யோட்டுகிறான். அது வேகமாகப் புரண் டோடும் நீரில் கால் வைக்க நடுங்குகிறது. ஆனால் அடியைப் பொறுக்கமுடியாது அது உள்ளே போகி றது. நதியில் அது படும்பாட்டை என்னென்பது? குதிரையினின்று மனிதன் விழுந்தால் அதோகதி. குதிரையே வழுக்கி வீழ்ந்தால் இருவரும் அதோகதி. "இறைவ! நான் உயிர் தரித்திருப்பது என் முயற்சி யால் மட்டுமன்று. ஆட்டுவிக்கின்றவனாகிய உன் அருளாலன்றி ஒன்றும் ஆகாது" எனும் எண்ணம் இயல்பாகவே வந்துவிடுகிறது.

### தீர்த்தாபுரி

கயிலாய பூமியில் இருக்கும் தீர்த்தங்களுள் தீர்த் தாபுரி ஒன்று. மானச சரோவரத்தில் உற்பத்தி

யாகி வரும் சிந்து நதியைக் கடந்து இங்கு வருகி ரேம். ஓர் அழகிய பௌத்த மடாலயத்தைத் தவிர வேறு வீடுவாசல் ஒன்றும் இங்குக் கிடையாது. அவ் வாலயத்தில் புத்தர் பெம்மானை வழிபட்டுவிட்டு, இந் தியாவினின்று சென்று அம்மடாலயத்தில் வசித்து வரும் ஓர் சந்நியாசியுடன் சிறிது நேரம் பேசினேம். அவர் நன்ருக ஆங்கிலம் பேசுகிருர். திபெத்துக் குள் வந்தபிறகு நாங்கள் சந்தித்தவர்களுள் ஆங்கி லம் பேசத் தெரிந்தவர் இவரே முதலானவர். பேரறிவாளி. உலக நடை முறையைப் பற்றிய ஞானம் அவரிடத்து நிறைந்திருக்கிறது. இன்னியல் புடனும் உவகையுடனும் பேசுகிருர். ஒரு வருஷத் துக்கு முன்பு கயிலாய பூமிக்குள் வந்ததாகவும் இன் னும் ஒரு வருஷம் அங்குத் தங்கியிருக்க உத்தேசித் திருப்பதாகவும் அவர் தெரிவித்தார். தோற்றம், உடை, உணவு முதலியவைகளில் அவர் திபேத்திய ரைப்போல் ஆய்விட்டார். அதைத் தவிர அவருக்கு அங்கு வேறு கதியொன்றுமில்லை.

இச் சன்னியாசியை உடன் அழைத்துக் கொண்டு மடாலயத்தில் அருகாமையில் இருக்கும் ஒரு வெந்நீர் ஊற்றுக்குப் போனேம்: இந்த ஸ்தலத் தில் இவ்வூற்று மிக முக்கியமானது. பூமியினின்று கொதித்துக்கொண்டு ஜலம் மேலே வருகிறது. அந்த இடத்தில் கைவைத்தால் காந்திப்போம். பிறகு இது ஒரு சிறு ஓடையாக ஓடிச் சிந்து நதியில் கலக்கின் றது. ஓடையில் ஆங்காங்குக் குழியெடுத்து வைத் திருக்கின்றனர். நாம் தாங்கக்கூடிய அளவு வெப்ப முள்ள இடத்தில் இறங்கி நீராடலாம். அத்தகைய

குளிரான இடத்தில் அவ்வெந்நீர் அகப்படுவது இறை வன் அருள் என்றே சொல்லவேண்டும்! உடலில் உள்ள இரத்தக் கட்டையும், வலியையும், ஆயாசத் தையும் அது உடனே நீக்கிவிடுகிறது.

இதற்குப் பக்கத்தில் ஓமகுண்டம் ஒன்று இருக் கிறது. பத்மாசுரன் அல்லது பஸ்மாசுரன் என்ப வன் முன்பு ஒரு கால் அங்குச் சிவனை நோக்கித் தவம் புரிந்தான். இறைவனும் அவனுக்குக் காட்சி கொடுத்து என்ன வரம் வேண்டுமென்று கேட்டார். தான் யார்மீது கைவைக்கிறானோ அவன் பஸ்மமாக வேண்டுமென்ற வரத்தை அவ்வசுரன் வேண்டினான். வேண்டுவோர் வேண்டுவதை வகுத்தளிக்கவல்ல வள் ளலும் விரும்பிய வரத்தை வழங்கிவிட்டார். பின்பு வரம் கிடைத்தது மெய்தானா என்று சோதித்துப் பார்க்க விரும்பிய அசுரன் சிவபெருமான்மீதே கை வைக்க எத்தனித்தான்! பொய்யா மொழிப் பெம் மான் ஆபத்தினின்றும் தப்பித்துக்கொள்ள ஓட்டம் பிடித்தார். ஆனால் அசுரன் விட்டவனல்லன். இந்த நெருக்கடியில் மகாவிஷ்ணு ஒரு மோகினி வடி வெடுத்து இடையில் நுழைந்தார். அவளைப்பார்த்து மயங்கிய அரசன் தன்னை மணம் செய்து கொள்ள வேண்டுமென்று கேட்டான். நீராடினாலன்றித் தன் பக்கத்தில் வரலாகாதென்றாள் அப்பெண். அசுரன் எங்கே தேடியும் நீர் கிடையாத நிலைமை உண்டு பண்ணப்பட்டது. அதை அவன் பரிந்து மோகினி யிடம் தெரிவித்தான். "அதோ" அங்குக் காணும் சொற்ப ஜலத்தையாவது எடுத்துத் தலையை நனைத் துக்கொண்டு வா" என்றாள் அவள். காமநோய்

பெருகுமிடத்து விவேகம் அழிந்துவிடுமன்றே! தான் பெற்ற வரத்தை மறந்த அரக்கன் அகப்பட்ட ஒரு கைத் தண்ணீரை எடுத்துத் தலையில் வைத்தான். அக்கணமே அவன் பஸ்மமானன். மனப்பரிபாகம் இல்லாதவர் பெறும் வரத்துக்கு அதுதான் கதி. அவன் சாம்பலான விடத்தில் முனிவர் பலர் யாகம் செய்தனர். தங்கள் ஆசாபாசங்களெல்லாம் அவ்வசுரனைப் போன்று வெந்துபோகவேண்டும் என்பதே அந்த யாகத்தின் நோக்கம்.

நாங்கள் இந்த இடத்தில் உட்கார்ந்து நிஷ்டை புரிந்தோம். வந்தனை வழிபாடு ஸ்தோத்திரம் முதலியன நடைபெற்றன. அங்குக் குவியலாகக் கிடக்கும் சாம்பலைக் கயிலாய விபூதிப் பிரசாதமாக எடுத்துக் கொண்டு கிழக்குமுகமாகப் புறப்பட்டோம்.

### கயிலையின் தரிசனம்

ஒரு மலைச் சாரலில் சிறிது சிறிதாக ஏறி மேலே போகின்றோம். உச்சி சுமார் அரை மைல் தூரத்தில் இருப்பதாகத் தோன்றுகிறது. ஆனல் ஏற ஏற அந்த அரை மைல் வளர்ந்துகொண்டே போகிறது. திபேத்தில் இது எங்களுக்குக் கிடைத்த ஒரு நூதன அனுபவம். அண்மையில் இருப்பதாகக் கட்புலனவது உண்மையில் நெடுந்தூரத்துக்கப்பால் இருக்கிறது. புலன்கள் நமக்குப்பொருளை உள்ளபடி விளக்குவதில்லை என்பதைத் தெளிவாக இத்தேசத்தில் தெரிந்து கொண்டோம். சுமார் மூன்று மைல் தூரம் நடந்து மலையின் உச்சிக்கு வருகிறோம். அப்போது வழிகாட்டி எல்லார்க்கும் முன்னே செல்கின்

ருன். அவன் வல்லமை மிக வாய்ந்தவன். சமயோசிதம்போல் நடந்துகொள்ள அவனுக்குத் தெரியும். வேறு ஒன்றும் பேசாது, "அதோ பாருங்கள்!" என்கிருன்.

நாற்பது மைலுக்கப்பால் மற்ற மலைகளுக்கெல்லாம் மேலே ஒன்று வானத்தை அளாவிக்கொண்டு ஒளிர்கின்றது. அதைப் பார்த்ததும் உடலெங்கும் மயிர்க்கூச்சுண்டாகிறது. கயிலாயம் என்பது அதுதான் என்ற உணர்வு தானே வந்து விடுகிறது. அரசன் ஒருவன் தன்னை இன்னுனென்று யாருக்கும் அறிமுகப்படுத்திக் கொள்வதில்லை. ஆயினும் அவனை வேந்தனென்று குடிகள் தாமே தெரிந்துகொள்ளுகின்றனர். வேந்தர்க்கெல்லாம் வேந்தனுகிய கடவுளின் நிலை அதைவிடப் பெரியது. தலைவனைக் கண்டதும் உயிர்கள் அவன் வசப்பட்டுவிடுகின்றன. தலைவனது உறைவிடமாகிய கயிலைக்கு அத்தகைய ஆற்றல் உண்டு. எங்கள் கூட்டத்தின் தொகை நாற்பதுக்கு மேற்பட்டது. ஆனல் ஒருவராவது சந்தேகம் தெளிதற்கு மற்றவரிடம் கேள்வியொன்றும் கேட்கவில்லை. கயிலையைக் கண்டது தான் தாமதம்; திக்கை நோக்கித் தெண்டனிடுகிறது ஒரு கூட்டம். "நாதா!" என்ற வார்த்தையோடு ஒரு கூட்டத்துக்கு நாக்குளறி விடுகிறது. ஒன்றும் பேச முடியாது இன்னெரு கூட்டம் ஸ்தம்பித்து நிற்கிறது. இடையிடையே எழும் "ஜெய் கயிலாயபதிக்கு ஜெய்!" எனும் கோஷம் இப்போது அவனைக் கண்டதும் அடங்கிவிடுகிறது. இத்தனை நாள் அல்லும் பகலும் படாத பாடுபட்டு

உணவைப் பொருட்படுத்தாது, வசதியைப் பொருட்படுத்தாது, மரணத்தையும் பொருட்படுத்தாது எதைக் காணுதற் பொருட்டு ஒரே கருத்துடன் யாத்திரை செய்யப்பட்டதோ அது இப்போது கண்கூடாகக் காட்சி கொடுக்கிறது. இறைவனிடம் லயமானாற் போல் எல்லாரும் நெடு நேரம் ஆங்கு அமர்ந்து விடுகின்றனர்.

"ஜெய் கைலாஸபதிக்கு ஜெய்" என்று ஓலமிட்டு வழிகாட்டி சாந்தியைக் கலைக்கிறான். ஒருவர் பின் ஒருவராக எழுந்து நடக்கின்றனர். இனிச் சுமார் பத்துநாளைக்கு இரவும் பகலும் கயிலையின் தரிசனம் கிடைத்த வண்ணமாயிருக்கிறது. மலையைக் கண்ட பின்பு அடிவாரம் வந்து சேருதற்கு மூன்று நாள் பிடிக்கிறது.

### கயிலையின் அமைப்பு

மனிதனல் கட்டப்பட்ட கோயில் ஒன்றும் ஆங்கில்லை. ஆனல் கோயில்களுக்கெல்லாம் மாதிரியாக அது இயற்கையாகவே அமைந்திருக்கிறது. தென்முகமாக அது இந்தியாவைப் பார்த்துக் கொண்டிருக்கிறது. நான்கு பக்கமும் சமகோணமாய் அமைந்திருக்கும் அதன் சுற்றளவு இருபத்தொன்பது மைல். பிராகாரம் போன்ற மலைச் சுவர் செங்குத்தாக நிற்கின்றது. சில பாகங்களில் அது வெறும் சுவராகவும் வேறு சில இடங்களில் சித்திரங்களும் உருவங்களும் அமைக்கப் பெற்றது போலும் காணப்படுகிறது. மூடப்பட்ட வாயில் போன்றவைகளும் ஆங்காங்குத் தென்படுகின்றன. பிரா

காரத்தின்மீது ஒரு பெரிய மேடை. சுவர் ஐந்நூறு அடி முதல் ஆயிரம் அடி வரையில் ஒரே செங்குத்தாயிருப்பதால் மேடைக்கு யாரும் போக முடியாது. அந்த மேடையின்மீது நூற்றுக்கணக்கான சிறு மலைகள் கோபுரங்கள் போன்று அமைந்திருக்கின்றன. அவைகளுள் சித்திர வேலைப்பாடுடையவை, சாதாரணமாயிருப்பவை, சதுரமாயிருப்பவை, வட்டமாயிருப்பவை, முட்டை போன்றிருப்பவை, முக்கோணமுடையவை, தூண் போன்றிருப்பவை, ஒடுங்கிய நுனியை யுடையவை, இன்னும் பலவிதமான வடிவங்களை யுடையவைகள் பல இருக்கின்றன. அவைகளின் நிறங்களும் பலவகைப்படும். இந்தியாவில் தென் முனையிலிருந்து இமயம் பரியந்தம் எத்தனை விதமான கோபுரங்கள் உளவோ அத்தனைக்கும் மாதிரிகள் கயிலையில் உள. இன்னும் புதியதாக ஏதாவது கட்டவேண்டுமானாலும் அதற்கும் மாதிரி அங்கே கிடைக்கும். கர்ப்பக்கிரகம் கோயிலில் உள்ளே எட்டியிருப்பது போன்று கயிலாய சிகரம் பீடத்தின் வடபாகத்தில் இருக்கிறது. மற்ற கோபுரங்களுக்கெல்லாம் மேலே இது ஆகாயத்தை எட்டிப் பிடித்துக்கொண்டு, சமுத்திர மட்டத்துக்குமேல் 22,980 அடி உயரத்தில் இருக்கிறது. இதற்கு விசுவலிங்கம் என்று பெயர். இதன் பக்கத்தில் செல்ல யாருக்கும் இயலாது. சுற்றி வலம் வருவது ஒன்றே யாத்ரிகர்களால் செய்யக்கூடியது.

இறைவனுடைய இடது பாகம் பேர்பாதி அம்பாளுக்கு அளிக்கப் பட்டதாக ஐதிகம். கயிலையில் இத்தத்துவம் இயல்பாக அமைந்திருக்கிறது.

தக்ஷிண மூர்த்தமாக எழுந்தருளியிருக்கும் விராட் லிங்கத்தின் இடது பக்கம் அல்லது கீழ்த்திசையில் கௌரியின் சன்னதியும் கௌரிகுளமும் இருக்கின்றன. இக்குளத்தின் உயரம் சமுத்திர மட்டத்துக்குமேல் 18,600 அடி. இது சதாகாலமும் உறை பனியால் மூடப்பட்டிருக்கிறது. ராஜ ராஜேஸ்வரியின் அந்தப்புரத்தில் ஓர் அழகிய நீர் நிலை கட்டுவிக்கப்பட்டது போன்றும், மற்றவர் கண்ணுக்கும் தென்படாது பல கூடங்களினின்று அம்பிகையும் அம்பிகையின் தாதிமார்களும் வந்து தீர்த்தமாடிவிட்டுப் போதற்கான துறைகளும் வாயில்களும் தெய்வாதீனமாக உட்புறத்தில் அமைந்திருப்பன போலவும் இக்குளம் காட்சி கொடுக்கிறது. இங்கிருந்து இரண்டு ஓடைகள் உற்பத்தியாகிக் கயிலையின் இரு மருங்கிலும் ஓடிப் பிறகு ராக்ஷஸ தடாகத்தில் சங்கமமாகின்றன.

அண்ட நாயகனது அரண்மனை போன்றது கயிலை. இருபத்தொன்பது மைல் சுற்றளவுடைய அதற்கு அகழி, பிரகாரம், கோட்டை, கொத்தளம், கோபுரம், கூடம், மாடம், கொலுமண்டபம், அந்தப்புரம் ஆகிய மாட்சி யனைத்தும் ஒருங்கே அமைந்திருக்கின்றன. தென்புறம் தவிர மற்ற மூன்று பக்கங்களிலும் அணியணியாக மலைகள் இருக்கின்றன. ஆனால் அவைகள் வெறும் மலைபோன்று தென்படுவதில்லை. விசுவேசுவரன் வீற்றிருக்கும் கொலுமண்டபத்துக்கு அருகாமையில் அவனுடைய கணங்கள் சிப்பந்திகள் முதலானோர் வசிப்பதற்கான வாசஸ்தானங்களாக அவைகள் விளங்குகின்றன. மந்திரி பிரதானியர் முதல் வெறும் ஏவலா

ளர்வரை பல படித்தரங்களில் இருக்கும் லட்சக் கணக்கான பேர்களுக்கு என்னென்னவித மாளிகைகள், உப்பரிகைகள், சாமானியமான வீடுகள் தேவையோ அவையாவும் ஆங்கிருக்கின்றன. தேவலோகத்துக்கேற்ற ஓர் ஒப்பற்ற நகரம் போன்று அவைகள் காட்சி கொடுக்கின்றன.

கயிலையின் தென்புறத்தில் கண்ணுக் கெட்டுமளவும் ஒரே சமவெளி. அதில் நாற்பது மைலுக் கப்பால் மானச சரோவரம் இருக்கிறது. சரோவரம் என்ருல் தடாகம். அதன் பெயருக்கு ஏற்ப அது வாஸ்தவத்தில் பூலோகத்தில் உள்ள ஒரு தடாகமோ அல்லது மனோகற்பிதத்தால் அது ஒரு தடாகமாகத் தோன்றுகிறதோ எனும் சந்தேகம் வந்துவிடும். கயிலை, கௌரிகுளம் ஆகிய இந்த இரண்டைப்போன்ற மானச சரோவரத்தின் பெருமையைப் படத்தின் மூலம் தெரிந்துகொள்ள முடியாது. படம் உயிரில்லா நிழல்போன்றிருக்கிறது. ஆனல் கயிலை சம்பந்தமான யாவையும் உயிர் ஓவியம் என்று இயம்பவேண்டும். உயிர்க்கு உயிரா இருப்பது சிவம். அத்தகைய பேருயிர் நீரிலும், நிலத்திலும், மலையிலும் திரண்டு திகழ்ந்து கொண்டிருக்குமிடம் கயிலை. ஓவியம் போன்று அழகுவாய்ந்த அவ்வுலகம் உயிர்தரித்து இலங்குகின்றது. அதைக் காணுமிடத்து, உயிர்க்குயிராயிருக்கும் பொருளை நாம் உள்ளபடி உணர்கிரேம்.

மானச சரோவரத்தின் சுற்றளவு ஐம்பத்தாறு மைல், அது கிட்டத்தட்டச் சம சதுரமாயிருக்கிறது. கடல் போன்று தோற்றமுடையது. கடல் நீல நிற

மாயிருப்பது போன்று இது பச்சை நிறமாயிருக்கிறது. அது உப்புக்கடல். இது நன்னீர்க்கடல். இதன் ஆழம் இருநூற்றைம்பது அடிவரையில் போகிறது என்கின்றனர். ஐம்பது அடிக்குக் கீழ் உள்ள கற்கள் தெளிவாகத் தெரிகின்றன. காலை வேளைகளில் இத்தடாகம் அமைதியுற்றிருக்கிறது. மாலையில் திரைகடல் போன்று அலைவீசுகின்றது. இது சமுத்திர மட்டத்துக்கு மேல் 14,950 அடியில் இருப்பினும் இதன் நீர் மிகத் தட்பமானதன்று. அதற்குக் காரணம் வெந்நீர் ஊற்றுக்கள் பல அதனுள் இருக்கக் கூடும் என்று ஊகிக்கின்றனர். தடாகத்துக்கு வெளியே வடமேற்கு மூலையில் ஓர் வெந்நீர் ஊற்று இருக்கிறது. அது தீர்த்தாபுரி ஊற்றைப் போன்று அவ்வளவு பெரிதன்று; எனினும் அதிலும் நீராடலாம். நெடுஞ்சுவர் போன்ற காடுகள் இதன் கரையோரம் ஆங்காங்கிருக்கின்றன. அவைகளின் உச்சியில் வெண்மை நிறமான பனிக்கட்டி. கீழே வரவரப் பலவிதமான வருணம் தீட்டிய கற்கள். நாற்புறத்திலும் இருக்கும் மணல் மேடுகளும் எண்ணிறந்த நிறங்களை யுடையனவா யிருக்கின்றன. வான வில்லில் வர்ணம் அடுக்கடுக்காக இருப்பது போன்று இங்கு மணலில் விதவிதமான வர்ணங்கள் மறையாது நிலைத்திருக்கின்றன. ரத்தினக் குவியல்களென்று இவைகளைத்தான் கவிகள் வர்ணித்தார்கள் போலும். இத்தனைவித நிறங்களும் தாறுமாறாகக் கலந்து கிடந்தால் அவைகள் அழகற்றுப் போம். ஆனால் விசுவகர்மா அறிவுடையவன்; இன்ன வர்ணத்திற்குப் பிறகு இன்ன வர்ணம் வந்து அமைந்

தால்தான் அது சோபிக்கும் என்பதை அவன் கற்றுணர்ந்தவன்போலும். வர்ண அமைப்பைப் பற்றிய கலை ஞானத்தைக் கற்றுக்கொள்வதற்குக் கயிலாய பூமியில் எத்தனை வருஷகாலம் தங்கினாலும் போதாது. அத்தனைவித வர்ணங்களுக்கெல்லாம் கீழே தடாகத்தினுள் நீர் ஒரு பசுமையான காட்சியளிக்கிறது.

வடகோடியில் தென்முகமாக வீற்றிருக்கும் கயிலை, நாற்பது மைலுக்கு இப்பால் மனோ கற்பிதத்துக்கும் எட்டாத அழகுவாய்ந்த தடாகம், இரண்டுக்கும் இடையில் இருக்கும் சமவெளியிலும் தடாகக் கரையிலும் இழைத்திருக்கும்—நவரத்தினங்களன்று—நவகோடி ரத்தினங்களின் பொலிவு ஆகிய இவை யாவையும் ஊனக் கண்ணால் பார்க்கும்போது சந்தேகம் ஒன்று வந்துவிடுகிறது. நாம் விழித்திருந்து இவைகளைக் காண்கிறோமா? அல்லது சொப்பனத்தில் இந்த அதிசயத்தைக் காண்கிறோமா? இது பூலோகமா, அல்லது பூலோக கைலாஸமா? அல்லது வேறு ஏதேனும் உலகுக்கு நாம் கூட்டோடு கொண்டு போகப்பட்டோமா?—என்பதுதான் அச்சந்தேகம்.

## 13

### கயிலாய பூமி தவத்துக்குரியது

தவத்தின் உட்பொருள் கயிலையில் நன்கு விளக்கப் படுகிறது. உலோகத்தை உலையிலிட்டு உருக்கி விரும்பியவாறு அதற்குப் புதிய உருவம் கொடுக்கலாம். மனது உருகும் தன்மையதாகும்போது அது தவ நிலையில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. தவத்

தின் வாயிலாக மனது மாறுகிறது. புதிய வல்லமை யும் அதற்கு உண்டாகிறது. தவத்தால் நன்மை தீமையாகிய எதை வேண்டுமானாலும் பெறலாம். நன்மையை நாடுபவரை சுரர் அல்லது தேவர் என்றும், தீமையை நாடுபவரை அசுரர் என்றும், அழைப்பது வழக்கம். தேவர், அசுரர் ஆகிய இரு தன்மையரும் கயிலையில் ஆங்காங்குத் தவம் புரிந்தனர். அத்தகைய இடங்கள் இன்றைக்கும் காட்டப்படுகின்றன.

அரக்கரில் கீர்த்திபெற்றவன் ராவணன். அவனைப் பற்றிய ஐதிகம் கயிலையில் ஏராளமாயுண்டு. திபேத்தியர் அவனைப்பற்றி விசேஷமாகச் சொல்லுகின்றனர். ராக்ஷச தடாகக் கரையில் அவன் நெடுங்காலம் தவம் புரிந்தான். ராக்ஷச தடாகம் மானச சரோவரத்துக்கு மேற்புறத்தில் இருக்கிறது. வண்ணத்திலும் அது மானச சரோவரத்துக்குக் கிட்டதட்ட ஒப்பானது. அசுரர்களெல்லாம் ராக்ஷச தடாகக் கரையிலும், தேவர்களும் முனிவர்களும் மானச சரோவரக் கரையிலும் தவம் புரிந்தனர். தவமிழைத்து ராவணன் பெரும் பலம் பெற்றான். பின்பு, கயிலையைப் பெயர்த்தெடுத்துத் தன் தேசத்துக்குக் கொண்டுபோக முயன்றான். அப்போது அவன் தன் கையிலிருந்த கழியைக் கயிலையின் பீடத்தில் நாட்டினான். இன்றைக்கும் ஸ்தம்பம் போன்று ஒரு கல் அங்கு நின்று கொண்டிருக்கிறது. அதை ராவணன் தடியென்கின்றனர் திபேத்தியர். விசுவ லிங்கத்தைச் சுற்றி அவன் கயிறு வீசிக் கட்டியதன் அடையாளம் தென்படுகிறது. கயிலையை அவன் அசைக்க, அதனால்

அம்மை கெளரி அஞ்ச, இறைவன் பெரு விரலால் அவனை அழுத்த அவனும் பாதாளத்தில் வீழ்ந்து பதைத்து அழ, பின்பு அவன் சாம கானம் பாட, அதைக்கேட்டு மகிழ்ந்த இறைவன் அவனுக்கு விமோசனம் கொடுக்க, அவன் தென்னிலங்கைக்கு ஓடினன் எனும் வரலாறு திபேத்தில் வழங்குகிறது. தாம் பெறும் தபோ பலத்தையெல்லாம் அசுரர் துஷ்பிரயோகப்படுத்துவதே கயிலையில் நாம் காணும் காட்சியாகும்.

கயிலையில் முனிவர்களும் பலர் ஆங்காங்குத் தவம் புரிந்ததைப்பற்றிய ஐதிகம் உண்டு. அப்படிச் செய்தவர்களுள் முக்கியமானவர் மாந்தாதா என்பவர். மானச சரோவரத்துக்குத் தென்புறத்தில் அவர் வசித்திருந்த மலை அவர் பெயரால் அழைக்கப் படுகிறது. அதன் உச்சியில் ஒரு பெரிய குகை யுண்டு. நாங்கள் அங்குச் செல்ல வில்லை. கணேசரும் கார்த்திகேயர் அல்லது முருகக் கடவுளும் அக்குகையில் பிறந்ததாகச் சொல்லப்படுகிறது. ஞான வடிவெடுத்திருப்பவர் கணேசர். அவ்வாறே வீரத்தின் வடிவாய் இலங்குபவர் சுப்பிரமண்யர். சிவனை நோக்கித் தவம் புரிபவர்க்கு ஞானமும், வீரமும் கிடைப்பது வெளிப்படை. ஆதலால், அவ்விரண்டு தெய்வத் தன்மைகளையும் இறைவனுடைய புதல்வர்களாக உருவகப்படுத்துதல் முறை.

வலி படைத்தவர் எனினும் அரக்கர் உள்ளத்தில் எத்தனைவிதக் கோணல்களையும் கரடுமுரடுகளையும் நாம் ஊகிக்க முடியுமோ அவை யாவையும் கண் கூடாக ராக்ஷச தடாகத்தில் காணலாம். மற்று,

தெய்வத்தன்மை யனைத்துக்கும் இருப்பிடம் மானச சரோவரம். இரண்டும் அணித்தாக அமைந்திருப்ப தால் தெய்வத் தன்மையையும் அசுரத் தன்மையை யும் சீர்தூக்குதல் மிக எளிதாகின்றது. உமாதேவி பச்சை வர்ணம் உடையவளாகப் பல இடங்களில் வர்ணிக்கப்படுகின்றாள். இக்கொள்கை ஒரு வேளை மானச சரோவரத்தில் உற்பத்தியா யிருக்கலாம், சூரிய சந்திரர் போன்று வடகரையில் கயிலையும் தென்கரையில் மாந்தாதா மலையும் மிளிர்கின்றன. அவை யிரண்டுக்கு மிடையே பிரம்மாண்டமான மர கதம் போன்றது மானச சரோவரம். அதை யிரண்டு வயிரங்களுக் கிடையே இழைத்த பச்சை மணி யெனினும் ஒவ்வும். அருள் அனைத்துக்கும் பிறப்பிடம் அன்னை பரா சக்தி எனும் உண்மையை இத்தடாகம் ஓயாது புகட்டிக் கொண்டிருக்கிறது. உலகுக்கு அமுதூட்டும் புண்ணிய நதிகளாகிய பிரம்ம புத்ரா அதன் கீழ்க்கரையிலும், சிந்து நதி மேலைக் கரையிலும் உற்பத்தியாகின்றன. பச்சை நிற முடையதாகத் தென்படினும், தெளிநீர் என்று அதைத்தான் சொல்லவேண்டும். மூன்று நாட்கள் அதன் கரையோரம் நாங்கள் வசித்திருந்தோம். மாலை வேளைகளில் மும்முரமாகக் காற்று வீசுகி றது; தடாகமும் கடல்போன்று அலையெறிகிறது. சில வேளைகளில் கூடாரம் தளர்ந்து கீழே தள்ளப் படுகிறது. ஆனால் காலையில் அதன் காட்சி வேறு வகையானது. சித்திரம் வரைந்தது போன்று எல் லாம் ஒரே அமைதி. சூரியோதயத்தில் மானச சரோவரம் மனதுக்குச் சாந்தி யளிக்கிறது. அதில்

நீராடியதும் மனது அடியோடு புதுப்பிக்கப்படுகிறது. பின்பு நிஷ்டை புரிவதில் பரமானந்தம். ஒரு விதக் கோரையும் பச்சைத் தாமரைபோன்ற அதன் பூவும் தடாகத்தை அலங்கரிக்கின்றன. அன்னம் போன்ற ஒருவிதப் பறவைகள் அணிஅணியாய் நீரில் சஞ்சரித்து விளையாடுகின்றன. மெல்லிய பூங்காற்று, தடாகத்தின் இலேசான சலசலப்பு ஆகிய இவ்விரண்டும் உள்ளத்துக்கு உவகை ஊட்டுகின்றன. அன்னத்தை யொத்த பறவை இடையிடையே அடங்கிய குரலில் ஒரு வித ஒலியை யெழுப்புகிறது. அதன் இனிமையைப் பூலோகத்தில் எதனோடு ஒப்பிடுவது! ஒரு கணத்தில் அது மனதை சாந்தம் எனும் மஞ்சன நீராட்டி மகா தேவன் சன்னிதிக்கு அழைத்துக் கொண்டுபோய் விடுகிறது.

பௌத்தர் கயிலையைப் போற்றும் விதம்

திபேத்தியர் அனைவரும் புத்த மதத்தைச் சேர்ந்தவர் என்பது முன்னமே சொல்லப்பட்டது. ஆனால் அவர்கள் கயிலையைப் போற்றும் விதத்தைப் பார்க்குமிடத்து அது அவர்களுக்குப் புனிதம் வாய்ந்ததா அல்லது ஹிந்துக்களுக்கா எனும் கேள்வி இயல்பாகவே எழும். சதா சிவத்தின் இயல்பு, சிவ சாயுஜ்யம் முதலியவைகளை ஹிந்துக்கள் விளக்குகின்றனர். கயிலைக்கு யாத்திரை போகின்றவர் அதை சுவானுபவமாக உணராதிருக்க முடியாது. பலவந்தமாகத் தண்ணீரினுள் தள்ளப்படுபவனும் ஸ்நானம் செய்தவனுக்கு ஒப்பாகின்றான். அவ்வாறே கயிலையில்

சிவானந்த போகம் வலியக் கிடைக்கிறது. மனிதன் அடையக்கூடிய மனோ வாக்குக்கு எட்டாத மகோன்னத நிலையைப் பௌத்தர்கள் மகா நிர்வாணம் என்கின்றனர். அது உள்ளங்கை நெல்லிக் கனிபோல் கயிலையில் கிடைக்கிறது. பௌத்த முனிவர்களுள் ஐந்நூறு பேர்களுக்குமேல் கயிலாய பூமியில் தவம் புரிந்து அந்நிலையை அடைந்ததாக அவர்கள் சொல்லுகின்றனர். ஹிந்துக்கள் கையாளும் பெயரையும் பௌத்தர் கையாளும் பெயரையும் நீக்கிவிட்டுப் பொதுவாக அங்கு உண்டாகும் அனுபவம் என்ன என்று பார்க்குமிடத்து அது ஜீவகோடிகளனைத்துக்கும் பொதுவானதே என்பது புலப்படும். ஆகப் பெயரளவில் மட்டும் வேற்றுமை; பொருளில் வேற்றுமையில்லை. மேலான நிலை மனிதர் அனைவர்க்கும் பொதுவானதென்றும், முயன்றால் அதைப் பெறலாமென்றும் கயிலாயகிரி மனிதனுக்கு இடித்துப் புகட்டிக் கொண்டிருக்கிறது.

கயிலாயகிரியைச் சுற்றி நான்கு திசையிலும் நான்கு பௌத்த மடாலயங்களிருக்கின்றன. மானச சரோவரத்தைச் சுற்றி ஏழு மடாலயங்களிருக்கின்றன. அவர்கள் முறைக்கு ஏற்ப, நித்திய பூஜை வந்தனை வழிபாடு செய்தற்கே அத்தனை மடாலயங்களை ஆங்காங்கு அமைத்திருக்கின்றனர். பனிக்காலத்தில் வீட்டைவிட்டு வெளியேவர இயலாத நிலைமையிலும் ஆராதனை நடைபெற்றுக் கொண்டிருக்கும். திபேத்திய அரசாங்கமும் அது விஷயத்தில் கருத்து மிக வுடையதா யிருக்கின்றது.

வேனிற் காலத்தைத் திபேத்தியர் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். அக்காலத்தில் பனியுருகி வழி திறக்கப்பட்டதும் அவர்கள் கயிலையைச் சுற்றி வலம்வர ஆரம்பித்துவிடுகின்றனர். இருபத்தொன்பது மைல் சுற்றளவுள்ள அதை சாமானிய பக்தியுடையவர் ஒரு தடவை வலம் வருகின்றனர். பக்தி சிரத்தைக்கு ஏற்ப வலம் வருவதன் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே போகிறது. ஆழ்ந்த அன்புடையோர் தொடர்ந்து இருபத்தொரு தடவை கயிலையைப் பிரதக்ஷிணம் பண்ணுகின்றனர். அத்தனை தடவை வலம் வருவதன் கருத்து யாதென்று நாங்கள் அவர்களிற் சிலரைக் கேட்டோம். "வெகு தூரத்துக்கப்பாலிருந்து ஆபத்து எதற்குமே அஞ்சாது வந்த நீங்கள் ஒரு தடவை வலம் வரும்போது, கயிலைக்கு அருகிலேயே இருக்கின்ற நாங்கள் இருபத்தொரு தடவை வலம் வருவது அரிய காரியமா?" என்று அவர்கள் திருப்பிக் கேட்டனர்.

இதைவிடப் பெரியதும் உள்ளத்தைக் கவர வல்லதுமாகிய காட்சியொன்றைக் கண்டோம். அது தான் அங்கப் பிரதக்ஷிணம் என்பது. அதி காலையில் சூரியன் உதயமாகும்போது அது துவக்கப்படுகிறது. கைதூக்கித் தலை நிமிர்ந்து கயிலையைப் பார்த்துக் கசிந்துருகிய பிரார்த்தனை. அது முடிய மூன்று அல்லது நான்கு நிமிஷம் பிடிக்கிறது. பின்பு சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம். நடுவிரலால் பூமியில் ஒரு கோடு கிழிக்கப்படுகிறது. எழுந்திருந்து கைகூப்பிப் பிரார்த்தனை சொல்லிக்கொண்டு

கோட்டின்மீது பாதம் படியும் வரைக்கும் மெதுவாய் நடத்தல்; மறுபடியும் கைதூக்கித் தலை நிமிர்ந்து கயிலையைப் பார்த்துப் பிரார்த்தனை. அவர்களின் மொழி நமக்கு விளங்கா விடினும் உள்ளக்கசிவோடு நம் உள்ளத்தை வந்து தாக்குகிறது. மெய்யன்பை யும் உருகிய பிரார்த்தனையையும் கண்கூடாகக் காண்கிறோம். பதினயிரம் பிரசங்கங்களைக் கேட் டாலும் பிரார்த்தனையின் உட்பொருளைத் தெரிந்து கொள்ள முடியாது. பக்தன் ஒருவன் பரவசமாகிக் கண்ணீர் மல்கிக் கசிந்துருகிச் செய்யும் வழிபாட் டைக் காணப்பெறும் பேறே பெரும் பேருகும். மாலையில் சூரியன் அஸ்தமிக்கும் பரியந்தம் இங் கனமே அங்கப் பிரதக்ஷிணம் நடைபெறுகிறது. இரவெல்லாம் அதே இடத்தில் வெட்ட வெளியில் காத்திருப்பது; வீசுகின்ற குளிர்காற்றைப் பற் றியோ, பெய்கின்ற உறை பனியைப் பற்றியோ, பூமியில் கிடக்கின்ற கூர்மையான கற்களைப்பற்றி யோ, உறை பனிப் பாறையைப் பற்றியோ கவலை யில்லை. இப்படி இருபத்தொன்பது மைல் தூரத் தையும் பூர்த்தி பண்ண இருபத்தேழு நாட்கள் பிடிக் கின்றன. அதற்கிடையில் யாராவது வலியக் கொண்டு வந்து கொடுத்தால் நாளைக்கு ஒருவேளை மட்டும் போஜனம்; கணப்பொழுதையாவது வீணே கக் கழிப்பதில்லை. இப்படிச் செய்கின்ற அங்கப் பிரதக்ஷிணத்தை ஓர் அலாதியான தபசு என்று சொல்லவேண்டும். இதைச் செய்யவல்ல பெரியார் இக்காலத்திலும் திபேத்தில் இருப்பதுதான் ஆச் சரியங்களுள் பேராச்சரியம்.

## கயிலையை வலம் வருதல்

மானச சரோவரத்திலும் கௌரி குளத்திலும் தீர்த்த மாடுதலும், கயிலாயகிரியைப் பிரதக்ஷிணம் பண்ணுதலும் அதற்கிடையில் ஆங்காங்கிருந்து கொண்டு விசுவலிங்க வடிவெடுத்துவிளங்கும் கயிலாய நாதனை வழுத்தி வணங்குதலும் இந்த யாத்திரையின் முடிவான செயல்களாகின்றன. வலம் வருதல் பட்டணப் பிரவேசத்துக்கு ஒப்பாகின்றது. நாட்டுப் புறத்திலேயே பிறந்து வளர்ந்த ஒருவன் திடீரென்று ஒரு நகரத்தினுள் போகும்பொழுது பல அதிசயங்களைக் கண்டு பிரமித்து நிற்கிறான். ஆனால் நகரத்திலுள்ள அதிசயங்களெல்லாம் மனிதனால் உண்டு பண்ணப்பட்டவை. கயிலையைச் சுற்றி வரும் போது நாட்டுப்புறத்தான், நகரவாசி, பண்டிதன், பாமரன் ஆகிய மனுடர் அனைவரும் திகைத்து நிற்பர். கடவுளின் மகிமை உலகெங்கும் வியாபித்திருக்கிற தெனினும் அது இங்கு உருண்டு திரண்டு உள்ளத்தைக் கொள்ளை கொண்டு போக வல்லதாயிருக்கிறது. இயற்கை முழுதும் இறைவன் மயம் எனும் உணர்ச்சியை இவ்விடத்தில் பெற்றே தீரவேண்டும். சிவபெருமானது சன்னிதி சார்வதால் விளையும் ஒப்பற்ற சாந்தி, தெவிட்டாத ஆனந்தம், உள்ளொளி, அருட்பெருக்கு, சொல்லில் அடங்காத சிற்சுகம் ஆகியவை இங்கே உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உள. உடலினின்று உதிர்கின்ற உரோமம் ஒன்றைப்பொருட்படுத்தாதிருப்பதுபோல, உடலே கயிலையில் உகுந்துவிடினும் அது நமக்கு ஒரு

பொருளன்று. அத்தகைய மேலான மன நிலை அங்கு வந்து வாய்க்கிறது.

ராஜமார்க்கம் போன்ற வழி கயிலையைச் சுற்றிக் கொண்டு போகிறது. இடது பக்கம் ராஜதானிப் பட்டணத்தின் விதவிதமான காட்சிகளைக் காணலாம். முப்பத்து முக்கோடி தேவர்களும் வசிப்பதற்கென்று கட்டப்பட்ட தேவலோகம் என்று அதை அழைத்தாலும் தகும். அவ்வளவு பெரிய பட்டணம் குடிபோன ஊர்போன்று தோன்ற வில்லையா எனும் கேள்வி எழக்கூடும். உயிர்ப் பிராணிகளைக் காண்கிறோமில்லை யெனினும் பட்டணம் போன்று தோன்றும் மலையே ஜீவகளையோடு மிளிர்கிறது. உயிர் அவ்விடத்தில்தான் பெருமிதமாகத் திரண்டிருப்பதுபோல் நம் மனதில் படுகிறது. இயற்கையே நகரம் போன்று அமைந்த இடம் ஏதாவது ஒன்று இருக்கிறதென்றால் அது கயிலையைச் சுற்றிலுமுள்ள மலைகள்தான்.

கயிலாயகிரியைச் சுற்றி வருவதற்கு எங்களுக்கு மூன்று நாள் பிடித்தது. வலது பக்கம் பிரம்மாண்டமான மாளிகை போன்று அது தென்பட்டுக்கொண்டிருக்கிறது. சில விடங்களில் எவ்வளவு உயரம் நிமிர்ந்து பார்த்தாலும் பிராகாரம் மட்டும் காணப்படுகிறது. வேறு சில விடங்களில் கோபுரங்கள் போன்ற கணக்கற்ற மலைச் சிகரங்கள் தெரிகின்றன. குறிப்பிட்ட சில இடங்களிலிருந்து விசுவலிங்கம் தரிசிக்கப்படுகிறது. அப்போதைக்கப்போது ஆங்காங்கிருந்து கற்பூராராதனை, வந்தனை வழிபாடுகள் செய்யப்படுகின்றன.

அவனுடைய நாமத்தை உச்சரித்துக் கொண்டும், பெருமையைப் புகழ்ந்து பாடிக் கொண்டும் வலம் வரப்படுகிறது.

விசுவலிங்கம் விண்ணுலகையும் மண்ணுலகையும் இணைப்பது போன்று ஆகாயத்தை அளாவிக்கொண்டு நிற்கிறது. அது சதாகாலமும் உறைபனியால் மூடப்பட்டுள்ளது. இடையிடையே விண்ணினின்று வந்து குவியும் வெண்முகில், அவனது ஜடாபாரத்தில் தரிக்கப்படும் ஆகாய கங்கை போன்று காட்சி கொடுக்கிறது. அல்லும் பகலும் ஜோதிமயமாய்த் திகழும் அம்மலைச் சிகரம் வேளைக்கொரு வருணமுடையதாக மாறுகிறது. அண்ட நாயகனாகிய மாந்திரிகன் அதற்கு இத்தகைய வல்லமையளித்திருக்கின்றான் போலும். இரவில் மற்றவிடங்களெல்லாம் இருள் சூழ்ந்திருக்கும்போது இது வெள்ளை வெளேரென மிளிர்கின்றது. அதிகாலையில் பால சூரியனுடைய இளங்கதிர் கயிலை மலையின் மீது தோயும்பொழுது அதன் திருக்காட்சியைக் காண்பதற்கு நமது ஊனக்கண்ணுக்கு யோக்யதையில்லை. உருக்கி யெடுத்த தங்கம்போன்று அது தகதகவென்று திகழ்கின்றது. புகைவிடாத அக்னி ஜ்வாலைபோன்று பிரகாசிக்கின்றது. அதைப் பார்ப்பதால் விளையும் பூரிப்பு உள்ளத்தைப் பிளக்கிறது. இத்தகைய காட்சியை முன்னிட்டே கயிலை மலையானைப் 'பொன்னார்மேனிய' னென்றும், 'தீவண்ண' னென்றும் பெரியார் அழைத்தனர் போலும்.

அதிகாலையில் கனகக் குன்றாகக் காணப்படும் மலை, சூரியன் மேலே வந்ததும் வெள்ளி மலையாக

மாறுகிறது; ஆனால், அதை வெள்ளிமலையென்று சொல்லுதற்குப் பதிலாக ஆயிரத்தெட்டுச் சூரியர்களை ஒன்றாகத் குவித்து வைத்த சூரிய ராசியென்று சொல்லுவது பொருந்தும். அவ்வளவு பிரகாசம் அதன்கண் பொலிகிறது. கண் கூசுகிறது எனினும், சுடும் தன்மை அதன்பால் இல்லை. அதைக் காணக்காண உள்ளம் குளிர்ந்து உவகை யெய்துகிறது. மாலையில் செந்தாமரைப் பூக்குவியல் போன்று அது தென்படுகிறது. பார்ப்பவர் உள்ளத்தைப் பறிமுதல் செய்துகொண்டு உலகுக்கோர் அற்புதமாக விசுவலிங்கம் வீற்றிருக்கிறது. அது ஞான வடிவாகிய தன் சுய சொரூபத்தில் சொக்கிக்கொண்டும், பரமானந்தத்தில் திளைத்துக்கொண்டும் ஆத்ம நிஷ்டையில் அமர்ந்திருப்பது போன்றிருக்கிறது. பெருமை வாய்ந்த அதைப் பார்த்துப் பிரமித்து வலம் வருவதே கயிலை மலையானுக்கு நாம் செய்யும் வந்தனை வழிபாடாகும்.

### கௌரி குளத்தில் நீராடுதல்

பெரிய வெற்றி (அல்லது பேரானந்தம்) கிடைப்பதற்குச் சற்று முன்புதான் பெருஞ் சோதனையும் பெரு மயக்கமும் உண்டாகும். கௌரி குளத்தில் ஸ்நானத்துக்குப் போகையில், இக்கூற்று நன்கு நிரூபிக்கப்படுகிறது. மலையை வலம் வரும்போது அக்குளத்தின் வாயிலாகப் போகவேண்டும். அது சமுத்திர மட்டத்துக்கு மேல் 18,600 அடி உயரத்தில் இருக்கிறது. நாங்கள் நடந்து சென்ற பாகங்களில் இதுவே மிக உயரமானது. ஐந்து மைல் தூரத்துக்கு ஒரே ஏற்றம். சுவாசிப்பதற்குக் காற்று

போதாமையால் விளையும் சோதனைகளுள் மிகக் கஷ்டமானது இங்கு உண்டாகிறது. அதிகாலையில் குளிரில் விறைத்துக்கொண்டு பனிக்கட்டியின்மீது நடக்கவேண்டும். இடையிடையே உறைபனி மழையாகப் பெய்கிறது. அது பெருமிதமாய் வீழ்ந்தால் மனிதன் உயிரோடு புதைக்கப்படுவான். கயிலாயபதியின் அருளால் எங்களால் தாங்கக்கூடிய அளவில் அது மலர்போன்று வீழ்கிறது. ஆயினும் சரீரம் மேல் நோக்கிச் செல்ல மறுதலிக்கிறது. அளந்து அளந்து ஒவ்வோர் அடியாகப் பாதை கடக்கப்படுகிறது. சுமைகளிலெல்லாம் பெரிய சுமை உடற்சுமை எனும் உண்மை இப்போதுதான் விளங்குகிறது. மனிதனுக்கு வருகின்ற துன்பங்களெல்லாம் உடலை முன்னிட்டேயாம். ஆயினும் ஓர் உபாயத்தாலேயே அதன் இடர் வெல்லப்படுகிறது. "கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும் நற்றுணையாவது நமச்சிவாயவே" என்றார் அப்பர் சுவாமிகள். வாழ்க்கை எனும் கடலில் உடல் எனும் கல்லோடு நாம் பிணைத்து விடப்பட்டிருக்கிறோம். எந்த நெருக்கடியான நிலையிலும் நமக்கு நல்ல துணையாவது நமச்சிவாய எனும் திருமந்திரம். அதை உச்சரிக்குமளவு உடல் வேதனை மறைந்தோடுகிறது. அவன் அருளாலே அவன் பதி எய்தப்படுகிறது எனும் உண்மையைக் கௌரி குளத்துக்குப் போகின்றவரே உணர்வர்.

வழிகாட்டி கௌரி குளத்தைக் கண்டதும் "ஜெய் கைலாச பதிக்கு ஜெய்" என்று ஓலமிடுகிறான். பின்பு அத்தனை பேரும் அதே முறையில் கோஷிக்

கின்றனர். ஒரு கனத்த கழியால் வழிகாட்டி கௌரி குளத்தின் உறைபனியை அடிக்கிறான். அது கண்ணாடி போன்று படலம் படலமாக உடைந்து சிதறுகிறது. பனிக்கட்டிக்குக்கீழ் ஜலம் இருக்கிறது. சிவபெருமான் அருளால் இது போழ்து காற்றுமில்லை, மப்பு மந்தாரமுமில்லை. வெயிலடிக்கிறது. கௌரி குளத்தில் ஸ்நானம் பண்ணுதற்கு அதுவே தக்கதருணம். உடைகளைக் கழற்றும்படி ஆக்ஞாபிக்கின்றான் வழிகாட்டி. அவனும் மற்றொருவனும் கரையோரம் நின்று கொள்கின்றனர். ஒருவர்பின் ஒருவராகக் குளத்துக்குள் விடுகின்றனர். அவசர அவசரமாக நாலைந்து தடவை முழுகி நீராடவேண்டியது. அதற்குள்ளாக உடல் கட்டை போன்று விறைத்துவிடுகிறது. உடனே இருவரும் தூக்கிக் கரையில் போடுகின்றனர். இன்னும் இருவர் உடலைத் துணியால் தேய்த்து உஷ்ண மூட்டுகின்றனர். சிறிது நேரத்திற்கு பிறகு சரீர உணர்ச்சி வருகிறது. ஆத்மா வேறு உடல் வேறு என்று நாம் இங்கே வெறும் வாய் வேதாந்தம் பேசுகிறோம். ஆனால் கௌரிகுள ஸ்னானம் அதை நமக்குப் பிரத்தியட்சமாய்க் காட்டிவிடுகிறது.

பிறகு அம்மை கௌரிக்கும் அப்பன் கயிலாயபதிக்கும் குளக்கரையில் பூஜை நடக்கிறது. அப்பொழுது உள்ளத்தில் சொல்லமுடியாத உவகை உண்டாகிறது. ஏனென்றால், எல்லாக் கஷ்டங்களையும் தாண்டி யாத்திரையின் முடிவான சடங்கையும் செய்தாய்விட்டது. தியானம், நிஷ்டை, ஸ்தோத்திரம் முதலியவைகளுக்கிடையில் பரமானந்தம்

பெருக்கெடுத் தோடுகின்றது. பேருவகையுடன் அவ் விடத்தைவிட்டு மூவாயிரம் அடி கீழே இறங்கிப்பிரா காரத்தைச் சுற்றிவருகிறோம்.

## 14

### யாத்திரையின் பலன்

மானுட வாழ்க்கையை நீண்டதொரு யாத்திரையென லாம். மெய்ப்பொருளிடத்துத் தோன்றிய மனிதன் திரும்பவும் அங்கு போய்ச் சேரும் பரியந்தம் அவ னுக்கு வழியில் ஓய்வென்பதில்லை. பல பிறவி களின் வாயிலாக இப்பிரயாணத்தை அவன் செய்து கொண்டேயிருக்கிறான். அத்தனை பிறவிகளில் உண்டாகின்ற அனுபவங்களையும் இறுதியாக இறைவனை அணுகும்போது உண்டாகின்ற அனுப வங்களையும் ஒன்றாகத் திரட்டிக் காட்டுவது திருக் கயிலாயகிரி யாத்திரை யெனலாம். வேறு தீர்த்த யாத்திரைகள் பல உலகில் இருக்கின்றன. ஒவ் வொரு சமயக்கோட்பாட்டுக்கும் ஏற்றபடி ஸ்தல யாத்திரைகள் இருக்கின்றன. மெய்ப்பொருளை நாடிச் செல்லுதல் எனும் பெரும் பயணத்தின் சிறு சிறு அம்சங்களை மட்டும் அவைகள் விளக்குகின் றன. ஆனால் இந்த யாத்திரையொன்றே ஜீவர்களின் தோற்றம், இருப்பு, முடிவாக அடையும் நிலை ஆகிய அனைத்தையும் ஒன்று சேர்த்து விளக்குகின் றது. கயிலாயகிரியில் முன்பு பல முனிவர்கள் தபசு பண்ணிய வரலாறுகள் இருக்கின்றன. அவைகளை நாம் நம்பினாலும் நம்பாவிட்டாலும் அந்த இடத்தை நாம் நேரில் பார்த்து அதைப்பற்றிச் சொந்த அபிப் பிராயம் கொள்ளுவது சாலும். உலகில் இயற்கையா

யமைந்துள்ள அதிசயங்களுள் கயிலையை ஒப்பற்ற தெனலாம். பூலோகத்திலுள்ள புண்ணிய க்ஷேத்திரங் களிலெல்லாம் இது தலையாயது எனும் முடிவுக்கு நாம் வந்தே தீரவேண்டும். இறைவனுடைய மகிமை களை ஞாபகமூட்டக்கூடிய இடங்களை யெல்லாம் புண்ணிய ஸ்தலங்களாகக் கண்டெடுத்தனர் முன் னோர். அக்கருத்தை முழுதும் நிறைவேற்றுவது கயிலை.

தேகாரோக்கியத்தை முன்னிட்டு வெளியூர் களுக்குப் பயணம் போவது நல்லதென்று வைத் தியர்கள் சொல்லுகின்றனர். ஆனால், அப்படிப் பயணம் போகின்றவர்கள் சதாகாலமும் உடலைப் பற்றியே எண்ணிக்கொண்டிருக்கின்றனர். இத் தகைய எண்ணம் நோயைப் போக்குதற்குப் பதி லாக அதை அதிகப்படுத்துகிறது. நலமுற்றிருக்கும் கால் விரல் ஒன்றைப்பற்றி நாம் நாளுக்கு ஒரு தடவையாவது எண்ணுவதில்லை. ஆனால், விரல் ஒன்றில் காயம் உண்டாயிருக்கும்போது அதைப் பற்றியே திரும்பத் திரும்ப நினைக்கிறோம். விரலைப் பற்றிய ஞாபகமே விரல் நோய்வாய்ப்பட்டிருக்கிறது என்பதை விளக்குகிறது. உறுப்புகளில் முக்கிய மானது தலை. இது அறிவுக்குப் பிறப்பிடம். ஓயாது அதன் கண் சிந்தித்தல் எனும் வேலை நடை பெறுகிறது. ஆயினும் தலையொன்று இருக்கிறது எனும் எண்ணம் அது சுகமுற்றிருக்கும்போது வருவ தில்லை. தலைக்கு நோய் வரும்போதே அது ஒரு சுமையாகத் தோன்றுகிறது. ஆக, உடலை நாம் மறந்திருக்குமளவு அதற்கு நோயில்லை. உடலின்

ஞாபகம் வருமளவுக்கு நோய் பலப்பட்டிருப்பது நிரூபிக்கப்படுகிறது.

திருக் கயிலாயகிரி யாத்திரை நோயைப்போக்குதற்கும் உடல் ஞாபகத்தை வெல்லுதற்கும் பயன்படுகிறது. போதிய அளவு தேக உழைப்பு இல்லாமையே பலவித நோய்களுக்குக் காரணம். வெயிலில் இமயமலை ஏற்றங்களில் பலநாள் ஏறுவதால் உழைப்பைப்பற்றிய அலுப்பு இல்லாமலேயே உடலுக்குப் பேருழைப்பு உண்டாகிறது. பிழிந்து எடுத்தாற் போன்று ஓயாது வியர்வை வந்துகொண்டேயிருக்கிறது. அதனால் சரீரம் தானே சுத்தி யடைகிறது. பெருமூச்செறிவது பிராணாயாமமாய் முடிகிறது. ரத்தம் தூயதாவதற்கு வியர்வை வடிதலும் ஆழ்ந்து சுவாசிப்பதும் இன்றியமையாதவைகள். இவ்விதம் நாள்தோறும் சரீரம் புதுப்பிக்கப்படுகிறது. பிறகு கடும்பனி மற்றொரு விதத்தில் உடல் நலனை உண்டுபண்ணுகிறது. மட்டுக்கு மிஞ்சிய உஷ்ணத்தால் விளையும் பயன் மட்டுக்கு மிஞ்சிய குளிராலும் விளைகிறது. தீயில் செடி, கொடிகள் கரிவது போன்று உறைபனியிலும் கரிகின்றன. தீயில் மடிகின்ற நச்சுப் பூச்சிபோன்ற சில சிற்றுயிர்கள் உறைபனியிலும் மடிகின்றன. மனிதனோ செயற்கையால் உறைபனியினின்று தன்னைப் பாது காத்துக்கொள்கிறான். ஆனால், அவன் உடலில் இருக்கும் நோய்க் கிருமிகள் தாமே மாண்டுபோகின்றன. அதனாலும் மனிதனுக்கு உடல் நலன் உண்டாகின்றது. ஆக வெப்பத்தாலும் பெருமிதக் குளிராலும் தேகாரோக்கியம் பெறுவது இந்த யாத்திரை

யின் கைகண்ட பலனாகும். மருந்துகளிலெல்லாம் சிறந்தது உடலை மறந்திருப்பது என்பது முன்னமே சொல்லப்பட்டது. பலவிதமான துன்பங்களுக் கிடையில் சிவபெருமானது சிந்தனையிலேயே சித்தம் லயித்திருப்பதால் உடல் மறதி எனும் நன்மையும் சேர்ந்து கிடைக்கின்றது.

ஒரு மொழியில் மட்டும் பயிற்சியடைந்திருப்பவ னுக்குக் குறுகிய நோக்கம் இருப்பது போன்று ஒரு மாகாணத்திலேயே வாசம் பண்ணுபவனுக்கும் குறு கிய நோக்கம் உண்டாகின்றது. பரந்த நோக்கம் வருவதற்கு யாத்திரை பயன்படுவது போன்று வேறு யாதும் பயன்படுவதில்லை. பலவிதமான சமூகங்கள், பலவிதமான பாஷைகள், பலவிதமான பழக்க வழக்கங்கள், பலவிதமான நாகரிகங்கள் ஆகியவைகளைச் சந்திப்பதால் வரும் அனுபவமே தலையாய கல்வியாகும். இந்தியாவின் பூரண மகிமை யைத் தெரிந்துகொள்ளுதற்குக் கயிலாய யாத் திரை பெரிதும் பயன்படுகிறது. முன்பு ஒருகால் ஹிந்து தர்மம் மத்திய ஆசியாவரையில் பரவியிருந்த தாகச் சொல்லப்படுகிறது. இன்றைக்கும் கன்னியா குமரியினின்று கயிலைபரியந்தம் ஒரே லட்சியம் எண்ணிறந்த மக்களது உள்ளத்தில் உறைவதைக் காணலாம். மொழி, இனம், பழக்கவழக்கம் முத லியவைகளில் மாறுபட்டிருப்பினும் உயர்ந்த லட்சி யம் ஒன்று மாந்தரை எவ்வாறு இணைத்து வைக் கிறது என்பதைத் தமிழரும் திபேத்தியரும் ஒன்று கூடித் திருக்கயிலாய கிரியை வலம் வருமிடத்துக் காணலாம்.

பல நூற்றூண்டுகளுக்கு முன்பு போக்குவரத்துச் சாதனங்கள் குறைந்திருந்தபோதும், நவீன பௌதிக முன்னேற்றங்களைப்பற்றி மனிதருக்கு ஒன்றும் தெரியாதிருந்தபோதும், மனிதருடைய தேவைகள் மிகச்சொற்பமானவைகளா யிருந்த போதும் வாழ்க்கை முறை எவ்வாறிருந்தது எனும் கேள்வி எழுங்கால் இறந்த காலத்துள் மனக்கண்ணைச் செலுத்த முயலுகிறோம். காலத்தினுள் பின்னோக்கிச் செல்லுதற்குப் பதிலாக இந்தியாவினின்று திபேத்து வரையில் இமயமலை எனும் பிரதேசத்தினுள் நுழைந்து பார்த்தால் பண்டைக்கால வாழ்க்கை முறையைக் கற்பனை பண்ணுதற்குப் பதிலாகக் கண்கூடாகக் காணலாம். மலையின் உட்பிரதேசத்தினுள் போகப்போக நவீன வாழ்க்கை முறைகளெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக நின்றுவிடுகின்றன. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மாந்தர் எப்படி வாழ்ந்திருந்தனரோ அப்படியே இன்றைக்கும் அவர்கள் வாழ்கின்றனர். இயற்கைத்தாய் அளிக்கின்ற சொற்ப வஸ்துக்களைக்கொண்டு அவர்கள் திருப்தியடைந்திருக்கின்றனர். தங்களுக்குத் தேவையான உடைகளை அவர்களே செய்துகொள்கின்றனர். உணவுப் பொருளை வேண்டியவாறு நிலம் கொடுக்கிறது. பணமின்றி நல்ல வீடுகட்ட முடியும் என்பதை இமயமலையில் தான் காணலாம். பணத்தைக் கையாளுதலே பல விதமான போட்டிகளுக்குக் காரணமாகின்றது. திபேத்தினுள் பணத்தைக் கையாளுதல் மிக மிகக் குறைவு. அப்படியிருந்தும், மக்கள் இன்புற்றிருக்கின்றனர். அத்தேசத்திலும் ஒருவிதமான நாண

யம் வழங்குகிறது. ஆனால் சில்லரைக்காசு மாற்றுவ தற்குப் பதிலாகப் பெரிய முழுக்காசைத் துண்டாக முறித்துக் கொடுக்கின்றனர்! அப்படி ஒடிப்பதில் ஒன்று பெரியதாகவும் மற்றொன்று சிறியதாகவும் போய்விட்டால் அதைப்பற்றி அவர்களுக்குக் கவலை யில்லை. 'அவர்களுடைய பணத்தைப் போன்று போலிப்பணம் செய்துவிடுவது சுலபம். ஆனால் யாரும் அப்படிச் செய்வதில்லை. பணத்துக்கு அதிக மதிப்புக் கொடாமையே அதற்குக் காரணமாகும்; ஆதலால் நாகரிகத்தில் அவர்கள் சிறந்தவர்களா, நாம் சிறந்தவர்களா எனும் ஐயம் ஆங்கு உண்டா கிறது. ஒவ்வொரு வாழ்க்கை முறையும் ஒவ்வொரு விதத்தில் இன்பம் நிறைந்ததாகவிருக்கிறது என் பது இந்த யாத்திரையில் விளங்கும்.

நாட்டை எதிரிகளினின்று காப்பதற்குக் கோட்டை கட்டுகின்றனர். இமயமலையை ஒரு விதத் தில் இயற்கையா யமைந்த கோட்டையென்று சொல்லவேண்டும். அது இந்தியாவின் நாகரிகத் தைக் காக்கும் கோட்டை. இந்தியாவின் பாரமார்த் திக செல்வத்தைப் போன்று இமயமலை அழியாதது; இமயமலையைப் போன்று இந்தியாவின் பாரமார்த் திகச் செல்வம் அழியாதது. இமயமலையை எடுத்துக் காட்டாக வைத்துக்கொண்டு அதை நாம் இன்றைக் கும் உணரலாம். இயற்கையின் அமைப்பைப் பற்றிய ரகசியங்கள் நமக்கு உடனே விளங்குவதில்லை. ஓர் உண்மையைத் தெரிந்துகொண்டால் பின்பு அந்தை விட மேலான மற்றொன்று காட்சி கொடுக்கிறது. இதை அறிந்த பின் மற்றொன்று. இப்படி இயற்கை

யின் மருமம் படலம் படலமாக ஆராய்கின்றவர் அறிவுக்கு எட்டுகிறது. அடிவாரத்தில் அற்பக் குன்ருகக் காணப்படும் இமயமலை அதனுள்ளே செல்லச் செல்லப் படிப் படியாக ஆகாயத்தை அளாவிக் கயிலாயத்தில் கொண்டு சேர்க்கிறது. இயற்கையின் உதவியைக்கொண்டு இறைவனை அறிதலே வாழ்க்கை யின் முடிவான நோக்கம் எனும் செய்தியை இம் மலை ஓயாது நமக்குப் புகட்டிக்கொண்டிருக்கிறது.

வாழ்க்கைக்கு அன்பு எவ்வளவு தூரம் பயன்படு கிறது என்பதைப்பற்றி எவ்வளவு வேண்டுமானாலும் எடுத்தோதலாம். அறிவும் அத்தகையதே. இரண்டும் ஒருங்கே வாய்க்கப் பெருதவர் வாழ்வு அரைகுறை யான வாழ்வாகும். இவை இரண்டும் இறைவனிட மிருந்து உதிக்கின்றன வென்றும், உயிர் நிலைக்கு வரும்போது இவையிரண்டும் ஒன்ருய் விடுகின்றன வென்றும், இமய மலையினின்று உற்பத்தியாகும் யமுனையும் கங்கையும் புகட்டுகின்றன. இந்தியாவின் நாகரிகம் நதிக்கரையோரங்களில் வளர்ந்ததென்ருல் இந்தியாவின் புண்ணிய நதிகளில் பல இறைவ னுடைய சிரசுக்கு ஒப்பாகிய இமயமலையினின்று பாய்கின்றன.

மனிதனுடைய சரீரத்தில் மூலாதாரத்தினின்று ஆக்ஞை சக்கரம் பரியந்தம் ஆறு ஆதாரங்களிருக் கின்றன. ஒவ்வொரு ஆதாரத்திலும் ஒவ்வொரு வித விதமாக யோகி ஈசுவர தரிசனம் பெறுகின்ருன். இந்த ஆறு சக்கரங்களையும் கடந்து உச்சந்தலையில் ஸகஸ்ராரம் எனும் சக்கரத்துக்குக் குண்டலினி சக்தி எழுந்தருளும்போது யோகியானவன் பரம்பொரு

ளோடு லயித்து முக்தியடைந்து விடுகிறான். இத் தத்துவம் பரதகண்டம் எனும் புண்ணிய பூமியில் இயல்பாக அமைந்திருப்பது பேராச்சரியம். தென் கோடியில் கன்னியாகுமரி மூலாதாரமாயிருக்கிறது. அங்கிருந்து வடமுகமாகப் போகும்போது இடைகலை, பிங்கலை எனும் இரண்டு நாடிகளுக்கிடையில், யோக சக்கரங்கள் போன்ற முக்கியமான ஸ்தானங்களில் சிவஸ்தலமும், விஷ்ணுஸ்தலமும் பக்கம் பக்கமாக இருந்துகொண்டு ஒரே கருத்தை விளக்குகின்றன. முதலில் வருபவைகள் மதுரையில் சுந்தரேஸ்வரன், அதற்குப்பக்கத்தில் அழகர் கோயில். இரண்டாவதாக வருபவைகள் நடராஜன், அரங்கராஜன் ஆலயங்கள்; மூன்றாவதாக வருபவைகள் காளத்தியும் திருப்பதியும். நான்காவதாக வருபவைகள் விசுவநாதன் கோபிநாதன் ஆகியவர்களின் பதிகளாகிய காசியும் பிருந்தாவனமும்; ஐந்தாவதாக வரும் ஸ்தலங்கள் இமயமலையின் தென் சாரலில் இருக்கும் கேதாரமும் பத்திரிநாதமும்; கன்னியாகுமரி யுட்பட மொத்தம் ஆறு ஸ்தலங்களும் ஆறு ஆதாரம்போன்று இருக்கின்றன. இந்தியாவுக்குச் சிரசாயிருக்கின்ற திருக்கயிலாயகிரியை ஏழாவது பூமியாகிய ஸகஸ்ராரத்துடன் ஒப்பிடலாம். தேசபடம் தேசத்தின் வரலாறுகளை விளக்குவது போன்று கயிலாயகிரி ஞான பூமியை விளக்குகின்றது. இம்மலை இந்தியாவுக்கு முடியாய் மிளிர்வதில் உயர்ந்த கருத்தொன்று உண்டு. மனிதனுடைய தன்மை மனிதனுடைய முகத்தினின்று விளங்குகின்றது. அவ்வாறே இந்தியாவின் தன்மை அதன்

தலையாகிய கயிலையினின்று அறியப்படுகிறது. தெய்வத் தன்மையை அடைதலே இந்தியத் தேசிய லட்சியமாகும்.

### பொருட் செலவு

கயிலாயகிரி யாத்திரை வாசிகளின் சௌகரியத்தை முன்னிட்டு, சென்ற ஒரு வருஷமாக அல்மோராவில் சமிதி ஒன்று நிறுவப்பட்டிருக்கிறது. வருஷந்தோறும் யாத்திரை வாசிகளின் தொகை அதிகரித்துக்கொண்டு வருகின்றமையால் அவர்களை ஆண்டுதோறும் கயிலைக்குச் சிரமமின்றி அழைத்துச் சென்று வருவதே அதன் நோக்கமாகும். இன்னும் இரண்டு மூன்று வருஷங்களுள் அச்சமிதி ஒழுங்காக வேலை செய்யுமென்று எதிர்பார்க்கப் படுகிறது.

எப்பொழுதும் தக்க துணையுடன் இந்த யாத்திரையைத் துவக்குவதே நன்று. யாத்திரீகரின் கூட்டம் அதிகரிக்கின்ற அளவுக்குச் செலவு குறையும். ஆனால், உணவு, வழியில் தங்குமிடம், கூலியாட்கள் நியமனம் முதலியவைகளின் சௌகரியத்தை முன்னிட்டு ஆறு பேர்களுக்கு மேற்படாத சிறு சிறு பிரிவுகளாகப் பிரிந்திருப்பது அத்தியாவசியமானது. சிக்கனமாகச் செலவு செய்கின்றவர்கள் நாலைந்துபேர் அல்மோராவினின்று கயிலைக்குப் போய்விட்டுத் திரும்பி அல்மோரா வருவதற்குத் தலைக்கு நூற்றைம்பது ரூபாயைக் கொண்டு காரியத்தைச் சரிப்படுத்திவிடலாம். ஆனால், தலைக்கு முன்னூறு ரூபாய் செலவு செய்தால் நல்ல வசதிகளுடன் யாத்திரை செய்யலாம். உடை, கம்பளம் முதலிய

வைகளில் தலைக்கு ரூ. 75, உணவு மருந்து வகை களில் ரூ. 75, கூலியாட்கள், குதிரை முதலிய பிரயா ணச் சாதனங்களில் ரூ. 150. ஆக மொத்தம் ரூ. 300 இமயமலைக்கென்று ஒதுக்கிவைப்பது உத்தமம்.

கயிலைக்கு நித்திய நைமித்திக பூஜை செய்வதற் குப் பௌத்த மடாலயங்களிலிருக்கும் லாமாக்களைத் தவிர வேறு யாரும் இல்லை. அவர்கள் யாத்திரிகர்க ளிடமிருந்து பணம் கேட்பதில்லை. புரோகிதர்களும் அந்த முறையில் தங்கள் கடமையைச் செய்தால் மிக நன்றாயிருக்கும். ஸ்தலங்களுக்குச் செல்கின்றவர் கள் தங்களுக்கு இயன்ற பொருளைத் தட்சிணையாக வலியக்கொடுப்பது வழக்கமா யிருத்தல் வேண்டும். ஆனால் இக்காலத்தில் ஆலயங்களெல்லாம் வர்த்தக ஸ்தலங்களாய்விட்டன. பணம் பறிக்க முயலுபவர் களையும், தக்க விலை கொடாது தாங்கள் விரும்பு வதைப் பெற முயலுபவர்களையுமே எங்கும் காண லாம். ஆனால் கயிலையில் மட்டும் இக்கேட்டைக் காண முடியாது. வழிபடுபவர் வழிபடு தெய்வத் தோடு மெய்யன்புடன் இணைக்கப்பட்டிருப்பதே ஆங்கு இலங்கும் காட்சியாகும்.

### சில எச்சரிக்கைகள்

எங்களுடன் யாத்திரை செய்தவர் ஒருவர், மத் திய மாகாணத்திலிருந்து வந்தவர். அல்மோராவில் யாத்திரை துவக்கும்போது வைதிக ஆசாரத்துடன் கயிலாயயாத்திரை செய்யவேண்டுமெனும் கருத் தோடு காலில் பாதரட்சையில்லாது நடக்க ஆரம்பித் தார். போதிய அளவு உடைகளையும் அவர் எடுத் துக்கொண்டு வரவில்லை. மற்றவர்கள் ஆடம்பரமாக

யாத்திரை செய்கின்றார்களென்று அவர் கொஞ்சம் அலட்சியம் பண்ணினார். ஆனால் சில தினங்களுக்குள் கூரான கற்களில் அவருடைய பாதம் புண்பட்டது. துணியைக் கட்டிக்கொண்டு ஒரு நாள் நடந்தார். அடுத்த நாள் அதிக விலைகொடுத்து வழியில் ஓர் ஊரில் உள்ள கடையில் பாதரட்சை வாங்கினார். பிறகு உடைகளையும் கொஞ்சம் அப்படியே சேகரித்தார். இறுதியில் அவர் பிரயாணம் முழுதும் குதிரையின் மீதே ஈடேறிற்று. தேச ஆசாரத்தை அவ்வளவு மிகைப்படுத்திய அவர் அசுவ ஆரோகணம் செய்து கொண்டே கயிலையையும் வலம் வந்தார்! மக்களில் பெரும்பாலர்க்கு தேசாசாரமே மத அனுஷ்டானமாய் விடுகிறது. நாம் எதை அணிகிறோம் அல்லது அணியாதிருக்கிறோம் என்பதைக் கடவுள் பொருட் படுத்துவதில்லை. ஆனால் எத்தகைய மனப்பான்மையுடன் இருக்கிறோம் என்பதையே அவர் கவனிக்கிறார். இடத்துக்கு ஏற்ற உடை முதலியவைகளை அணிந்துக்கொள்ளக் கற்றுக் கொள்பவர்க்கே இந்த யாத்திரையில் தடையேற்படாது.

இமயமலைக்குப் புதிதாகப் போகின்றவர்கள் தண்ணீரைப் பருகலாகாது! காய்ச்சிய வெந்நீரை மட்டும் பருகவேண்டும். கொஞ்ச நாளைக்குப் பிறகு ஊற்று நீர் குடிக்கலாம். ஆனால் நெடுநாள் பழகிய பின்பே உருகிய பனிக் கட்டியினின்று வரும் ஜலத்தை உட்கொள்ளலாம். உறை பனியினின்று வரும் நீர் வயிற்றுக்கடுப்பை உண்டு பண்ணும். வழியில் சில ஊர்களில் கண்வலி, கழுத்து முடிச்சு முத

லிய பிணிகளால் வருந்துபவர்களைக் காணலாம். அத்தகைய இடங்களில் நன்ருகக் காய்ச்சிய ஜலத்தைப் பருகுவது தான் முறை. மேலும், தண்ணீரில் நெடுநேரம் நீராடலாகாது. வனத்திலுள்ள கனிகளில் சில விஷமுடையவைகள். ஆதலால் மலைவாசிகளிடமிருந்து அவைகளைப்பற்றி நன்ருகத் தெரிந்து கொண்டாலொழிய, அவைகளையும் புசிக்கலாகாது. பெருமிதமாய் வளர்ந்திருக்கும் சில செடிகள் உடலில் பட்டவுடனே தடித்துத் தினவு உண்டாகும். அதன் வலி தணிதற்கு ஒரு நாள் அல்லது இரண்டு நாட்கள் பிடிக்கும். ஆதலால், அவைகளைப்பற்றி எச்சரிக்கையா யிருப்பது அவசியம்.

செங்குத்தான பாதைகளில் நடக்கும் போது ஆட்டு மந்தைகளையும் குதிரைகளையும் கடக்கவோ எதிர்க்கவோ நேரிடும்; அங்கே குதிரைகள் மனிதனைவிட வேகமாக ஒருகாலும் போகாததாலால் இவைகளைக் கடக்க நேரிடும் என்று சொல்லப்படுகிறது. அது போழ்து இரண்டு முக்கியமான விஷயங்களை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். பாதை மிக ஒடுங்கியதாயிருந்தால் மேல் நோக்கி அல்லது பின் நோக்கிச் சென்று அது அகன்றிருக்குமிடத்தில் நின்று கொள்ளவேண்டும். மலை ஒரு பக்கம் செங்குத்தாகவும் மற்றொரு பக்கம் பள்ளத்தாக்காகவும் இருக்கும். நாம் செங்குத்தா யிருக்கும் பக்கத்தில் சுவரோடு சுவராய் நின்று கொள்ளுதல் அவசியம். ஓரத்தில் நின்ருல் குதிரையால் அல்லது ஆட்டு மந்தையால் மோதப்பட்டுப் பாதாளத்தில் போய் விழ நேரிடும். அத்தகைய ஆபத்துக்கள் பல

தடவைகளில் நேர்வதால் அது விஷயத்தில் மிக எச்சரிக்கையா யிருக்க வேண்டும்.

குதிரைகளுக்கும் கூலியாட்களுக்கும் மாமூல் விகிதம் உண்டு. அதைக் கூட்டவோ குறைக்கவோ செய்யவேண்டிய அவசியமில்லை. ஆனால் விசுவாசமாக வேலைசெய்கின்றவர்களுக்கு வெகுமதி கொடுத்துச் சந்தோஷப் படுத்தவேண்டும். சிலர் வெகுமதி கொடுப்பதாக வாக்கு கொடுத்துவிட்டுப் பின்னால் ஏமாற்றி விடுவதுண்டு. கயிலாய யாத்திரை செய்கின்றவர்களுக்கு அத்தகைய இயல்பு தகாது. வழியில் நமக்கு உதவி புரிகின்ற அனைவரையும் இன்புறச் செய்வது யாத்திரையின் முக்கியமான ஓர் அம்சமாகும். மனிதன் வாழ்ந்திருப்பதே தன்னொருவனது நன்மைக்காகவன்று. இக்கோட்பாட்டைக் கயிலாயகிரி யாத்திரையில் சிறப்பாக அனுஷ்டிக்கின்றவர்க்குச் சித்த பரிபாகம் விரைவில் உண்டாகும்.

பாண்டவர்கள் தங்கள் வாழ்க்கையின் இறுதியில் கயிலாய யாத்திரை செய்தபோது தர்மராஜா ஒருவரே கயிலைபோய்ச் சேர்ந்தார்; மற்றவர்கள் வழியில் தடைப்பட்டுவிட்டனர் என்று சொல்லப்படுகிறது. அதற்கு முக்கியமான காரணம் ஒன்று உண்டு. யார் வழியில் பின்னுக்குத் திரும்பிப் பார்க்கின்றனரோ அவர் மேலே செல்லமுடியாது என்பது நிச்சயம். உலக ஆசைகளை விட்டு ஆத்மீக வாழ்க்கையில் மேல்நோக்கிச் செல்கின்றவர்கள் மறுபடியும் உலக ஆசைகளை திரும்பிப் பார்ப்பார்களானால் அவர்கள் மார்க்கத்தினின்று தவறிவிடுவார்கள் என்பதே அதன் கருத்து.

இன்றைக்கு நாம் கயிலைக்கு யாத்திரை செய்தால் இக்கருத்தை மற்றொரு விதத்தில் பூர்த்தி செய்வோம். சிரமப்பட்டு நடக்கின்ற வழியில் ஓரடியாவது பின்னிடுதற்கு ஒருப்படோம். அவ்வாறே காலத்தைச் சேதப்படுவத்துதற்கும் அவகாசமில்லை. ஆதலால் யாத்திரையைத் துவக்கிவிட்டால் ஒரு யுத்தத்தை நடாத்துவதுபோன்று கண்ணும் கருத்துமாய் அதை விரைவில், அதாவது இரண்டு மாதத்துக்குள் முடித்தாகவேண்டும். வழியில் ஒருவர் நோய் வாய்ப்பட்டாலும் அது உடன்வரும் பலருக்கு இன்னலாய் முடியும். அத்தகைய இடையூறு ஒன்றும் நேரா வண்ணம் எச்சரிக்கையுடனும், ஊக்கத்துடனும். சிவ பக்தியுடனும் கயிலாய யாத்திரையில் முன்னேகிச் செல்கின்றவர்களுக்கு அது இனிது முற்றுப் பெறும்.

## 15

### அப்பர் கண்ட கயிலை

ஓர் இடத்தை நேரில் போய்ப் பார்க்கின்றவர்களுக்கெல்லாம் அதன் பூரண மகிமை விளங்குவதில்லை. அவரவர் அறிவுக்கு எட்டிய வளவே வெளியுலகின் உண்மை விளங்கும். ஆனல் பிறர் யாராவது நன்கு விளக்கினல் அவருடைய அறிவின் மூலமாகவும் உண்மையைத் தெரிந்து கொள்கிறோம். ஓவியம், சிற்பம், இயற்கையழகு, மொழியழகு ஆகிய அனைத்தையும் விளக்கிக் காட்டுபவர் ஒருவர் இருந்தால், அதனல் பெரும்பாலர் பயனடைவர்.

கயிலையை அப்படி விளக்கிக் காட்டுபவர் ஒருவர் அகப்படுவார் என்று நாங்கள் கனவிலும் கருத

வில்லே. ஐதிகத்தை அனுசரித்து எங்கள் யாத்திரையின்போது நாங்கள் நாள்தோறும் சிவ அர்ச்சனே ஆராதனைக் கேற்ற நூல்கள் சிலவற்றைப் பாராயணஞ் செய்துகொண்டு போனேம். கயிலாய கிரியைப்பற்றி அப்பர் சுவாமிகள் பாடிய முப்பது திருத்தாண்டகமும் அவைகளுள் முக்கியமானவைகளாகும். கயிலாயகிரியின் வர்ணனே அவைகளில் உள்ளபடி அமைந்திருந்தது எங்கள் உள்ளத்தைக் கவர்வதாயிற்று. அதைவிட மேலான வர்ணனே எந்த மகிரிஷியாவது இதுபரியந்தம் செய்திருப்பதாக விளங்கவில்லே.

தலந்தோறும் சென்று தமிழ்மறை பாடிய திருநாவுக்கரசு சுவாமிகள் வடதிசையாகப் போய்க்கொண்டேயிருந்தார். அப்பொழுது திருக்கயிலேயில் மலேமகளுடன் வீற்றிருக்கும் சிவபெருமானது தரிசனம் பெறவேண்டுமென்ற அவா அவர்க்குண்டாயிற்று. இமயமலேயை நோக்கி எவ்வளவு தூரஞ் சென்ருர் என்பது நமக்குத் தெரியாது. ஆனல் வழியிலேயே அவர் உடல் பெரிதும் நலிவுற்றது! மேலே செல்லச் சாத்தியப்படவில்லே. உள்ளம் மட்டும் கயிலேயைக் கருதிய வண்ணமா யிருந்தது. சிவபெருமானே வழிப்போக்கராகத் தோன்றி அவருடைய கருத்து ஈடேரு தென்ருர். அதற்கு அப்பர் ' கயிலேமலேயானது காட்சியைக் கண்டாலன்றி மாளும் இவ்வுடல்கொண்டு மீளேன்' என்ருர். கயிலேமலேயான், பொய்கையொன்று உண்டுபண்ணி, ' நீ இதில் மூழ்கித் திருவையாற்றில் எழுந்து அங்கு நம் தரிசனம் பெறுவாய்' என்று பகர்ந்தருளி மறைந்தார். அப்பரும் அப்படியே செய்து கயிலேயை வர்ணிக்கின்ருர்.

ஓர் இடத்தைப் போய்ப் பாராது நெடுந்தூரத்தி லிருந்தே அதன் காட்சியைப் பெறும் நிகழ்ச்சி பல தடவைகளில் பல பெரியோர்கள் வாழ்க்கையில் நேர்ந் திருக்கின்றது. மோஸஸ் எனும் யூதப் பெரியார்க்குத் தம் இனத்தார் மிசிரி தேசத்தில் பட்ட பாடெல்லாம் வெகு தூரத்துக்கு அப்பால் இருந்தே இறைவன் அருளால் தென்பட்டன. பின்பு அவர் அவைகளை நேரில் பார்த்தும் நிரூபித்தார். மகாபாரத யுத்தத் தில் நடைபெற்ற செயல்களும் சம்பாஷணைகளும் வியாச மகரிஷியின் உள்ளத்தில் தோன்றுவன வாயின. எட்ட இருந்துகொண்டே மகாபாரத வர லாறுகளை அறிந்து கொள்ளும் ஆற்றலை வியாச பக வான் சஞ்ஜயருக்குக் கொடுத்தருளினர். இத்தகைய பல சம்பவங்களினின்று ஞானக்கண்ணைப் பெற் றுள்ளவர்களுக்கு இது சாலும் என்பதே வெளியா கின்றது. அப்பர் சுவாமிகள் திருவையாற்றினின்று கயிலையைக் கண்டிருக்கவேண்டும். அல்லாவிடில், அவ்வளவு பொருத்தமாக அவர் அதன் பண்பைப் பகர்ந்திருக்க முடியாது. அவருடைய கூற்றுக்களில் சில சிவ தத்துவத்தைப் பகர்வதாயும், வேறு சில கயிலையை ஸ்தூலமாக இருக்கிறபடி பகர்வதாயும் இருக்கின்றது. கயிலையை ஸ்தூலமாக வர்ணிப்பதை மட்டுமே ஈண்டு நாம் எடுத்துக் கொள்வோம். ஏனென்றால், கயிலைக்குப் போகின்றவர்கள் இன் றைக்கும் இக்கூற்றுகளைத் தாங்கள் காணும் காட்சி யோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

திருவையாற்றினின்று அப்பர் கயிலைமலை யினது காட்சியைப் பெறுகின்றார். அது இறைவன்

காட்சிதான்; வெறும் மனத்தின் மயக்கமன்று என்று எப்படித் தெளிவது? மறை முடியாகிய உபநிஷத வாக்கியமும், அப்பர் கூற்றும் இது விஷயத்தில் ஒருமித்திருக்கின்றன. பரம்பொருளின் தரிசனம் கிடைக்கப் பெற்றவர்க்கு ஊனக்கண்ணுக்குப் புலப்படுவனவும் பரம்பொருள் மயமேயாம், அவர்களுக்கு உலகக் காட்சி தெய்வக் காட்சியாக மாறுகின்றது. இதுவே ஈசுவர தரிசனத்திற்கு அத்தாட்சி. 'கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்' எனும் முடிவுடைய பதினொரு பாடல்களை அவர் பாடுகின்றார். ஞானக்காட்சி பெற்றவர் நிறைமொழி யென்பதற்கு அதுவே சான்று. உலகில் இலங்கும் அனைத்தும் அப்பர்க்குச் சிவ சக்தி மயமாகத் தென்படுகின்றன. இக்கருத்தை அவர் கயிலைத் திருத்தாண்டகத்தில் உமைபாக மாகத்தணைத் தாய் போற்றி' யென்றும், 'மன்னிய மங்கை மணாளா போற்றி' யென்றும், 'துடியாரிடை யுமையாள் பங்கா போற்றி' யென்றும் மும்முறை முரசறைகின்றார்.

உலகத்தைச் சிவசக்தி மயமாகக் காணும் பேறு நமக்கு இன்னும் கிட்டாதிருக்கலாம். எனினும் கயிலைக்குச் சென்றால் தாற்காலிகமாகவாவது அப்பேறு நமக்கும் வாய்த்துவிடும். உருவெடுத்திருக்கும் சராசரங்களனைத்தும் சக்திமயம்; பின்பு அதனூடு இலங்கும் அறிவே சிவம் எனப்படுவது. கயிலாய பூமியில் அறிவற்றது எதுவுமே இல்லை. சக்தியின் வாயிலாகச் சிவமும் சிவத்தின் வாயிலாகச் சக்தியும் ஆங்கு ஒளிர்வது அனைவர்க்கும் கண்கூடாக விளங்கும். கல்லையும் மண்ணையும் ஜடப்பொருள் என்கின்

றேம். ஆனல் அவைகளும் சித்சொரூபம், அறிவு மயம் என்பது அங்கே பிரத்தியக்ஷமாகத் தெரி கிறது. உள்ளும் புறமும் எங்கும் யாவும் நீக்கமறச் சிவசக்தி சொரூபமாகவே நிலைத்திருக்கின்றன. சித் தமலம் அறவே அறுபடாத நம்மையுங்கூட அது சிவானந்த போகத்தில் திளைக்குமாறு செய்துவிடு கிறதென்ருல் பின்பு சிவமயமான மனதையுடைய அப்பர் அதை அகக்கண்ணுல் கண்டு எவ்வாறு களித்திருப்பார் என்பதை யாரே ஊகிக்க வல்லவர்!

நாஸ்திகர்களென்றும் நிரீச்வர வாதிகளென் றும் தங்களைச் சொல்லிக்கொள்ளும் சிலர் கடவுளைக் கண்டபடி நிந்திக்கின்றனர். தங்களாலேயே கற் பனை செய்யப்பட்ட கடவுளைத்தான் அப்படி நிந்திக் கின்ருர்கள் என்பது இவர்களுக்குத் தெரியாது. முற் காலத்தில் இருந்த நாஸ்திகர்கள், பிற்காலத்தில் வரும் நாஸ்திகர்கள், ஆகிய எல்லாருக்கும் சேர்த்து அவர்களுடைய கூற்றுப் பொருள் படாதது என்று அப்பர் ஒரே மொழியில் முடித்து விட்டார். "யாரு மிகழப் படாதாய் போற்றி' என்கின்ருர் அவர். கதிர வன் எதிரே காரிருள் இருக்க முடியாதது போன்று கயிலையைக் காண்பவர் மனத்திலே கடவுளை யிகழும் எண்ணம் இருத்தல் இயலாது. இறைவனது மகிமை யைக் கண்டு தலை வணங்கும் இயல்பு தானுக அங்கு வந்துவிடும்.

அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்று சொல்லப்படுகிறது. முகத்துக்கு மேன்மையளிப்பது கண். ஒருவனுடைய தோற்றம் முழுதும் கண்ணி னின்றே வெளிப்படுகிறது. யோகி எவன் போகி

எவன் என்று கண்ணே காட்டிவிடுகிறது. சிலர் கண்ணை ஆத்மாவுடைய ஸ்தூல அமைப்பு என்று சொல்லுவதில் பொருள் மிகவுண்டு. நிலவுலகில் கயிலை வகிக்கும் மேன்மையை அப்பர் 'கண்ணு யுலகுக்கு நின்றாய் போற்றி' யென்று சுருங்கச் சொல்லி விளக்குகின்றார். இதே முறையில் கயிலை யின் ஸ்தூல அழகை அப்பர் அருளிச் செய்த தொடர் மொழிகளாகிய: வேற்றாகி விண்ணாகி நின்றாய் ஊற்றாகியுள்ளே யொளித்தாய், ஆற்றாகியங்கே யமர்ந் தாய், காற்றாகி யெங்குங் கலந்தாய், திருவாகி நின்ற திறமே, ஊனத்தை நீக்குமுடலே, தேனத்தை வார்த்த தெளிவே, நீராவியான நிழலே, காராகி நின்ற முகிலே, சில்லுருவாய்ச் சென்று திரண்டாய், கல்லு யிராய் நின்ற கனலே, நெடிய விசும்பொடு கண்ணே நீள வகலமுடையாய், அடியுமுடியுமிகலி, பொறை யுடைய பூமி நீரானாய், செய்யாய் கரியாய் வெளியாய், செல்லாத செல்வ முடையாய்—ஆகியவைகளைக் கொண்டு வேண்டியவாறு விளக்கிக்கொண்டே போகலாம். விஷயத்தை அப்படிப் பெருக்கவேண் டிய அவசியமில்லை. கயிலையை உள்ளபடி வர்ணிப்ப தற்கு இவைகளுக்கு மேலான தொடர் மொழிகளை வேறு எங்கும் பெற முடியாது.

இன்னும் நான்கு வர்ணனைகளை மட்டும் தனித் தனியே சுருக்கமாக எடுத்து விளக்குவது அவசியம். சூரியோதயத்தின்போது திருக்கயிலாயகிரி உருக்கி யெடுத்த தங்கம்போன்று தகதகவென்று திகழ் கின்றது என்று சொல்லப்பட்டது. இக்காரணத்தை முன்னிட்டே கயிலாயநாதனைக் தீ வண்ணனென் றும், பொன்னார் மேனிய னென்றும், மேலோர்

மொழிகின்றனர். தாம் கண்டவாறு அப்பர் அக் காட்சியைக் 'காலை முளைத்த கதிரே போற்றி, ஓங்கி யழலாய் நிமிர்ந்தாய் போற்றி; காவாய் கனகத் திரளே போற்றி, சுடரிற் றிகழ்கின்ற சோதி போற்றி, அருகிமிளிர்கின்ற பொன்னே போற்றி, வேளாத வேள்வி யுடையாய் போற்றி' என்று பல வாறு மிகப் பொருத்தமாகப் புகழ்கின்றார்.

கயிலாய பூமியில் எப்பக்கத்திலிருந்து பார்த்த போதிலும் அல்லும் பகலும் அது ஒரே ஜோதி மய மாகக் காட்சி கொடுத்துக் கொண்டிருக்கிறது. நாவுக்கரசர் அக்கருத்தை 'நாற்றிசைக்கும் விளக் காய நாதா போற்றி' என்கிறார். விளக்கு இருக்கு மிடத்தை விளக்க வேறு ஒன்றும் வேண்டியதில்லை. அது தன்னைத் தானே காட்டிக் கொள்கின்றது. திருக்கயிலாயகிரியும் அதைத்தான் சதா செய்து கொண்டிருக்கிறது. தன்னைத்தான் விளக்குவது மட்டுமின்றி, இறைவனிடத்து உள்ள இறைமை யானது மற்ற உயிர்கள் அவனைக் கண்டவுடனே தங் களை யறியாது தலை வணங்கும்படியுஞ் செய்து விடு கிறது. கயிலையின் கண் உள்ள இறைமையை அப்பர், 'ஆட்சி யுலகை யுடையாய் போற்றி' யென் றும், 'மாட்சி பெரிது முடையாய் போற்றி' என்றும் இயம்புகின்றார். அவர் பிரயோகித்துள்ள பதங்கள் பொருத்தமாயிருக்கின்றன வென்று ரசிப்பதற்கு நாம் கயிலையை நேரே பார்ப்பது ஒன்றே உற்ற உபாயம்.

வேதத்தின் உட்பொருளை உள்ளவாறு அறிந்து கொள்ளுதல் யாருக்கும் எளிதன்று. முனி

வர்களுடைய மனதுக்கே அது மறை பொருளாய்க் கிடக்கிறது. அக்காரணத்தாலேதான் அதற்கு மறை என்னும் பெயர் வந்தது போலும். ஆனல் அதன் முடிவான கோட்பாட்டை ஸ்தூலமாய் அமைந்துள்ள கயிலை தெற்றெனத் தெளிவுறுத்துகிறது. தூய்மையே வடிவெடுத்துள்ள மானச சரோவரத்தில் கயிலையின் பிரதிபிம்பம் தோன்றுகிறது. மூலப் பொருளுக்கும் அதன் நிழலுக்கும் வேற்றுமை தென்படுவதில்லை. மானச சரோவரத்தின் தெளிவே அதற்குக் காரணமாகும். அந்த சரோவரத்தைப் போன்று மனத்துக்கண் மாசில்லாதவர்களாகின்றவர்கள் மெய்ப்பொருளை உள்ளபடி உணர்வர். மெய்ப் பொருள் எத்தகையது என்பதைக் கயிலைமலை விளக்குகிறது. ஆக கயிலையும் மானச சரோவரமும் ஒன்றுகூடி வேதத்தின் மறை பொருளை விளக்கி விடுகின்றன. இக்கோட்பாட்டை அப்பர் சுவாமிகள் 'மறையுடைய வேதம் விரித்தாய் போற்றி' என்கின்ருர். வேதத்தில் இதற்கு விஞ்சிய ரகசியம் கிடையாது.

சொல்லற்கரிய பொருளாகிய சிவனை தேவாதி தேவனென்றும் மகாதேவனென்றும் இன்னும் என்னென்ன முறைகளிலோ சொல்ல முயன்றனர் சான்ருேர். ஸ்தூலமாக அமைந்துள்ள கயிலாயகிரி இக்கூற்றை அறவே மெய்ப்பிக்கின்றது. அடுக்கடுக்காக ஆகாயத்தை அளாவிக்கொண்டு அமர லோகத்தோடு உராய்கின்ற இமயமலைக்கு அதிபதியாயிருப்பது கயிலையங்கிரி. இக்கருத்தை விளக்குதற்கென்றே வந்துள்ள வாகீசர் 'விண் மேலுமேலு

நிமிர்ந்தாய் போற்றி, மேலார்கண் மேலார் கண் மேலாய் போற்றி, என்று மொழிகின்றார். கயிலையின் வருணனை ஈண்டு உச்ச ஸ்தானம் பெறுகின்றது. சொல்லுக்கு உள்ள முழு ஆற்றலும் இங்கு வெளியாகின்றது. சொல்வேந்தருடைய சிறப்பும் உலக நாயகருடைய சிறப்பும் ஒன்றிவிடுகின்றன. இதற்கு மேல் கயிலையைப் பற்றி ஒன்றும் சொல்ல முடியாது. அப்பர் அகக்கண்ணால் கயிலையைக் கண்டார்; கண்டவாறு அதை வெளிப்படக் கூறினார்.

கயிலையினின்று இணைபிரியாத மானச சரோவரத்தைப்பற்றி அப்பர் ஏதாவது சொல்லியிருக்கிறாரா எனும் கேள்வி இயல்பாகவே எழக்கூடும். அதன் கருத்து அவருடைய பாக்களில் வேண்டியவாறு வந்து அமைந்து கிடக்கிறது. மானச சரோவரம் என்பதன் பொருள் மனது எனும் பொய்கை; நல்லாருடைய மனதின் ஸ்தூல அமைப்பாயிருப்பது மானச சரோவரம் என்றும், கெட்டவர்களுடைய மனதின் அமைப்பாக இருப்பது ராட்சஸ குளமென்றும் முன்னமே சொல்லப்பட்டது. இந்த இரண்டும் கயிலாய பூமியில் இருக்கின்றன வெனினும், பிந்தியதைப் பொருட்படுத்துவார் யாருமில்லை. மானச சரோவரத்தில் கயிலாயகிரியின் பிரதிபிம்பம் தெற்றெனத்திகழ்வது போன்று, மேலோர் உள்ளத்திலேயே கயிலாய நாதனுடைய காட்சி காணப் பெறும். ராட்சஸ குளம், மானச சரோவரம் ஆகிய இரண்டையும் குறிப்பிட்டுச் சொல்வேந்தர் 'பொய் சேர்ந்த சிந்தை புகாதாய் போற்றி, போகாதென் னுள்ளத் திருந்தாய் பேற்றி' என்கின்றார். பிறகு 'மருவியென் சிந்தை புகுந்தாய்' எனும் கருத்தை

வெவ்வேறு விதங்களில் வர்ணிக்கின்றார். கயிலையைப் பற்றிய முப்பது திருத்தாண்டகங்களில் இக் கருத்துப் பதினெட்டுத் தடவை வெளியாகின்றது. அப்பருடைய தூய உள்ளமும் மானச சரோவரமும் ஒன்றிவிட்டன. தமது உள்ளத்தின் அழகை வர்ணிப்பது தம்மையே புகழ்வதற்கு ஒப்பாகும். தம்மைத் தாம் புகழ்வது மேலோர் செயலன்று. ஆனால், ஒரு சிறிது நேரம் மட்டும் மானச சரோவரம் தமது உள்ளத்துக்கு அன்னியமாகப் பிரிந்து நிற்கிறது. அதுபோழ்து அவர் 'நிறையுடைய நெஞ்சினிடையாய் போற்றி, நீங்காதென் னுள்ளத்திருந்தாய் போற்றி' என்று பகர்கின்றார். மானச சரோவரத்தை நிறையுடைய நெஞ்சு என்று நவிலுவது இறைவனை 'ஓங்கார' வடிவினன் என்று சுருங்கச் சொல்லுவதற்கு ஒப்பாகும். கயிலையைச் சிறப்பித்த சொல்வேந்தருடைய மனசு எப்படி யிருந்திருக்கும் என்று காண விரும்புபவர் மானச சரோவரத்தைச் சென்று காண்பார்களாக. மானச சரோவரத்தைப் பற்றி அவர் பகர்ந்த பதினெட்டுத் தொடர் மொழிகளில் ஒன்று 'கோயிலாவென் சிந்தை கொண்டாய் போற்றி' என்பது. இதினின்று நாம் கற்றுக் கொள்ள வேண்டிய பெரிய பாடமொன்று உண்டு. நமது சிந்தையையும் இறைவனுக்குகந்த கோயிலாக நாம் செய்யவேண்டும். இதுவே ஆத்ம சாதனங்களிலெல்லாம் தலையாயது. இதை மறந்துவிட்டு அவனை நாடி உலகெலாம் தேடினும் அவன் நமக்கு அகப்படான்.

கயிலையைப்பற்றி அப்பர் அவ்வளவு அருமையாகப் பாடியருளினார். ஆனால் அவர்க்குத் தமது

பூதத்திருமேனியுடன் அப்பாமாலையைக் கயிலையில் கொண்டு சமர்ப்பிக்க இயலவில்லை. இறைவனுடைய திருவுளமும் அங்ஙனமில்லை. தமிழகத்து அவர் வைத்த அப்பொக்கிஷத்தை நாங்கள் தமிழர் ஏழு பேர் கூடிக் கயிலைக்குக் கொண்டு சேர்த்து வாயாரப் பாடி மனமாரச் சிந்தித்துச் சிவபெருமான் சன்னிதியில் சமர்பித்தது, எங்களுக்கு அடங்காத ஆனந்தத்தை உண்டு பண்ணிற்று. இன்னும் பன்முறை அப்பாமாலை தமிழரால் திருக்கயிலைக்கு எடுத்துச் செல்லப்படுமாக.

## திரும்பி வருதல்

யாத்திரையின் திரும்பி வரும் பகுதியைப்பற்றி ஒன்றும் சொல்லவேண்டிய அவசியமில்லை. ஏனென்றால் போன வழியிலேயே திரும்பி வருகிறோம். போகும் பொழுது ஏற்றமாயிருந்த இடங்கள் வரும் பொழுது இறக்கமாகின்றன. ஆதலால் வரும் பொழுது ஏற்றங்கள் குறையவும் இறக்கங்கள் அதிகப்படவும் செய்கின்றன. ஆனால் ஏற்றம் இறக்கம் ஆகிய இரண்டிலும் கஷ்டம் ஒன்றே. ஒரு விதத்தில் ஏற்றத்தை விட இறக்கத்தில் அதிக கஷ்டம். போகும் பொழுது வழியில் என்னென்ன இடைஞ்சல்கள் ஏற்படுகின்றனவோ அவை யாவும் திரும்பி வரும் பொழுதும் உண்டு. ஆனால் கயிலையின் தரிசனம் எனும் காரிய சித்தியால் விளையும் குதூகலத்துக்கிடையில் அவைகளைப் பொருட்படுத்த அவகாசமில்லை. இன்ப துன்பங்களுக்கு வெளியுலகை விட மனமே முக்கியமான காரணம் என்பது இந்த யாத்திரையில் விளங்கும்.

திபேத்துக்குள் இருக்கும் பரியந்தம் நாள் தோறும் பசி குறைந்து கொண்டும் தேகம் தளர்வுற்றுக் கொண்டும் வரும். பக்தியும் பரவச நிலையுமே நமக்குச் சக்தியளித்து வருகின்றன வென்று சொல்ல வேண்டும். விப்புத் தடாகக் கணவாயைக் கடந்து இந்தியாவுக்குள் நுழைந்ததும் திரும்பவும் நன்கு பசியெடுக்க ஆரம்பித்து விடும். பசியைத் திபேத்தில் தேய் பிறைக்கும் இந்தியாவில் வளர் பிறைக்கும் ஒப்பிடலாம். திரும்பி வரும்போது நாங்கள் பெருமிதமாக உண்பதால் சமையற்காரனுக்கு நாள்தோறும் உணவு போதாது போய்விடும். போதாததற்குக் கடைகளில் அகப்படும் வாழைப் பழம், பட்டாணிக்கடலை, புளிப்பு மாங்காய், மக்காச் சோளம், கொப்பரை, வெல்லம் முதலியவைகள் வழிநெடுகத் துவம்சமாய்விடும். எங்கள் கூட்டம் ஒரு கடையினுள் நுழைந்தால் பிறகு அதில் தின்பண்டம் ஒன்றும் மிச்சமிராது. பசி எனும் ராட்சஸன் அச்சம், நாணம் முதலியவைகளை எங்கள் உள்ளத்தினின்று விரட்டி யோட்டி விட்டான். உறக்கம். ஸ்நானம், தியானம் ஆகிய இந்த மூன்றும் நீங்கலாக மற்ற வேளைகளில் ஏதேனும் ஒன்றைப் புசிப்பதே வேலை! எங்கிருந்து தான் அத்தகைய பசி வந்ததோவென்ற ஆச்சரியம் நெடுநாளைக்குப் பின் உண்டாயிற்று. அது அடங்கி நடுநிலை வருவதற்கு ஒரு மாதம் பிடித்தது. ஆனல் உடலும் அதற்கேற்றபடி அதிவேகமாய்ப் பலமடைந்து வந்தது.

கயிலைக்குப் போகும் பொழுது பனிக்கட்டி மயமாகவும் வெறும் கற்பாறை மயமாகவும் இருந்த பல

இடங்களில் உறை பனியானது உருகிப்போய் பின்பு மழை பெய்து, பசும்புல், செடி, கொடி முதலியன தோன்றிப் புதிய காட்சியை உண்டுபண்ணிவிட்டன. சில இடங்களை அடையாளம் கண்டு பிடிக்கவும் இயலாது போய்விட்டது. திரும்பி வரும்போது காய் கனி வகைகள் பெரிதும் வழியில் அகப்பட்டன.

### கயிலையினின்று விடை பெறுதல்

திபேத்தில் அதிகாலையில் அதாவது சூரியோதயத்துக்குச் சற்றுப் பின்பு நீராடுவது சிறிது சிரமமான காரியமெனினும் மானச சரோவரத்தில் ஒரு நாள் அப்படி நீராட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அது போழ்து அத்தடாகத்தின் தென் மேற்கு மூலையில் கூடார வாசம் நடைபெறுகிறது. கிழக்கு முகமாக நின்று ஸ்நானம் செய்யும்போது வலது புறம் மாந்தாதா மலையும் இடது புறம் கயிலையங்கிரியும் ஒளிர்கின்றன. கண்ணுக்கு எட்டுமளவு எதிரே இருக்கும் நீர்ப்பரப்புக்குச் சற்று மேலே சூரியன் பிரகாசிக்கின்றான். தடாகத்தின் கரை பார்ப்பதற்கு மிக அழகாயிருக்கிறது. அதன் மீது மிருதுவாகச் சிறு அலைகள் வந்து மோதுவது 'சிவ சிவ' என்று சொல்லுவதுபோற் கேட்கிறது. இதுவே மானச சரோவரத்தில் செய்யும் கடைசி ஸ்நானம் எனும் எண்ணம் மனதில் கொஞ்சம் துயரத்தை உண்டு பண்ணுகிறது. நீராடிய பின் தடாகக் கரையில் சிறிது நேரம் தியானம். அது போழ்து பல பிறவிகளின் வாயிலாகச் செய்யும் வாழ்க்கை எனும் பெரும் பயணமும் அதன் மங்களகரமான முடிவும்

மனக்கண்ணெதிரே காட்சி கொடுக்கின்றன. பிறகு வரிசையாக வீற்றிருக்கும் மாந்தாதா மலை, மானச சரோவரம், கயிலையங்கிரி ஆகிய மூன்றுக்கும் சேர்ந்து சாஷ்டாங்க நமஸ்காரம்.

காலையில் ஒன்பது மணிக்குள் உணவை முடித்துக்கொண்டு, கூடாரங்களையெல்லாம் அவிழ்த்து மூட்டை கட்டிக்கொண்டு 'ஜெய கயிலாச பதிக்கு ஜெய' எனும் கோஷத்துடன் கூட்டம் புறப்படுகிறது. மாந்தாதா மலையின் மேற்குச் சாரலில், தடாகத்துக்கு மேல் சுமார் இரண்டாயிரம் அடி உயரத்தில் குர்லா கணவாய் என்பது ஒன்று இருக்கிறது. அதுவே கயிலாய பூமிக்குத் தெற்கு எல்லையாகும். உயர ஏற ஏறக் கயிலையும் மானச சரோவரமும் புதிய புதிய வண்ண முடையவைகளாகக் காட்சி கொடுக்கின்றன. இதற்கிடையில் பூமாரி போன்று உறைபனி விண்ணுலகினின்று பெருமிதமாக எங்கள் மீது வீழ்ந்து உருண்டோடுகின்றது. இறைவனே எங்களை ஆசீர்வதிப்பது போன்றிருக்கிறது அக்காட்சி. அரைமணி நேரத்துக்குள் அதுவும் முடிவுபெற்று விண்ணுலகும் மண்ணுலகும் தெளிவுடன் விளங்குகின்றன.

கடைசியாகக் குர்லா கணவாயும் வந்து விட்டது. கயிலைமலையானிடமிருந்து விடைபெற்றுக் கொள்ளும் இடம் இதுவே. இன்னும் சில அடிகள் தென் முகமாக வைத்தால் கயிலை கண்ணுக்குத் தெரியாது மறைந்து போம்! இந்நிலையில் வடமுகமாக நின்று கண் குளிரக் கடைசியாகக் கயிலையையும், அதன் முன் மானச சரோவரத்தையும் பார்க்கிறோம்.

திக்கை நோக்கித் தெண்டனிடுகிறோம். அதுபோழ்து எங்களை யறியாது கண்ணீரும் கம்பலையும் வந்து விடுகின்றன. "இறைவ, இந்த ஊனக்கண் கொண்டு இனி உனைக் காணப் பெறுவதில்லை ஆயினும், மனத் தகத்தே நீ மாறாது எழுந்தருள வேண்டு" மென்று வேண்டிக்கொண்டு பரவச மடைந்தவர்களாய்ப் பின் வாங்குகிறோம். குர்லா கணவாய் காட்சியை மறைக்கிறது.

சிவார்ப்பணமஸ்து. சுபம் பவது.

---

உ

திருநாவுக்கரசு நாயனர்

அருளிச்செய்த

# திருத்தாண்டகம்

---

## ஸ்ரீ கயிலாயம்

வேற்ருகி விண்ணுகி நின்ருய் போற்றி
மீளாமே யாளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்ருகி யுள்ளே யொளித்தாய் போற்றி
யோவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்ருகி யங்கே யமர்ந்தாய் போற்றி
யாறங்க நால்வேத மானுய் போற்றி
காற்ருகி யெங்குங் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (1)

பிச்சாடல் பேயோ டுகந்தாய் போற்றி
பிறவி யறுக்கும் பிரானே போற்றி
வைச்சாட னன்று மகிழ்ந்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
பொய்ச்சார் புரமூன்று மெய்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
கச்சாக நாக மசைத்தாய் போற்றி (2)
கயிலை மலையானே போற்றி போற்றி.

மருவார் புரமூன்று மெய்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
உருவாகி யென்னைப் படைத்தாய் போற்றி
யுள்ளாவி வாங்கி யொளித்தாய் போற்றி

திருவாகி நின்ற திறமே போற்றி
தேசம் பரவப் படுவாய் போற்றி
கருவாகி யோடு முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (3)

வானத்தார் போற்று மருந்தே போற்றி
வந்தென்றன் சிந்தை புகுந்தாய் போற்றி
ஊனத்தை நீக்கு முடலே போற்றி
யோங்கி யழலாய் நிமிர்ந்தாய் போற்றி
தேனத்தை வார்த்த தெளிவே போற்றி
தேவர்க்குந் தேவனாய் நின்றாய் போற்றி
கானத்தீ யாட லுகந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி. (4)

ஊராகி நின்ற வுலகே போற்றி
யோங்கி யழலாய் நிமிர்ந்தாய் போற்றி
பேராகி யெங்கும் பரந்தாய் போற்றி
பெயராதென் சிந்தை புகுந்தாய் போற்றி
நீராவியான நிழலே போற்றி
நேர்வா ரொருவரையு மில்லாய் போற்றி
காராகி நின்ற முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (5)

சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவ ரறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய்ப் பார்தோறு நின்றாய் போற்றி
பற்றி யுலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (6)

பண்ணி னிசையாகி நின்ருய் போற்றி
பாவிப்பார் பாவ மறுப்பாய் போற்றி
எண்ணு மெழுத்துஞ் சொல்லானுய் போற்றி
யென்சிந்தை நீங்கா விறைவா போற்றி
விண்ணு நிலனுந் தீயானுய் போற்றி
மேலவர்க்கு மேலாகி நின்ருய் போற்றி
கண்ணின் மணியாகி நின்ருய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (7)

இமையா துயிரா திருந்தாய் போற்றி
யென்சிந்தை நீங்கா விறைவா போற்றி
உமைபாக மாகத் தணைத்தாய் போற்றி
யூழி யேழான வொருவா போற்றி
அமையா வருநஞ்ச மார்ந்தாய் போற்றி
யாதி புராணனுய் நின்ருய் போற்றி
கமையாகி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி (8)

மூவாய் பிறவா யிறவாய் போற்றி
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி
தேவாதி தேவர்தொழுந் தேவே போற்றி
சென்றேறி யெங்கும் பரந்தாய் போற்றி
ஆவா வடியேனுக் கெல்லாம் போற்றி
யல்ல லலிய வலந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (9)

நெடிய விசும்பொடு கண்ணே போற்றி
நீள வகல முடையாய் போற்றி
அடியுமுடியு மிகலி போற்றி
யங்கொன் றறியாமை நின்ருய் போற்றி

கொடிய வன்கூற்ற முதைத்தாய் போற்றி
கோயிலா வென்சிந்தை கொண்டாய் போற்றி
கடிய வுருமொடு மின்னே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (10)

உண்ணா துறங்கா திருந்தாய் போற்றி
போதாதே வேத முணர்ந்தாய் போற்றி
எண்ணா விலங்கைக்கோன் றன்னைப் போற்றி
இறை விரலால் வைத்துகந்த வீசா போற்றி
பண்ணா ரிசையின்சொற் கேட்டாய் போற்றி
கண்டேயென் சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணா யுலகுக்கு நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (11)

பொறையுடைய பூமிநீ ரானாய் போற்றி
பூதப் படையாள் புனிதா போற்றி
நிறையுடைய நெஞ்சி னிடையாய் போற்றி
நீங்காதென் னுள்ளத் திருந்தாய் போற்றி
மறையுடைய வேதம் விரித்தாய் போற்றி
வானோர் வணங்கப் படுவாய் போற்றி
கறையுடைய கண்ட முடையாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (12)

முன்பாகி நின்ற முதலே போற்றி
மூவாத மேனிமுக் கண்ணா போற்றி
அன்பாகி நின்றார்க் கணியாய் போற்றி
யாறேறு சென்னிச் சடையாய் போற்றி
என்பாக எங்கு மணிந்தாய் போற்றி
யென்சிந்தை நீங்கா விறைவா போற்றி
கண்பாவி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (13)

மாலை யெழுந்த மதியே போற்றி
மன்னியென் சிந்தை யிருந்தாய் போற்றி
மேலை வினைக ளறுப்பாய் போற்றி
மேலாடு திங்கள் முடியாய் போற்றி
ஆலைக் கரும்பின் றெளிவே போற்றி
யடியார்கட் காரமுத மானாய் போற்றி
காலை முளைத்த கதிரே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (14)

உடலின் வினைக ளறுப்பாய் போற்றி
யொள்ளெரி வீசும் பிரானே போற்றி
படருஞ் சடைமேல் மதியாய் போற்றி
பல்கணக் கூத்தப் பிரானே போற்றி
சுடரிற் றிகழ்கின்ற சோதி போற்றி
தோன்றியென் னுள்ளத் திருந்தாய் போற்றி
கடலிலொளியாய முத்தே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (15

மைசேர்ந்த கண்ட முடையாய் போற்றி
மாலுக்கு மோராழி யீந்தாய் போற்றி
பொய்சேர்ந்த சிந்தை புகாதாய் போற்றி
போகாதென் னுள்ளத் திருந்தாய் போற்றி
மெய்சேரப் பால்வெண்ணீ றாடீ போற்றி
மிக்கார்க ளேத்தும் விளக்கே போற்றி
கைசே ரனலேந்தி யாடீ போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (16)

ஆறேறு சென்னி முடியாய் போற்றி
யடியார்கட் காரமுதாய் நின்றாய் போற்றி
நீறேறு மேனி யுடையாய் போற்றி
நீங்காதென் னுள்ளத் திருந்தாய் போற்றி

கூறேறு மங்கை மழுவா போற்றி
    கொள்ளுங் கிழமையே மூனாய் போற்றி
காறேறு கண்ட மிடற்றாய் போற்றி
    கயிலை மலையானே போற்றி போற்றி. (17)

அண்டமே மூன்று கடந்தாய் போற்றி
    யாதி புராணனாய் நின்றாய் போற்றி
பண்டை வினைக ளறுப்பாய் போற்றி
    பாரோர் விண்ணேத்தப் படுவாய் போற்றி
தொண்டர் பரவு மிடற்றாய் போற்றி
    தொழினேக்கி யாளுஞ் சுடரே போற்றி
கண்டங் கறுக்கவும் வல்லாய் போற்றி
    கயிலை மலையானே போற்றி போற்றி. (18)

பெருகி யலைகின்ற வாறே போற்றி
    பேரா நோய்பேர விடுப்பாய் போற்றி
உருகி நினைவார்தம் முள்ளாய் போற்றி
    வூனம் பிவிர்க்கும் பிரானே போற்றி
அருகி மிளிர்கின்ற பொன்னே போற்றி
    யாரு மிகழப் படாதாய் போற்றி
கருகிப் பொழிந்தோடு நீரே போற்றி
    கயிலை மலையானே போற்றி போற்றி (19)

செய்ய மலர்மேலான் கண்ணன் போற்றி
    தேடியுணராமை நின்றாய் போற்றி
பொய்யா நஞ்சுண்ட பொறையே போற்றி
    பொருளாக வென்னையாட் கொண்டாய் போற்றி
மெய்யாக வானஞ் சுகந்தாய் போற்றி
    மிக்கார்க ளேத்துங் குணத்தாய் போற்றி
கையானை மெய்த்தோ லுரித்தாய் போற்றி
    கயிலை மலையானே போற்றி போற்றி (20)

மேல்வைத்த வானோர் பெருமான் போற்றி
மேலாடு புரமூன்று மெய்தாய் போற்றி
சீலத்தான் றென்னிலங்கை மன்னன் போற்றி
சிலையெடுக்க வாயலற வைத்தாய் போற்றி
கோலத்தாற் குறைவில்லான் றன்னை யன்று
கொடிதாகக் காய்ந்த குழகா போற்றி
காலத்தாற் காலனையும் காய்ந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (21)

பாட்டான நல்ல தொடையாய் போற்றி
பரிசை யறியாமை நின்றாய் போற்றி
சூட்டான திங்கள் முடியாய் போற்றி
தூமாலை மத்த மணிந்தாய் போற்றி
ஆட்டான தஞ்சு மமர்ந்தாய் போற்றி
யடங்கார் புரமெரிய நக்காய் போற்றி
காட்டானை மெய்த்தோ லுரித்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (22)

அதிரா வினைக ளறுப்பாய் போற்றி
யால நிழற்கீ ழமர்ந்தாய் போற்றி
சதுரா சதுரக் குழையாய் போற்றி
சாம்பர் மெய்பூசுந் தலைவா போற்றி
எதிரா வுலக மமைப்பாய் போற்றி
யென்று மீளாவருள் செய்வாய் போற்றி
கதிரார் கதிருக்கோர் கண்ணே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (23)

செய்யாய் கரியாய் வெளியாய் போற்றி
செல்லாத செல்வ முடையாய் போற்றி
ஐயாய் பெரியாய் சிறியாய் போற்றி
யாகாய வண்ண முடையாய் போற்றி

வெய்யாய் தணியா யணிவாய் போற்றி
வேளாத வேள்வி யுடையாய் போற்றி
கையார் தழலார் விடங்கா போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி (24)

ஆட்சி யுலகை யுடையாய் போற்றி
யடியார்க் கமுதெலா மீவாய் போற்றி
சூட்சி சிறிது மிலாதாய் போற்றி
சூழ்ந்த கடனஞ்ச முண்டாய் போற்றி
மாட்சி பெரிது முடையாய் போற்றி
மன்னியென் சிந்தை மகிழ்ந்தாய் போற்றி
காட்சி பெரிது மரியாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி (25)

முன்னியா நின்ற முதல்வா போற்றி
மூவாத மேனி உடையாய் போற்றி
என்னியா யெந்தை பிரானே போற்றி
யேழி னிசையே யுகப்பாய் போற்றி
மன்னிய மங்கை மணாளா போற்றி
மந்திரமுந் தந்திர மானாய் போற்றி
கன்னியார் கங்கை தலைவா போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (26)

உரியா யுலகினுக் கெல்லாம் போற்றி
யுணர்வென்னு மூர்வ துடையாய்ப் போற்றி
எரியாய் தெய்வச் சுடரே போற்றி
யேகமா முண்டி யுடையாய் போற்றி
அரியா யமரர்கட் கெல்லாம் போற்றி
யறிவே யடக்க முடையாய் போற்றி
கரியானுக் காழியன் றீந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (27)

எண்மேலு மெண்ண முடையாய் போற்றி
யேறரிய வேறுங் குணத்தாய் போற்றி
பண்மேலே பாவித் திருந்தாய் போற்றி
பண்ணொடி யாழ்வீணை பயிற்ருய் போற்றி
விண்மேலு மேலு நிமிர்ந்தாய போற்றி
மேலார்கண் மேலார்கண் மேலாய் போற்றி
கண்மேலுங் கண்ணொன் றுடையாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி (28)

முடியார் சடையின் மதியாய் போற்றி
முழுநீறு சண்ணித்த மூர்த்தி போற்றி
துடியார் ரிடையுமையாள் பங்கா போற்றி
சோதித்தார் காணுமை நின்ருய் போற்றி
அடியா ரடிமை யறிவாய் போற்றி
யமரர் பதியாள வைத்தாய் போற்றி
கடியார் புரமூன்று மெய்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (29)

போற்றிசைத்துன் னடிபரவ நின்ருய் போற்றி
புண்ணியனே நண்ண லரியாய் போற்றி
ஏற்றிசைக்கும் வான்மே லிருந்தாய் போற்றி
யெண்ணு யிரநூறு பெயராய் போற்றி
நாற்றிசைக்கும் விளக்காய் நாதா போற்றி
நான்முகற்கு மாற்கு மரியாய் போற்றி
காற்றிசைக்குந் திசைக்கெல்லாம் வித்தே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி போற்றி.

முற்றிற்று

---

## கைவசமுள்ள இதர சில புத்தகங்கள்

| | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் மொழியமுதம் (புதிய பதிப்பு) | ... | 6 | 8 | 0 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள் (9-ம் பதிப்பு) | ... | 4 | 0 | 0 |
| திருவருள் மொழி | ... | 3 | 8 | 0 |
| விவேகாநந்தர் சம்பாஷணைகள் | ... | 3 | 8 | 0 |
| ஸ்ரீமத் பகவத் கீதை | ... | 3 | 8 | 0 |
| இந்தியப் பிரசங்கங்கள் | ... | 3 | 4 | 0 |
| பஜனாவளி | ... | 3 | 0 | 0 |
| இந்துமத சாரம் | ... | 2 | 4 | 0 |
| ராஜயோகம் | ... | 2 | 0 | 0 |
| ஞானோபதேசம் | ... | 1 | 12 | 0 |
| துர்க்கா சரண நாகர் | ... | 1 | 8 | 0 |
| ஸ்ரீ விவேகாநந்த சரித்திரம் | ... | 1 | 8 | 0 |
| (பாராயண) கீதை | ... | 1 | 4 | 0 |
| ஸ்ரீ சாரதா தேவி சரிதம் | ... | 1 | 4 | 0 |
| கருமயோகம் | ... | 1 | 0 | 0 |
| நமது தாய் நாடு | ... | 1 | 0 | 0 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரித்திரம் | ... | 0 | 12 | 0 |
| உப கதைகள் | ... | 0 | 12 | 0 |
| பக்தியோகம் | ... | 0 | 12 | 0 |
| கல்வி | ... | 0 | 12 | 0 |
| தற்கால இந்தியா | ... | 0 | 10 | 0 |
| பக்தி மார்க்கம் | ... | 0 | 8 | 0 |
| குருதேவர் வாக்கியம் | ... | 0 | 8 | 0 |
| எனது குருநாதர் | ... | 0 | 6 | 0 |
| அமெரிக்கா பிரசங்கம் | ... | 0 | 6 | 0 |
| எனது போர் முறை | ... | 0 | 6 | 0 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஞான முரசு பாக்கட் | சைஸ் | 0 | 6 | 0 |
| ஸ்ரீ விவேகாநந்தரின் வீர முரசு | | 0 | 6 | 0 |
| ஸ்ரீ சாரதா தேவியின் அன்பு முரசு | ,, | 0 | 6 | 0 |
| எல்லாவற்றிலும் இறைவனைக் காணல் | ,, | 0 | 5 | 0 |
| நடராஜ வடிவம் | ,, | 0 | 5 | 0 |
| நமமவர் நாட்டு ஞானவாழ்க்கை | ,, | 0 | 4 | 0 |
| ஆறுதல் மொழிகள் | ... | 0 | 3 | 0 |

**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**

**மயிலாப்பூர் — சென்னை-4**

---

Thiru Kailayagiri Yathirai Re. 1-2-0